மஞ்சள்

LUX
Yellow

பச்சை

LUX
Green

நீலம்

LUX
Blue

இளஞ்சிவப்பு

LUX
Pink

# கண்டதுண்டோ வண்ணப் புதுமை இதுபோல்!

## தூய, மெல்லிள லக்ஸ் சோப்புக்கு

# வானவில்லின் 4 வித வண்ணங்கள்

## தவிர, நமதருமை வெண்மையும் உண்டு

புதுமையோ புதுமை! வண்ண வண்ணக் கோலமும்
வாகான மேலுறையும் புனைந்து வருகுது லக்ஸ்.
வெண்ணிறமா? உண்டு, உண்டு. நம்மோடு
நேயமுடன் பழகிவிட்ட அதே லக்ஸ்; எந்த
வண்ணமும் நமக்கே சொந்த வண்ணம்;
எழிலோங்குதல் திண்ணம் திண்ணம்!

**'சொக்குமெழில் வண்ணங்களிடையே சுயம்வர சுதந்தரம்!'**

என்கிறார் எம். என். ராஜம்




LTS. 82-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# கல்கி பொருளடக்கம்

சார்வரி, பங்குனி 27 ❋ ஏப்ரல் 9, 1961



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம்
கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப்— பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 36

# விசித்திர ஏற்பாடு

இந்திய சர்க்காரின் தற்போதைய ராணுவப் பாதுகாப்பு முறை உலகிலேயே கண்டும் கேட்டுமிராத அதிசயமா யிருக்கிறது.

சீனாவின் அட்டூழியங்களைத் தடுக்க, ருஷ்யர்களிடமிருந்து ராணுவ விமானங்கள் வாங்கியதோடல்லாமல், ருஷ்ய விமானிகளை வரவழைத்திருக்கிறார்கள். இன்று இந்தியாவின் எந்த எல்லையானது ஆபத்துக்கு உள்ளாகி யிருக்கிறதோ, அந்த இடத்திலேயே, அவர்களைக் கொண்டு அவ்விமானங்களை இயக்க இந்தியர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்குப் பாரத சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதைச் சொல்லும்போதே வாசகர்கள் இதன் விசித்திரத்தை உணர்ந்து அதிசயிப்பார்கள்.

இதைப் பற்றித் தில்லி ராஜ்ய சபையில் சில அங்கத்தினர்கள் பலத்த ஆட்சேபம் எழுப்பியபோது பிரதமர் அளித்த பதில் சற்றும் திருப்திகரமாக இல்லை. விஷயங்களை முழுதும் ஒப்புக்கொண்டாராயினும், வட எல்லையைப்பற்றிய ராணுவ ரகசியங்கள் பந்தோபஸ்தாக வைக்கப்பட்டுள்ளன என்று பாரதப் பிரதமர் பதில் சொல்லி யிருக்கிறார்.

கம்யூனிஸ்ட்டுகள் எத்தகைய ரகசியங்களையும் எளிதில் கண்டுபிடிக்கக் கூடிய சாமர்த்தியம் கொண்டவர்கள் என்பது உலகறிந்த விஷயம். பல சமயங்களில், இந்திய மந்திரிகளே இந்திய நாட்டைப் பற்றிய செய்திகளைச் சீனாவிலுள்ள செய்தி ஸ்தாபனம் மூலம் அறிகிறார்கள். இப்படி, யாருக்கும் தெரியாது என்று இருக்கும் ரகசியங்கள் எப்படியோ வெளியேறி விடுகின்றன. இந்த நிலையில் ருஷ்ய ராணுவ விமானிகளை எந்த இடம் ஆபத்துக்கு உள்ளாகி யிருக்கிறதோ, எவ்விடத்தில் ராணுவ பந்தோபஸ்து செய்யப் பட்டிருக்கிறதோ, அந்த இடத்திலேயே விமானங்களைச் செலுத்த விடுவது போன்ற பேதைமை வேறு உண்டா?

நம்முடைய விமானிகளைச் சீடர்களாக்கி, ருஷ்ய விமானிகளை, அதாவது முற்றிய கம்யூனிஸ்ட் விமானிகளை அந்தச் சீடர்களுக்கு வாத்தியார்களாகப் பதவி கொடுத்து, நம்முடைய குறைகளை அவர்கள் நன்றாகக் கண்டு கொள்ள ஏற்பாடு செய்வதைவிட, வேறு என்ன ரகசியம் நம்முடைய எதிரிகளுக்குக் கொடுத்து விட முடியும்?

ராணுவத்திலிருப்பவர்களுக்கு, நமது ராணுவப் பாதுகாப்பு ஏற்பாட்டைவிட இட அமைப்பு பற்றிய ஞானம்தான் முக்கியம். இந்தியப் பகுதியிலிருந்து வட எல்லைக்கு ஏகும் பகுதிகளும், மலைகளும், கணவாய்களும் எப்படி யிருக்கின்றன என்பதை ருஷ்ய விமானிகள் நன்கு தெரிந்து கொள்ளவும், நம்முடைய வட எல்லையைப் பார்த்துவிட்டுப் போகவும், நம் விமானிகளின் மாணவ நிலையை அறியவும் இந்திய சர்க்காரே மனமுவந்து அனுமதியளித்தாற் போலிருக்கிறது.

அமெரிக்க விமானி பவர்ஸ் வான மண்டலத்தில் மிகமிக உயரமான இடத்தில் பறந்து, ருஷ்ய மாநிலத்தைப் புகைப்படம் எடுத்துக் கொண்டு போக முயன்றார். அது பெரிய பாதகச்செயல் என்று ருஷ்யா ஆட்சேபித்து, அவரைச் சிறைப்படுத்தி வைத்திருக்கிறது.

இங்கு, இந்தியாவில் ருஷ்ய விமானிகளுக்கு வெற்றிலைபாக்கு தாம்பூலம் வைத்து அழைத்து, நமது வட எல்லையை நன்கு ஆராய்ந்து பார்த்துவிட்டுப் போக நமது சர்க்காரே அனுமதித்திருக்கிறார்கள்! இதைப்போன்ற அறிவீனமான செயல் உண்டா? போதாததற்கு ருஷ்யவிமானங்களையே விலை கொடுத்து வாங்கிக் கொள்கிறோம். அந்த விமானங்

## சாமர்த்தியத் திட்டம்!




களுடைய ரகசியங்கள், விலை கொடுத்து வாங்கிய நம்மைக் காட்டிலும் தயாரித்து நமக்கு விற்று விட்ட அவர்களுக்கு அதிகமாகத் தெரியும்.

'கம்யூனிஸ்ட் சீனுதானே நமக்கு விரோதி; கம்யூனிஸ்ட் ருஷ்யா நமக்குச் சிநேகம் அல்லவா?' என்று சிலர் கேட்கலாம்.

கம்யூனிஸ்ட் நாடுகளில் ஒரு நாடு சிநேகம், ஒரு நாடு விரோதம் என்று உண்டா?

உலகில் எந்தக் கோணத்திலிருந்தாலும் கம்யூனிஸ்ட்டுகள் ஓர் இனம்! அவர்களுக்குள் வேற்றுமை கிடையாது. அவர்களுக்குள் இருக்கும் பரஸ்பர நட்பு பயங்கரமான விஷயம்.

சீனு செய்ததைக் கம்யூனிஸ்ட் நாடு ஏதாகிலும் ஆட்சேபித்ததுண்டா? இந்தியக் கம்யூனிஸ்டுகளும் கூட ஆட்சேபிக்கவில்லையே! சமயம் நேர்ந்தால் இந்தியக் கம்யூனிஸ்ட்டுகளே, விரோதிகளுக்கு உளவும் சொல்லித் தருவார்கள். இவையெல்லாம் பிரதமர் ஜவாஹர்லால் நேரு கவனித்தாரில்லை.

நேருஜி எத்தனையோ முறை இந்தியக் கம்யூனிஸ்ட்டுகளைத் தேசபக்தியில்லாதவர்கள், மாஸ்கோ பக்தி, பீகிங் பக்தி கொண்டவர்கள் என்று தூற்றியிருக்கிறுர். ருஷ்ய விமானிகள் மட்டும் சத்தியசந்தர்கள், துரோகம் செய்யமாட்டார்கள் என்று எதிர்பார்க்கலாமா?

மொத்தத்தில் இந்தியப் பாதுகாப்பு விஷயம் மிக மிக ஆபத்தான நிலையிலிருக்கிறது.

இது திருடனையே கூப்பிட்டு வீட்டுக்குக் காவல் இருக்கச் சொல்வதாகும். இதை உணர்ந்து ருஷ்ய விமானிகள் எல்லைப்புறத்தை ஆராயும் வாய்ப்பை அளிக்காமல் அவர்களைத் திருப்பியனுப்பி விடுவார் நேருஜி என்று ஆசைப் படுகிறேம்.

இந்திய—சீன எல்லையில் காப்புத் தொழிலில் செயல்பட விமானங்களையும் ஓட்டக் கற்பிக்கும் விமான ஆசிரியர்களையும் சீன சர்க்காருக்கு நல்ல விரோதிகளான மேற்கு வல்லரசு நாடுகளில் ஏதாவது ஒரு நாட்டிலிருந்து வரவழைத்திருக்கக் கூடாதா? தற்போது நடைபெறும் ஏற்பாட்டுக்கு, திரு கிருஷ்ண மேனன் பொறுப்பாளியா அல்லது பிரதமர் நேரு அவர்கள் பொறுப்பா அல்லது அது இருவரும் சேர்ந்து முடித்த புத்திசாலித்தனமா என்பதை வெளிப்படுத்த ராஜ்ய சபையில் சிலர் கேள்வி கேட்டார்கள். அதற்குப் பிரதமர் பளிச்சென்று பதில் சொல்லாமல் ஏதோ மழுப்பிப் பேசி விசாரணைக்கு இடம் தரவில்லை.

# என்ன சேதி?

## அதையும் செய்வாரா?

மந்திரிகள் சர்க்கார் செலவில் தேர்தல் பிரசாரம் செய்யச் செல்வதைப் பற்றி விவாதம் எழுந்தபோது மந்திரி திரு சி. சுப்பிரமணியம் ராஜாஜியைத் தமக்கு ஆதரவாக மேற்கோள் காட்டியிருக்கிறார்.

ராஜாஜி முதன் மந்திரியாக இருந்த போது இப் பிரச்னை எழுப்பப்பட்டது; அப்போது ராஜாஜி ஒரு குறிப்பு எழுதி வைத்து விட்டுச் சென்றிருக்கிறார். மந்திரிகள், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் போன்றவர்கள் அல்ல; அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள். ஆகவே, அரசாங்க நிகழ்ச்சிகள் மட்டுமல்ல, பல்வேறு அரசியல் கூட்டங்களிலும் கலந்து கொள்ள நேருகிறது. அப்போதுதான் நாட்டில் ஏற்படும் பல்வேறு வளர்ச்சிகளைப் பற்றி அறிய முடியும் என்று எழுதி வைத்திருக்கிறார் என்று திரு சி. சுப்பிரமணியம் சட்டசபையில் கூறியிருக்கிறார்.

மந்திரிகள் சர்க்கார் செலவில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது, எந்த அளவுக்குப் பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேண்டும், எந்த அளவுக்கு அரசியல் பிரசாரம் செய்ய வேண்டும் என்ற ஒழுங்குமுறையை ராஜாஜி தில்லியில் உள்துறை மந்திரியாக இருந்த போது ஏற்படுத்தி வைத்தார். பிரதமர் நேருவிலிருந்து, சாதாரண உதவி மந்திரி வரை கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்கு முறை அதில் இருக்கிறது. திரு சி. சுப்பிரமணியம் தில்லி சர்க்காருக்கு எழுதி அந்த நகலை வரவழைத்துச் சட்டசபை அங்கத்தினர்களுக்கு வாசித்துக் காட்டினால் இன்றைய மந்திரிகளின் நிலை புரிந்து போகும்!

## மந்திரிகளின் பிரயாணச் செலவு

சென்ற வாரம் மந்திரிகளின் பிரயாணச் செலவுகளைப் பற்றிய விவரம் தினப் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. எந்த மந்திரியைப் பற்றி வெளியூர்ச் செய்திகளில் மிகக் குறைவாக வருமோ அந்த மந்திரியின் செலவு மிக அதிகமாக இருக்கிறது. எந்த மந்திரி ஒரு நாளில் ஐம்பது கிராமங்களுக்குப் போனார், ஒரு வாரத்தில் ஐந்நூறு கூட்டங்களில் பேசினார் என்றெல்லாம் செய்திகள் வருமோ அந்த மந்திரியின் செலவு மிகக் குறைவாக இருக்கிறது!

இதைப் பார்க்கும்போது, காங்கிரஸ் கட்சி, ஒரு மந்திரியின் படிச் செலவை மட்டும் ஏற்றுக் கொண்டு, மற்ற மந்திரிகளைச் சர்க்கார் செலவில் பிரயாணம் செய்ய விடுகிறது என்று தோன்றுகிறது.

## தமிழருக்குப் பரிசுகள்

இந்தத் தமிழ் எழுத்தாளர்களுக்கு ரொம்ப நாட்களாகவே பொல்லாதவர்கள் என்ற கியாதி உண்டு. ராமனையும் கண்ணனையும் தமிழர்களாகவே செய்து விட்டவர்களல்லவா அவர்கள்? இந்தப் பொல்லாத தமிழ் மரபின் வழித் தோன்றல் ஒருவர் இன்று நம்மிடையே இருக்கிறார். இவர் நம் இன்றையத் தமிழர்களை, துளிக்கூட உருமாற்றாமல், மேல்நாடுகளின் மீது கூடப் படையெடுக்கச் செய்து விடுகிறார். தமிழர்களின் அன்றாட வாழ்க்கையை ஆழமும், அழகும் பொதிந்த நகைச்சுவை உணர்ச்சியோடு ஆங்கில எழுத்தில் பிரதிபலிக்கச் செய்யும் அந்தப் பொல்லாதவர்தான் ஸ்ரீ ஆர். கே நாராயணன். இவரது எழுத்தை மேல்நாடுகளிலெல்லாம் பெரிதும் ரசிக்கிறார்கள்; மால்குடி மக்களும், சாமியும், அவன் சகாக்களும், சம்பத்தும் ஆங்கில மக்கள் உள்ளங்களைக் கவர்ந்திருக்கிறார்கள் என்றால் பூரிப்பு உண்டாகிறதல்லவா?

பார்க்கப் போனால் எழுத்துலகில் இப்படி நாடென்றும், மொழியென்றும் பிரித்துப் பேசுவதே தப்பு. எனவே எழுத்துத் துறையில் பரிசு வழங்கும் போது சர்க்கார் கூட இப்படியெல்லாம் பாரபட்சம் காட்டுகிறதென்று குறை சொல்வது விசனிக்க வேண்டிய விஷயம். இவ்வாண்டு சாஹித்ய அகாடமியார் ஸ்ரீ ஆர். கே. நாராயணனின் அற்புத சிருஷ்டியாகிய 'வழிகாட்டி' (The Guide) என்ற ஆங்கில நூலுக்குப் பரிசு அளித்துள்ள பின்னரும் குற்றம் சொல்லிக் கொண்டிருப்பது நியாயமே இல்லை. ஒரு தமிழர் பரிசு பெற்றிருக்கிறார் — அதுவும் தமிழ் வாழ்வை உலகுக்கெல்

ஆர். கே. நாராயணனும் நேருஜியும்





டாக்டர் கே. எஸ். கிருஷ்ணனும் நேருஜியும்

லாம் வெளிப்படுத்தியதற்காக—என்றால் அது தமிழகமே பெற்ற பரிசாகும்.

விஞ்ஞானத் துறையில் அரிய பரிசு பெற்றிருக்கும் மற்றொரு தமிழ்ப் பெருமகனுக்கும் நமது மனமார்ந்த பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்தாம் நம்முடைய புகழ் பெற்ற பௌதிக விஞ்ஞானி டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்கள்.

இந்திய நாட்டில் பல விஞ்ஞானக் கழகங்களைத் தோற்றுவித்த டாக்டர் பட்நாகர் அவர்களின் ஞாபகார்த்தமாக ஏற்படுத்தப்பட்ட பரிசுத் திட்டத்தில் முதல்பரிசு தமிழக விஞ்ஞானிக்கு வழங்கப்பட்டதுபெருமைக்குரியவிஷயமாகும்.

## அமைச்சரின் பெருந்தன்மை

சட்டசபையில் ஓர் அங்கத்தினர் கூட்டுறவு சம்பந்தமாகச் சட்டம் செய்வதற்கு முன்பு, சர்க்கார், கூட்டுறவாளர்களைக் கலந்தாலோசிப்பதில்லை என்றார்.

"இவ்வாறு கூறுவது பீனல்கோடு சட்டத்தை இயற்றுவதற்கு முன்பு குற்றவாளிகளைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று கூறுவது போலிருக்கிறது" என்றார் மந்திரி திரு வேங்கடராமன்.

"இந்த உபமானம் சரியானதுதானா என்று மந்திரி தமது நெஞ்சைத் தொட்டுப் பார்த்துச் சொல்லட்டும்" என்று அங்கத்தினர் கேட்டார்.

மந்திரி தமது உபமானத்தில் உள்ள பொருத்தமற்ற தன்மையையும் புண்படுத்தும் நிலையையும் உணர்ந்து, பகிரங்கமாகச் சட்டசபையில் இப்படிப் பேசியதற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டிருக்கிறார் என்று செய்தி வெளியாகியிருக்கிறது.

நாவடக்கமின்றிப் பேசி விடுவது சுலபம். ஆனால் அந்தத் தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கேட்டது திரு வேங்கடராமன் அவர்களின் பெருந்தன்மையைக் காட்டுகிறது. அதற்காக அவரைப் பாராட்டுகிறோம்.

## சேலம்-பெங்களூர் லைன்

டில்லியிலிருந்து தமிழ் மக்களுக்கு, ஒரு நல்ல செய்தி வந்திருக்கிறது. சேலம்-பெங்களூர் இருப்புப் பாதை போடத் திட்டக் கமிஷன் அங்கீகாரம் அளித்து விட்டதாம். இதற்கென்று திட்டக் கமிஷன் 45 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதாகச் செய்தி வந்திருக்கிறது. இது சேலம் ஜில்லாவாசிகளுக்கு ஓர் அரிய வரப்பிரசாதமாகும். இந்த ரயில் பாதை கிட்டியதற்கு, கிருஷ்ணகிரித் தொகுதி மக்கள் சபை அங்கத்தினர் திரு ஸி. ஆர். நரசிம்மன் அவர்களைப் பாராட்ட வேண்டும். டில்லியில் மற்ற மக்கள் சபை அங்கத்தினர்கள், திரு நரசிம்மனைப் பார்க்கும்போதெல்லாம் 'என்ன மிஸ்டர் சேலம்-பெங்களூர் லைன்?' என்று குறிப்பிடும் அளவுக்கு, இக் கோரிக்கையைச் சமயம் வரும்போதெல்லாம் வற்புறுத்தி வந்திருக்கிறார்.

## காங்கிரஸின் புதிய திட்டம்

வகுப்புவாத உணர்ச்சியை ஒடுக்க உறுதியான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்றும் தடுப்புக் காவல் சட்டம் பிரயோகித்து வகுப்புவாத உணர்ச்சியைத் தூண்டி விடுபவர்களைக் கைது செய்யலாமா என்று யோசிப்பதாகவும் புதிதாக உள்நாட்டு இலாக்கா பொறுப்பு ஏற்றுள்ள மந்திரி திரு லால் பகதூர் சாஸ்திரி மக்கள் சபையில் கூறினார். காங்கிரஸ் பார்லிமெண்டரி கட்சிக் கூட்டத்தில் பிரதமர் நேருவும் மேற்கூறிய கருத்துக்கு ஆதரவு தரும் வகையில் பேசினார்.

மேற்படி எண்ணங்கள் உதயமாவதற்குக் காரணம், ஜபல்பூரில் சமீபத்தில் நடந்த வகுப்புக் கலவரமாக இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. பம்பாயில் முஸ்லிம் லீக் அங்கத்தினர்கள் நால்வர் தேர்ந்தெடுக்கப்பட்டதும் காரணமாக இருக்கலாம்.

இவை யெல்லாவற்றையும் விட, வருகிற தேர்தல் முக்கிய காரணமாகும்.

மகாத்மா காந்தி தேசத்திலுள்ள பல்வேறு இனத்தவர்களையும், பல்வேறு மொழி பேசுபவர்களையும் இணைத்தார். கடைசியாக, ஹிந்து முஸ்லிம் வேற்றுமை அதிகமாகிப் படுகொலைகள் நடந்த

# சேதி தெரியுமா? (சாமா)


உணவுப் பண்டங்கள்
என்னை மறந்து விட்டாயே! அப்பா!
???
நாட்டில் உணவுப் பற்றாக்குறை இப்பொழுது இல்லை! என்னைப் பற்றியோ உணவைப் பற்றியோ எவரும் சிந்திப்பதுமில்லை
—பட்டீல்


வகுப்புவாதம்
???


அது காங்கிரஸ் கட்சிப் பணம் அல்ல! சர்க்கார், ஏழைகளிடமிருந்து வசூலித்த வரிப் பணம்
பொதுஜனம்
50 கோடி ரூபாய்


???
கிழவர்கள் திருமணம் தடுக்கப்படுமோ?

போது, தமது உயிரையும் தியாகம் செய்து, ஒற்றுமையை நிலைநாட்டினர். காந்திமகான் உயிர்த்தியாகம் செய்ததும் தேச மக்களின் அறிவில் புத்தொளி பிறந்தது. தங்கள் மடமையை உணர்ந்து, வகுப்புவாத உணர்ச்சியைக் கைவிட்டனர். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுபட்டனர்.

அவர் மறைவுக்குப் பிறகு நடந்த இரு தேர்தல்களிலும், காங்கிரஸ், முதலியார்கள் இருக்கும் ஊரில் முதலியார்கள், கவுண்டர்கள் அதிகமாக உள்ள ஊரில் கவுண்டர்கள் என்று குறுகிய சாதி உணர்ச்சியைக் கடைப்பிடித்து, அபேட்சகர்களை நிறுத்தியது. அந்த அபேட்சகர், காங்கிரஸுக்கு, தேர்விரோதமான செயல்களையே புரிந்திருப்பார் முன்னாளில். எனினும் அந்தத் தொகுதியிலுள்ள பெருவாரியான சாதிக்காரர்களில் முக்கியமானவர் என்று அவரைக் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தியது. காங்கிரஸ் பெயரில் ஒரு கம்பத்தை நிறுத்தினாலும், மக்கள் வோட்டுப் போடுவார்கள் என்று இருந்த நிலையை மாற்றி, சுதந்திரத்துக்குப் பிறகு மெள்ளமெள்ளக் காங்கிரஸை வகுப்புவாதக் கட்சியாக்கிவிட்டார்கள். இந்நிலை தமிழ்நாட்டில் மட்டிலுமில்லை; தேசமெங்கிலுமேதான்! கேரளத்தில் முஸ்லீம் லீகுக்கு மீண்டும் அந்தஸ்தையும் செல்வாக்கையும் கொடுத்தார்கள். முஸ்லீம் லீக் இன்று சிறுபான்மையாரின் நலன்களைப் பாதுகாக்கும் கட்சியாகத்தான் இருந்து வருகிறது.

ஆனால் இந்த உறுதி நடவடிக்கைப் பூச்சாண்டியைக் காண்பித்து, அதாவது வகுப்பு வாதத்தைத் தூண்டி விடுபவர்களை ஒடுக்கப் போவதாகச் சொல்லி, காங்கிரஸ் லாபமடையப் பார்க்கிறது. செல்வாக்குப் பெற்றவர்கள் காங்கிரஸுக்கு எதிரான பல கட்சிகளில் இருக்கிறார்கள். ஓர் ஊரில் ஒரு பெரியதனக்காரர், காங்கிரஸுக்கு எதிராக இருந்தால் அவரை வகுப்புவாதத்தைத் தூண்டி விடுபவர் என்று சொல்லி, தேர்தல் முடியும் வரையில் ஜெயிலில் அடைத்து வைக்கலாம் என்ற எண்ணமாக இருக்கலாம். தான் அனுபவித்து வரும் வசதி எதிர்க் கட்சிகளுக்கு இல்லாமற் செய்ய வேண்டும் என்று பாடுபடுகிறது காங்கிரஸ் சர்க்கார். தேர்தல் நெருங்க நெருங்கச் சிந்தனை எப்படியெல்லாம் குழம்பக் கூடும் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

அவசரச் சாப்பாடு அவர் வேலையைக் கெடுத்திருக்கும்...















ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து நேர்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தளதளக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இதத்தையளித்து சமனமூட்டக்கூடியது. வயிற்றுக் கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது, ஜீரணசக்தியை சரியாக்குகிறது.






ஈனோ அவருக்கு
சீக்கிரத்தில் குணமளித்தது

# ஈனோ
# 'ப்ரூட் ஸால்ட்'

'ஈனோ', 'ப்ரூட் ஸால்ட்', என்ற வார்த்தைகள்
ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகள்
பீச்சம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

## 65

செஞ்சொல் கவிகாள்! உயிர்காத்து
ஆட்செய்ம்மின்;
திருமாலிருஞ்சோலை
வஞ்சக் கள்வன், மாமாயன், மாயக்
கவியாய் வந்து, என்
நெஞ்சும் உயிரும் உள் கலந்து,
நின்றார் அறியாவண்ணம், என்
நெஞ்சும் உயிரும் - அவை உண்டு,
தானே ஆகி, நிறைந்தானே.

கவிஞர்களே! திருமாலிருஞ் சோலை நாதனைப் பாடப் போகும்போது ஜாக்கிரதை. அந்தக் கள்வனை, மாயக் காரனைப் பாட ஆரம்பித்ததும் அவனுடைய கல்யாண குணங்களில் அகப் பட்டுக் கொண்டு உங்களுடைய உயிரை இழந்து விடுவீர்கள். என்னைப் பாடவிக்க அவன் என்னுள் புகுந்து என் நெஞ்சையும் உயிரையும் உண்டு என்னைத் தானேயாக ஆக்கிக்கொண்டு என்னுள் நிறைந்து விட்டான். பாடுபவனும் பாடப்படுகிறவனும் ஒன்றேயாகிப் போனோம். இது ஒரு பெரிய ஆபத்து. நான் படும் பாட்டைக் கண்டு நீங்கள் ஜாக்கிரதையாயிருங்கள். உங்கள் உயிரைக் காத்து அவனைப் பாடி அடிமை செய்யுங்கள் என்கிறார்.

எம்பெருமான் அடியாரை ஆட் கொள்ளும் சிறப்பை இந்த முறையில் வர்ணிக்கிறார்.

மாயக் கவியாய் வந்து—உன்னைக் கொண்டு பாடுவிக்கிறேன் என்று ஒரு மாயக் கவிஞனாக வந்து என்னுள் புகுந்து. நெஞ்சும் உயிரும் உள் கலந்து—'நெஞ்சு' என்பது உடலுக்கு உப லக்ஷணம் - 'உயிர்' என்பது ஆன்மா. என்னுடைய உடலும் ஆத்மாவும் இரண்டும்தானே ஆகி விட்டு என்னை அனுபவிக்கிறான்.

நின்றார் அறியா வண்ணம் – உலகத்தாருக்குத் தெரியாத வண்ணம். கள்ளத்தனமாக. இதற்கு வியாக்கியானக்காருடைய உரை - பிராட்டி, அனந்தாழ்வான், பெரிய திருவடி முதலானோருக்குங்கூடத் தெரியாமல் என்று.

அடியாரை ஆட்கொண்டு அவர்களுடைய உயிரைத் தன் மயமாக்கி விடுவதை ஆனந்தமாக இன்னும் பாடுகிறார்.

தானே ஆகி, நிறைந்து, எல்லா
உலகும் உயிரும் தானே ஆய்,
தானே யான் என்பான் ஆகி,
தன்னைத்தானே துதித்து, எனக்குத்
தேனே, பாலே, கன்னலே, அமுதே,
திருமாலிருஞ்சோலைக்
கோனே ஆகி, நின்றொழிந்தான்–
என்னை முற்றும் உயிர் உண்டே.

'வீடு மின் முற்றவும், வீடு செய்து, உம் உயிர் வீடுடையானிடை வீடு செய்மின்' என்ற பாசுரம் முன் தந்தார். இப்போது ஆழ்வார் உறுதி கூறுவது எம்பெருமான் தானே பக்தனுடைய உயிரைக் கொள்கிறான் என்பதாக.

ஈசுவரனுடைய தன்மை என்ன, அவனுக்கும் உயிருக்கும் பிரபஞ்சத்துக்கும் என்ன சம்பந்தம் என்பதைப் பற்றி ஆழ்வாருடைய கொள்கையை இந்தப் பாசுரத்தில் காணலாம்.

தானே யான் என்பான் ஆகி—நான் என்னும் பொருளும்தானே ஆகி. 'என்னை முற்றும் உயிர் உண்டே' என்பதில் 'என்னை' என்பதை 'என்' என்றே வைத்துக் கொண்டு 'உயிர்' என்பதோடு சேர்த்துக் கொள்ள வேண்டும். இது உருபு மயக்கம் என்று இலக்கணத்தில் சொல்லுவார்கள். அல்லது 'உயிர் உண்டு' என்பது ஒரு வினைத் தொடர்.

இவ்வாறு ஈசனும் நாமும் ஒன்றாவதற்கு வழி ஆராய்ச்சி அல்ல, பக்தி மார்க்கமே.

* * *

எல்லாம் அவன் லீலா விபூதி, அவதாரங்கள் எல்லாம் அவனே, திவ்விய ஸ்தலங்களில் மூர்த்திகளும் அவனே, சகல ஜீவன்களின் இதயத்திலும் கோயில் கொண்டிருக்கிறான் என்று முதலாழ்வார், 'உள்ளுவார் உள்ளத்திலும், வெள்ளத்திலும், வேங்கடத்திலும் உத்தமன் உளன் கண்டாய்'

என்று சொன்னதை ஆழ்வாரும் இந்தப் பாசுரத்தில் பாடுகிறார்:

என் கொல் அம்மான் திரு-அருள்கள்—
உலகும் உயிரும்தானே ஆய்,
நன்கு என் உடலம் கைவிடான் :
ஞாலத்தூடே நடந்து, உழக்கி,
தென் கொள் திசைக்குத் திலதமாய்
நின்ற திருமாலிருஞ்சோலை
நங்கள் குன்றம் கைவிடான்,
நண்ணா அசுரர் நலியவே?

நன்கு என் உடலம் கைவிடான் — சிறிதும் கைவிடாமல் என் உடலைப் பற்றி நிற்கிறான்.

என் இதயத்தில் கோயில் கொண்டிருப்பதும், திருமாலிருஞ் சோலையில் வீற்றிருப்பதும், வைகுந்தத்திலிருப்பதும், அங்கிருந்து கீழ் இறங்கி மக்களைக் காக்க அவதரிப்பதும் ஒன்றுக்கொன்று முரண் இல்லை, ஒன்றும் குறையாமல் எல்லாம் செய்கிறான் எம்பெருமான். எதையும் கைவிடான் என்பது 'நன்கு' என்ற சொல்லின் பொருள்.

எல்லா ஜீவன்களிலும் அந்தராத்மாவாக இருக்கும் நிலையை வைத்துக் கொண்டு கோயிலில் அர்ச்சாவதார மூர்த்தியாக இருப்பதின் வைபவத்தை மறத்தல் குற்றமாகும். அதற்காகக் கோயில்களைக் கூடக் கூடச் சேர்த்துப் பாசுரங்கள் உபதேசிக்கின்றன. அர்ச்சனையில் பக்தியும் தியானமும் குறையாமல் இருக்கவேண்டும். இல்லாவிடில் உள்ளத்தில் ஈசன் இருப்பது வெறும் அகங்காரமாக முடியும்.

நண்ணா அசுரர் நலிவு எய்த, நல்ல
அமரர் பொலிவு எய்த,
எண்ணாதனகள் எண்ணும் நல்
முனிவர் இன்பம் தலைசிறப்ப,
பண் ஆர் பாடல் இன் கவிகள்
யானாய்த் தன்னைத்தான் பாடி,
தென்னா என்னும்—என் அம்மான்,
திருமாலிருஞ் சோலையானே.

அமரர்—பக்தியோடு வழிபடும் அடியார்கள். அசுரர்—பகவத் பக்தி இல்லாதவர். முனிவர் - முமுக்ஷுக்கள், ஞான மார்க்கத்துக்குத் தகுதி யுள்ளவர்கள், துறவிகள், பற்றற்ற தீரர்கள்.

எம்பெருமானைப் பாடும் பாடல்கள் எல்லாம் அவனுடைய அருளின் வடிவமே. ஆனபடியால் "பண் ஆர் பாடல் இன் கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடி" என்கிறார். அவன் நேரில் உபதேசித்தது பகவத் கீதை. ஆழ்வாரைக் கொண்டு 'தன்னைத்தான் பாடியது' திருவாய்மொழி.

திருமாலிருஞ் சோலை ஆழ்வார் காலத்தில் இருந்த செழிப்பு இப்போது இல்லை. அந்தக் காலத்தில் சோலையில் வண்டுகளும் காற்றும் எப்போதும் "தென்னா தெனா" என்று சப்தித்துக் கொண்டேயிருக்கும்.

திருவேங்கட மலையும் அப்படியே இருந்தது. "தென்னா தெனா என்று வண்டு முரல் திருவேங்கடத்து என் ஆனை" என்று 'சொன்னால் விரோதம்' என்கிற பாசுரத்திலும் பாடினார்.

* * *

அருளே ஈ, என் அம்மானே
என்னும் முக்கண்-அம்மானும்,
தெருள் கொள் பிரமன்—அம்மானும்,
தேவர்-கோனும், தேவரும்,
இருள்கள் கடியும் முனிவரும்,
ஏத்தும் அம்மான் திருமலை—
மருள்கள் கடியும் மணிமலை-
திருமாலிருஞ்சோலை மலையே.

எம்பெருமான் கோயில் கொண்டிருக்கும் மலையைக் கொண்டாடுகிறார்.

"என் அம்மானே அருளாய்" என்பான் மூர்கண் அம்மானும், ஞானமயமான பிரமனும், இந்திரனும், தேவர்களும், அறியாமையை நீக்கிக் கொண்டு ஸ்மிருதிகள் உண்டாக்கிய ரிஷிகளும் எல்லாரும் ஏத்தும் சர்வேசுவரன் கோயில் கொண்ட மலையே என்று திருமாலிருஞ் சோலை மலையைக் கொண்டாடுகிறார். அந்த மலையின் தரிசனமே உள்ளத்தைச் சுத்தப்படுத்தி அஞ்ஞானத்தை நீக்கும் என்கிறார். பக்தியானது இதையெல்லாம் செய்யும்.

இவ்வாறு எம்பெருமான் கோயில் கொண்டிருக்கும் இடங்களையெல்லாம் சேர்ந்து ஒரு பாசுரத்தில் சொல்லி எம்பெருமான் அவை ஒன்றொன்றிலும் நிரந்தரமாக இருக்கிறான் என்று உபதேசிக்கும் சிறந்த பாசுரம் :

திருமாலிருஞ் சோலை மலையே,
திருப்பாற் கடலே, என் தலையே,
திருமால் வைகுந்தமே, தண் திரு
வேங்கடமே, எனது உடலே,
அருமா மாயத்து எனது உயிரே,
மனமே, வாக்கே, கருமமே,
ஒருமா நொடியும் பிரியான் – என்
ஊழி முதல்வன் ஒருவனே.

திருமாலிருஞ் சோலையும் திருவேங்கடமும் எல்லா திவ்ய தேசங்களுக்கும் உபலக்ஷணம்.

தேவாலயங்கள், திருப்பாற் கடல், வைகுந்தம், என் உடல், என் ஆத்மா, என் மனம், என் வாக்கு, என் கருமங்கள், எல்லாவற்றிலும் ஒக்க நிரந்தரமாய் சர்வேசுவரன் பிரியாமல் நிற்கிறான்.

'ஒரு மா நொடி' என்பதில் 'மா' மிகச் சிறிய அளவு.

'அருமா மாயத்து' என்பதில் 'மா' என்பது மிகப் பெரிய அளவு

அருமா மாயத்து எனது உயிர்— கடத்தற்கு அரிய மாயத்தில் சிக்கி அலையும் என் உயிர்.

'ஒரு நொடியும் பிரியான்' என்பதில் இப்படிக் கூடியிருப்பதில் சர்வேசுவரனுடைய ஆசையைக் காட்டுகிறது. நம்முடைய பக்திக்குச் சரி எடை எம்பெருமானுடைய காதலும். பாலகிருஷ்ணன் வெண்ணெயைத் தேடி உண்டது இந்த உண்மையை விளக்கவே.

## வட்டமேஜை



### தொல்லையோ தொல்லை!

நெய்வேலியில் திட்டமிட்டபடி வேலை நடந்து வருவதாகச் சமீபத்தில் மந்திரி திரு சுப்பிரமணியம் அறிவித்துள்ளார். வேலை நடந்தால் மாத்திரம் போதுமா? அங்கிருக்கும் பொதுமக்கள் சௌகரியம் சரியான முறையில் கவனிக்கப்படவில்லை. ஏறக்குறைய நாலாயிரம் மக்கள் வாழும் புதுக் காலனியில் அன்றாடத் தேவைக்கான பொருள்களை (காய்கறி, மளிகைச் சாமான்கள்) வாங்கக் கார்ப்பரேஷனால் நிறுவப்பட்டுள்ள ஒரே கூட்டுறவு விற்பனைச் சங்கம்தான் இருக்கிறது. அதை விட்டால் ஏழு மைல்கள் போக வேண்டும். அதற்காவது போதிய வசதி உண்டா என்றால் அதுதான் கிடையாது. ஒரு கார்ப்பரேஷனால் எவ்வளவு மட்டமான அளவுக்குப் பொதுமக்களுக்கு அசௌகரியமான முறையில் ஒரு தொழிலை ஏற்று நடத்த முடியும் என்பதற்கு உதாரணமே நெய்வேலி பஸ் ஸர்வீஸ்தான். கூட்டுறவுச் சங்கத்தின் ஆதரவில் நடக்கும் 'ஆட்டோ ரிக்ஷா' வின் நிலையோ சொல்லத்தரமன்று. பஸ்ஸுக்கும், ஆட்டோரிக்ஷாவுக்கும் காத்திருக்கும் நேரத்தில் கடவுளே கூடப் பிரத்தியட்சமாகி விடுவார்! ஏறக்குறைய ஒவ்வொன்றும் அரை மைல் நீளத்தைக் கொண்ட பல 'பிளாக்கு' களுக்குமாக உள்ள ஒரே ஆஸ்பத்திரியில் சிகிச்சைபெற நமது அரிய பஸ்ஸையோ, பெரிய ஆட்டோவையோ பிடித்துப் போவதற்குள் எமனிடமே சென்று, இந்தப் பூலோக சொர்க்கத்தில் இன்னும் கொஞ்ச நாட்களுக்கு இருக்க அனுமதி பெற்று வந்துவிடலாம்! ஏனென்றால் அதற்குள் ஆஸ்பத்திரி நேரம் முடிந்துவிடும். அதற்குமேல் டாக்டரைச் சந்திப்பதென்பது குதிரைக் கொம்புதான். இன்னும் இங்குள்ள குறைகளைச் சொல்லிக் கொண்டே போவதென்றால் அதற்கு ஒரு முடிவே கிடையாது.

இனியாவது கார்ப்பரேஷனின் மிகச் சிறிய சாதனைகளான போக்குவரத்துச் சாதனங்களை அதிகப்படுத்தல், தனியார் கடைகளை அனுமதித்தல் போன்ற நல்ல காரியங்களை நடைமுறைக்குக் கொண்டுவந்து மக்களின் பெரிய குறைகளை நிவர்த்திக்க வழி வகுப்பார்களா?

நெய்வேலி
16-3-61 — வஸுந்தரா

### பள்ளிச் சீ(?)ரமைப்பு

திருவையாறு வட்டத்தில் பள்ளிச் சீரமைப்பு மகாநாடு ஏப்ரல் இறுதிக்குள் நடக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இது மதிய உணவு, சீருடை வழங்கல், பள்ளிக்கு வேண்டிய தளவாடச் சாமான் சேகரித்தல் என்ற முப்பெரும் காரியங்களை மையமாகக் கொண்டு செயல்படத் திட்டமிடப்பட்டுள்ளது. இதற்காக ஒவ்வொரு பாடசாலையும் இன்ன இன்ன அளவில் செயல்பட வேண்டும் என்றும் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக, பத்து ஆசிரியர் பணிபுரியும் ஒரு பாடசாலை குறைந்த அளவு ரூபாய் ஐயாயிரம் வரையில் நன்கொடை மூலமாகவோ அன்றிப் பொருள் மூலமாகவோ, கட்டாயமாக வாங்க வேண்டும் என்றும் டெபுடி இன்ஸ்பெக்டர் அவர்கள் உத்தரவிட்டுள்ளார். மேலே கண்ட தொகை பொது மக்களிட

## சுதந்திர நிதி

கல்கியில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள்

(19—3—61 முதல் 1—4—61 வரையில்)

| | |
|---|---|
| டெல்லி அன்பர் | ... 5 00 |
| எஸ். எம். வெங்கடராமன் | ... 10 00 |
| வி. என். ராகவன் | ... 2 00 |
| நரசிம்மன், புருஷோத்தமன் | ... 2 00 |
| சிதம்பரம் அன்பர் | ... 50 25 |
| ஏ. சௌந்தரராஜன் | ... 5 00 |
| Z. R. இரானி | ... 45 50 |
| எம். ஆர். கணபதி தீக்ஷிதர் | ... 1 00 |
| ஜே. பி. நாதன் | ... 2 00 |
| லக்ஷ்மியம்மாள் | ... 1 00 |
| எம். கே. நாகராஜன் | ... 3 00 |
| கே. மயில்சாமி கவுண்டர் | ... 1 00 |
| கே. எஸ். என். ப. ஸிங் | ... 1 00 |
| ஜே. கைலாசம் | ... 2 00 |
| வி. பார்வதி | ... 5 00 |
| எம். என். சதாசிவம் | 1000 00 |
| ஆர். கே. ரத்தினராஜ் | ... 2 00 |
| தர்மம் தழைத்து நிற்க விரும்பும் ஓர் உண்மை ஜனநாயகவாதி | ... 10 00 |
| சீதாலக்ஷ்மி | ... 2 00 |
| புரொபஸர் ஏ. சரஸ்வதி லண்டன் | ... 50 00 |
| ஸ்ரீமதி பத்மநாபன் | ... 1 00 |
| விஜயலட்சுமி வரதன் | ... 1 00 |
| சரஸ்வதி லக்ஷ்மணன் | ... 25 00 |
| கே. வி. திருப்பாலப்பா | ... 2 00 |
| 10-1-61 முதல் 18-3-61 முடிய | 2053 27 |
| மொத்த வரவு | 3282 02 |

மிருந்து வசூலிக்க வேண்டுமென்றும் கட்டாயப் படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு செய்யத் தவறிய பாடசாலையின்மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் பயமுறுத்தி வருகின்றனர். ஒவ்வொரு தினமும் மேற்படி மகாநாட்டுக்குப் பொருள் சேகரிப்பதற்காகக் கடைசி பீரியடை விட்டுவிடலாம் என்றும் உத்தரவிட்டுள்ளனர். பெரும்பாலான பள்ளி ஆசிரியர்கள் பள்ளிக்குச் சென்று கையொப்பமிட்டுவிட்டு உடனே வசூலுக்குக் கிளம்பி விடுகின்றனர். இதனால் பாடசாலையில் பாடபோதனை சீர்கேடடைந்து வருகிறது.

திருவையாறு
23-3-61
ஓர் ஏழை ஆசிரியன்

## அக்கரைச் சீமை

சோமு அவர்கள் சட்டையும் வேஷ்டியும் எடுத்துப் போக மறந்து விட்டார்கள் என்று எண்ணுகிறேன். மற்றப்படி பிரயாணக் கட்டுரையைத் தொடர்கதைபோல மிக சுவாரஸ்யமாக எழுதுகிறார்கள். நானும் நண்பர்களும் படித்து அநுபவிக்கிறோம். மிக மிக நல்லமுறையில் கட்டுரையில், உணர்ச்சியும் சேர்ந்திருக்கிறது.

நெல்லை
26—3—61
விட்டலபுரம் வேங்கடாச்சாரி

## துயரம் தீருமா?

கல்வி அமைச்சரும் கல்வி இலாக்காவினரும் ஆசிரியர்களின் துயர்களைத் தீர்த்து வருகின்றோம் என்று மார்தட்டிப் பேசி வருகின்றனர். நடைமுறையில் கல்வி இலாக்கா எத்தனை அழகாகச் செயல்பட்டு வருகிறதென்பதற்கு இதோ ஓர் உதாரணம். மதுரை டவுன் தெற்கு மாசி வீதியில் விவேகானந்தர் உயர்தர ஆரம்பப் பாடசாலையில் சுமார் பதினெட்டு ஆசிரிய, ஆசிரியைகள் 1959 ம் வருடம் ஜூன் மாதல் முதல் 1960ம் வருடம் ஜூன் மாதம்வரை வேலை பார்த்து வந்தோம். ஆனால் எங்களுக்கு இதுவரையில் ஒரு வருடச் சம்பளம் வந்து சேர்ந்தபாடில்லை. கல்வி இலாக்காவின் சகல பிரிவுகளுக்கும் மனுச் செய்து கொண்டோம். இதுவரையில எந்தவிதமான பதிலும் இல்லை.

மதுரை
24-3-61
மீனாட்சிசுந்தரம்

## குறளுக்கோர் இலக்கியம்

விமான வீரர் திரு கணேசன் அவர்களின் வானளாவிய தியாகத்தைப் பற்றி நல்ல முறையில் சென்ற இதழில் பாராட்டியுள்ளீர்கள். தாங்கள் குறிப்பிட்ட ஆங்கிலக் கவிஞனின் இலக்கணத்துக்கு மட்டும் திரு கணேசன் இலக்கியமாகத் திகழவில்லை; வள்ளுவரும இத்தகைய செயலைப் பாராட்டியுள்ளார்.

"ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து"

வானளாவிய தியாகத்துக்காகத் தன் உயிரையே 'விற்று'விட்ட திரு கணேசன் உலகினின்றும் மறைந்தார். நம் நெஞ்சகங்களில் நிறைந்தார். வாழ்க அவர் திருப்பெயர்!

சென்னை
30-3-61
மு. இராமதாசு பி. ஏ.

## மணிபல்லவம்

வளமும் செழிப்பும் நிறைந்து விளங்கும் நல்லதொரு நாட்டின் பண்பை ஆசிரியரின் மணிபல்லவத்தில் நன்கு அறியலாம். ஆயிரம் கதையில் ஆயிரம் அறிவுரைகள் மலிந்து கிடக்கின்றன. கதையை ஊன்றிப் படித்து மனக்கண் முன் சற்று நிறுத்தினால் ஒவ்வொரு நிகழ்ச்சிகளையும் நேரிலே காண்பது போன்ற தொரு பிரமை ஏற்படுகிறது. ஆசிரியர் அவர்களின் ஆழ்ந்த நோக்கம் மணிபல்லவத்தை ஓர் அறிய இலக்கியமாகக் கமழச் செய்யும் என்பதில் ஐயமில்லை.

எண்ணற்ற நல்ல அம்சங்களைத் தாங்கி வரும் 'கல்கி'யின் இருபது ஆண்டு நிறைவை மனமார வாழ்த்துகிறேன்.

ஈரோடு
31-6-61
எஸ். எச். ஏ. ஜமால்

# நாட்டின் உணவு உற்பத்தியைப் பெருக்குதல்

## இவர்தான் பரிசு பெற்றவர் !

*சம்பத்ராவ் ஹரிபா
தளவாதே, மோஹராட், வடக்கு
சதாரா ஜில்லா, மஹாராஷ்டிரம்.
அரசாங்கம் நடத்தும் நெல்
விளைச்சல் முன்னேற்றத் திட்டப்
போட்டியில்
1959-60ல் முதல் பரிசு பெற்றவர்.
அவருடைய பரிசுபெற்ற விளைச்சல்
ஏக்கருக்கு 149 மணங்குகள்.*



சம்பத்ராவ் வெற்றியின் ரகசியம் அவர் சரியானபடி உழுதல், சிறந்த விதைகளை விதைத்தல், மாட்டுத்தொழு உரத்தையும், ரசாயன உரத்தையும் உபயோகித்தல் போன்ற உயர்தர சாகுபடி முறைகளைப் பின்பற்றியதுதான்.

சம்பத்ராவைப் போன்று உற்சாகமும், முயற்சியும் உள்ள விவசாயிகள் நாட்டிற்கு அதிக உணவை அளிக்கிறார்கள். நவபாரதத்தைச் சிருஷ்டிப்பதில் உதவுகிறார்கள்.

**வளம் பெருக்கும் திட்டம்**

**நம்மை ரக்ஷிக்கும் திட்டம்**

**திட்டம் உருவாக உதவுங்கள்**

**திட்டத்திற்காகச் சேமியுங்கள்**

DA 60-763

# அவர்களுடைய பாதுகாப்பு உங்கள் கடமை

# Firestone

## பயர்ஸ்டோன் பொருத்துங்கள்

### நீடித்த காலத்திற்கு அபாயமின்றி இருங்கள்






தேய்வடைந்த டயர்களை உபயோகித்து மோட்டார் ஓட்டுவதில் சிக்கனம் யாதொன்றுமில்லை. அதனால்—வழுக்குவதாலும் டயர்கள் வெடிப்பதாலும், பிரேக் கண்ட்ரோல் இல்லாமையாலும்—அபாயம் மட்டும்தான் இருக்கிறது.

உங்களுடைய காரிலுள்ள டயர்களைவிட எவ்விதத்திலும் நீங்களோ உங்களுடைய குடும்பமோ கூடுதலான பாதுகாப்புடனிருக்க முடியாது!

**பயர்ஸ்டோன் வாங்குவதால் உங்களுக்குக் கிடைப்பவை...**

* வழுக்குவதைத் தடுக்கவும், நிச்சயமாக பிரேக் பிடிப்பதற்கும் தேவையான, இன்று வரைக்கும் பயர்ஸ்டோனுக்கே பிரத்தியேகமான, ஆயிரக்கணக்கான கோணங்களையுடைய, பாதுகாப்பளிக்கும் டிரெட்.
* நீடித்த காலத்திற்கு உங்களுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டி நீடித்து உழைக்கவும் தேயாமலிருக்கவுமெனத் தயாரிக்கப்பட்டுள்ள பயர்ஸ்டோன் ரப்பர்.
* டயர் தயாரிப்பில் எந்தத் தொழில் நுட்பத்தை உலக மோட்டாரோட்டப் பந்தயக்காரர்கள் அவர்கள் உயிருக்காக நம்பியிருக்கிறார்களோ அதே தொழிலியல் திறமை.

## பயர்ஸ்டோன் நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்கள்

### இன்று சிறந்தவை—நாளை இதிலும் சிறந்தவை




## நலிவும் நாணமும்

புதுக்கோட்டைச் சீமையில் விராலிமலை என்று ஒரு சிற்றூர் இருக்கிறது. அவ்வூரில் எழில் வாய்ந்ததொரு குன்றின் மேல் தமிழ் முருகன் கோவில் கொண்டிருக்கிறான். குன்றின் மேல் கண் பார்வை செல்லுமிடமெல்லாம் மயில்கள் தோகை விரித்து ஆடும் காட்சியை விராலிமலையில் காணலாம். விராலிமலை முருகனைப் பற்றி ஏழைத் தமிழ்ப் புலவர் ஒருவர் அக்காலத்தில் பாடியிருக்கும் பாடலில் சிறியதோர் அநுபவக் கதை அடங்கியிருக்கிறது. உணர்ச்சித் துடிப்பும் உயிரோட்டமும் உள்ள நிலையை அந்தக் கவிதையில் காண்கிறோம்.

உலகத்தில் இரண்டு வகை வாழ்க்கையைப் பார்க்கிறோம். மனத்தை மட்டும் நிறைத்துக் கொண்டு வயிற்றை நிறைத்துக் கொள்ள வழி தெரியாதவர்கள் ஒரு பக்கம். வயிற்றை நிறைத்துக் கொள்ள வேண்டிய வசதி இருந்தும் மனத்தை நிறைத்துக் கொள்ள வழி தெரியாதவர்கள் ஒரு பக்கம். ஒரு மனிதன் ஏழையாக மட்டும் இருக்கலாம். அல்லது அறிவாளியாக மட்டும் இருக்கலாம். ஆனால் அறிவாளியாகவும், ஏழையாகவும் சேர்ந்து இருப்பதைப் போல் வேதனை வேறு இல்லை. 'வயிற்றுக்காக நாலு பேரிடம் ஏதாவது கேட்டு வசதிகளைப் பெறு'-என்று ஏழ்மை தூண்டும். 'கேட்பதும், கைநீட்டிப் பெறுவதும் கேவலம்' என்று அறிவும் நாணமும் தடுக்கும். 'யாரிடமாவது எதையாவது உதவி பெற்று வருவதற்குப் போ' என்று தூண்டும் தரித்திரமும் 'போகாதே' என்று பின்னுக்குப் பிடித்திழுக்கும் நாணமுமாக ஊசலாடுகிற வாழ்க்கையில் நிம்மதி எப்படி இருக்க முடியும்? அறிவினால் பெருமிதம் பிறக்கிறது. ஏழ்மையால் இழிவும் தாழ்வு மனப்பான்மையும் பிறக்கின்றன. அறிவினால் சேர்த்துச் செழிக்க வைத்த பெருமிதம் பாவினாலும், இல்லாமையாலும் போய்விடக் கூடாதே என்ற நினைவினால் நாணம் பிறக்கிறது.

அந்தக் காலத்தில் விராலிமலையிலிருந்த ஏழைத் தமிழ்ப் புலவரொருவருக்கு இப்படியோர் அநுபவம் ஏற்பட்டது. மனத்தில் புலமை, வீட்டில் ஏழ்மை. அக்கம்பக்கத்து ஊர்களில் வள்ளல்கள் பலர் இருந்தார்கள். வெட்கப்படாமல் அவர்களிடம் போய்க் கேட்டால் ஏதாவது உதவி செய்வார்கள். சும்மா போய்க் கேட்க முடியுமா? 'கற்பகத் தருவே! சிந்தாமணியே!' என்றெல்லாம் அந்த வள்ளல்களை வாயாரப் புகழ்ந்து சொல்லி அப்புகழ்ச்சியில் அவர்கள் மயங்கி நெகிழ்ந்து போயிருக்கும் நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு, "வீட்டில் மிகவும் வறுமையான நிலை. ஏதாவது கொடுத்து உதவுங்கள்" என்று குழைந்து பல்லெல்லாம் தெரியக் காட்டிக் கேட்க வேண்டும். எப்படித் துணிந்து கேட்பது? 'எப்படியாவது கேட்கத்தான் வேண்டும்' என்று தரித்திரம் அவரை முன்னால் தள்ளியது.

'வெட்கத்தை விட்டு இப்படிக் கேட்கலாமா?' என்று அறிவும் அறிவுக்குரிய நாணமும் அவரைப் பின்னுக்கு இழுத்தன.

இப்படித் தரித்திரம் முன்னுக்கு இழுக்க, நாணம் பின்னுக்கு இழுக்க, என்ன செய்வதென்று தெரியாமல் தெருவிலும் இறங்காமல், வீட்டுக்குள்ளும் திரும்பாமல் வாயிற்படியிலேயே தயங்கி நின்றார் புலவர்.

அவருக்கு எதிரே விராலிமலை மீது குன்று தோறாடும் குமரனின் கோவில் தெரிந்தது.

'முருகா! நீ என்னை ஏழையாக மட்டும் படைத்திருக்கலாம். அல்லது அறிவாளியாக மட்டும் படைத்திருக்கலாம். அறிவாளியாகவும் ஏழையாகவும் சேர்த்துப் படைத்து இப்படி ஏன் வதைக்கிறாய்?'' என்று முருகனுடைய குன்றத்தை நோக்கி முணுமுணுத்தார் புலவர்.

நெடுநேரம் வாயிற்படியில் தயங்கி நின்ற பின் புலவர் வீட்டுக்குள் திரும்பவும் இல்லை. வள்ளல் வீட்டுக்குப் பொருளுதவி கேட்கச் செல்லவும் இல்லை. இரண்டையுமே செய்யாமல் நடுவாக மலைக்குப் போகும் வழியில் நடந்தார். வேகமாக மலையேறி முருகன் சந்நிதிக்கு முன்னால் வந்தார். தரித்திரம் பிடித்துத் தள்ளவும், நாணம் போகவிடாமல் தடுக்கவும், ஊசலாடும் தமது மனம் பட்ட வேதனையை முருகனிடமே கூறினார். முருகனிடமே உருகினார். குழந்தைக்குத் துயரமானால் தாயிடம் உருகும். தாய்க்குத் துயரமானால் தன் தாயிடம் உருகுவாள். அறிவாளிக்குத் துயரமானால் தெய்வத்தைத் தவிர வேறு யாரிடம் போய் உருகுவது? அறிவையும் இல்லாமையையும் சேர்த்துக் கொடுத்து அந்த முரண்பாடுகளிடையே தன்னை வாட்டிய தெய்வத்தையே இப்படிக் கேட்டார் அவர்:

கா என்றும் சிந்தாமணி என்றும் சொல்லி
என் கையில் அள்ளித்
தா என்று கேட்கத் தரித்திரம் பின்நின்று
தள்ளி எனைப்
போ என்று உரைக்கவும் நாணம் அங்கே
என்ன போவதிங்கு
வா என்று இழுக்கவும் வந்தேன் விராலி
மலைக் கந்தனே!

'இரண்டில் எதைச் செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. உன்னிடம் வந்து விட்டேன். எனக்கு ஒரு வழி சொல்!' என்று பாட்டிலிருந்து தொனி கேட்கவில்லையா உங்களுக்கு? ஊசலாடுகிற மனப் போராட்டத்தை வெளியிடும் தமிழ்க் கவிதைகளில் மிக அழகான கவிதை இது.

—வனவன்

# ஆயுள் தண்டனை

## காட்சி 1

[கலிங்க நாட்டரசர் பிரதாப ருத்ர கஜபதி தலைநகருக்குச் சற்றுத் தொலைவில் பெரும்படையுடன் பாடி யிறங்கி யிருக்கும் தம் பரம வைரி கிருஷ்ணதேவராயரை முறியடிப்பது பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கிறார். அமைச்சரும், தானைத் தலைவர்களும் சூழ்ந்திருக்கின்றனர்.]

படைத்தலைவன் : அரசே! கலிங்கத்தைப் பிடித்து விடலாம் என்று கனாக் கண்டு கொண்டிருக்கும் விஜயநகர மன்னனின் ஆசையை வெறுங் கனவாக்க நம்மால் முடியும். உதய கிரிப் போரில் தோற்று விட்டோமே என்று நாம் ஓய்ந்து விட வேண்டியதில்லை. நம் படையிலிருந்த வேழங்களில் சில மதம் பிடித்து நமது வீரர்களையே மிதித்து வைத்ததுதான் தோல்விக்குக் காரணம்.

அமைச்சர் : படைத் தலைவரின் கூற்றை நானும் ஓரளவுக்கு ஒப்புக் கொள்கிறேன். என்றாலும் எதிரியின் படை வலிமையைக் குறைத்து மதிப்பிட முடியாது. உதயகிரிப் போருக்குப் பிறகு கொண்ட வீடு சீமையை இழந்திருக்கிறோம்; கொண்டபல்லிக் கோட்டையைக் கோட்டை விட்டிருக்கிறோம்; நமக்குச் சொந்தமான சிம்மாத்ரியில் எதிரியை வெற்றித்தூண் நாட்டும்படி விட்டு வேடிக்கை பார்த்திருக்கிறோம்.

கஜபதி (பற்களை நெரித்து): போதும் — எதிரியின் வீரப் பிரதாபங்களைப் பேசிப் பேசி என் மனத்தில் வேதனையை மூட்டாதீர்கள். கலிங்கத்து மண்ணில் காலடி வைத்தவனின் தலையைப் பந்தாட உங்கள் யோசனை என்ன?

ப. தலைவன் : மகாராஜா! இதுவரையில் நடந்த போர்களில் சூழ்நிலைகள் நம்மைச் சதி செய்து விட்டன. ஆனால் இம்முறை கிருஷ்ண தேவராயன் வீழ்வது திண்ணம்.

அமைச்சர் (இகழ்ச்சியாக): ஆம். நமது போர் வீரர்களில் இரண்டு லட்சம் பேர்கள், மருத்துவ சாலைகளில் உயிருக்கு மன்றாடும் நிலையில் இல்லாதிருந்தால், ஏழாயிரம் குதிரைகளும், ஐந்நூறு யானைகளும் காவுக் குழிக்குள் தள்ளப்படாமல் இருந்தால் படைத் தலைவர் கூறுவது போல் வெற்றித் திருமகளைத் தரிசிக்கலாம்.

கஜபதி : அமைச்சரே! சுற்றி வளைத்துப் பேச இதுவல்ல நேரம். நம்மிடம் போதுமான படை இல்லை என்பதுதானே உமது குறை? இனி அந்தச் சஞ்சலம் வேண்டாம். நம் கீழுள்ள சிற்றரசர் பதினன்கு பேருக்கும் ஓலையனுப்பிப் படை உதவி கேட்டிருக்கிறேன். அவர்களும் சம்மதித்து விட்டார்கள்.

அமைச்சர் (மகிழ்ச்சியுடன்) : அப்படியானால் வெற்றி நமக்கே. இரை தேடிக் காத்திருக்கும் விஜயநகர மலைப் பாம்பு, கலிங்கத்து ராஜாளியால் கொத்திச் சின்னாபின்னமாகப் போவது உறுதி.

[காவலன் ஒருவன் வந்து வணங்குகிறான்]

காவலன் : மகாராஜா! சிற்றரசர் பதினன்கு பேரும் படைகளுடன் ஐந்து காத தூரத்தில் வந்து கொண்டிருக்கிறார்கள்.

கஜபதி (புன்னகையுடன்): எதிர்பார்த்ததை விட விரைவாகவே வந்து விட்டார்கள்.

அமைச்சர் : எதிர்பார்ப்பதை விட விரைவாகவே இந்தப் போர் முடிந்து விடும் என்பதற்கு இது அறிகுறி, அரசே!

கஜபதி : ஆம். வீராப்புப் பேசும் விஜய நகரக் கோமான் நாளையோடு தொலைந்தான். படைத்தலைவர்களே! விடையளிக்கிறேன். நாளை சூரியோதயத்துக்குப் போர் முரசு கொட்டச் சித்தமாகுங்கள். நமது படை வெள்ளம் எதிரிகளைக் குத்திக் கிழித்து ரத்த வெள்ளம் ஓடச் செய்ய வேண்டும். உடனே செல்லுங்கள்.

ப. தலைவர் : உத்தரவு, அரசே!

[சபை கலைகிறது]

## காட்சி 2

[கன்னி மாடம். இளவரசி துக்கா தேவி தன் எதிரில் கிருஷ்ணதேவராயரின் உருவம் தீட்டிய ஒரு பலகையை நிறுத்தி அதை நோக்கிக் குத்துவாளை வீசுகிறாள்]

துக்கா : மல்லி! என் குறி சிறிதும் பிசகாமல் வலது கண்ணிலே வாள் பாய்ந்து விட்டது, பார்.

மல்லி : சரி. இப்பொழுது இடது கண்.

[துக்கா வீசிய குத்துவாள் சித்திரத்தின் இடது கண்ணில் பாய்கிறது.]

துக்கா : இந்தத் தடவையும் குறி தவற வில்லை.

மல்லி : இப்பொழுது நிச்சயம் குறிதவறிப் போய்விடும். எங்கே மார்பில் குத்துங்கள், பார்க்கலாம்.

[துக்கா குத்துவாளை வீச அது எங்கேயோ போய் விழுகிறது.]

துக்கா : சே! மார்பை நோக்கி மட்டும் சரியாகக் குறி வைக்க முடியவில்லையே?

மல்லி : அதற்குக் காரணம் இருக்கிறது, இளவரசி. அந்த விஜயநகர சுந்தரன் மனத்தில் நீங்கள் வீற்றிருக்கிறீர்கள். அதனால் தான் கத்தி அவர் இதயத்தில் பாய்வதற்கு மறுக்கிறது.

துக்கா : இது போன்ற விஷமப் பேச்சுக்களையெல்லாம் இனி பேசினால் எனக்குக் கோபம் வரும். எங்கள் பரம்பரை வைரியான அந்த விஜயநகரத் தலைவன்மேல் தினமும் நான் எப்படி என் வெறுப்பைத் தீர்த்துக் கொள்கிறேன் என்பது இந்தச் சித்திரத்தைப் பார்த்தாலே தெரியும். அவனையும்,

என்னையும் இணைத்துப் பேச உனக்கு எவ்வளவு தைரியம்?...

மல்லி : நான் மட்டும்தானா பேசுகிறேன்? ஊரே பேசுகிறதே.

துக்கா : என்னவென்று?

மல்லி : இளவரசியின் மேல் கொண்ட காதலால்தான் கிருஷ்ணதேவராயர் நம் நாட்டின்மீது படையெடுத்து வந்திருக்கிறார் என்று.

துக்கா : நமது ஜனங்கள் கற்பனை செய்வதில் கைதேர்ந்தவர்களாகி விட்டார்கள். பகைவனின் மகள் மேல் எந்தப் பைத்தியக்காரனும் ஆசை கொள்ள மாட்டான்.

மல்லி : காதல் பைத்தியம் பிடித்தவனுக்குப் பகை ஒரு பொருட்டே அல்ல, தேவி. பல சாம்ராஜ்யங்கள் வீழ்ந்ததும், வாழ்ந்ததும் பெண்ணால் என்று கேள்விப்பட்டதில்லை?

துக்கா : கேள்விப்பட்டிருக்கிறேன். பகைவனுக்குக் காணிக்கையாக்கப்பட்ட பெண், குமுறும் எரிமலையாகி, கோரமாகப் பழி தீர்த்துக் கொண்ட கதைகளையும் கேள்விப்பட்டிருக்கிறேன். நான் மட்டும் கிருஷ்ணதேவராயரைக் காண நேர்ந்தால்....

மல்லி (குறுக்கிட்டு) : அவர் மார்பில் வாளைப் பாய்ச்சுவதற்குப் பதிலாகக் காதல் பொங்கும் உங்கள் வேல் விழிகளைத்தான் பாய்ச்சுவீர்கள்.

துக்கா : மல்லி ! உளருதே..

மல்லி : உளறவில்லை, இளவரசி! உண்மையாகச் சொல்லுகிறேன். கிருஷ்ணதேவராயர் கன்னியரின் மனத்தை இழுக்கும் கட்டழகு உள்ளவராம்.

துக்கா : ஹூம். அரச பரம்பரையினருக்கு இல்லாத அழகு ஒரு சேனாதிபதியின் மகனுக்கு வந்து வாய்த்து விட்டதோ?

மல்லி : இதில் ஏளனம் செய்ய ஒன்றுமில்லை, இளவரசி! உண்மையிலேயே ராஜகளை அவர் முகத்தில் ஒளி வீசுகிறதாம்.

துக்கா : சரி. அப்படியே இருக்கட்டும். அந்த ஒளி வீசும் முகத்திலே கலிங்கத்து வீரர்கள் கரி பூசி அனுப்பப் போகிறார்கள் பார் நாளை —

[துக்கா சித்திரத்தை நோக்கி வெறுப்புடன் கத்தியை வீசுகிறாள். மன்னர் கஜபதி வருகிறார்.]

கஜபதி : பேஷ்! அந்தப்புரத்திலும் வாள் பயிற்சி நடக்கிறதா?

துக்கா : அப்பா ! இப்பொழுதெல்லாம் நான் எவ்வளவு நன்றாகக் குறி பார்த்து வீசுகிறேன், தெரியுமா?

கஜபதி : இந்தச் சித்திரத்தைப் பார்த்தாலே தெரிகிறதே.

துக்கா : அப்பா! எனக்கு ஓர் ஆசை. சொன்னால் சம்மதிப்பீர்களோ, என்னவோ?

கஜபதி : நன்றாக இருக்கிறது. கல



சத்து ராஜகுமாரி ஆசை என்று வாய் திறந்து கூறிவிட்ட பிறகு அதை மறுக்க யாருக்கு உரிமை யிருக்கிறது? சொல்லம்மா...

துக்கா: வேறொன்றும் இல்லை, அப்பா! நாளை நடக்கப் போகும் போரில் நம் குல விரோதியை உயிருடன் பிடித்து என் முன் கொண்டு வந்து நிறுத்துவீர்களா? அவன் குடலைக் குத்து வாள் வீசி அணுஅணுவாகத் துளைக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை.

கஜபதி: உன் ஆசையைக் கட்டாயம் நிறைவேற்றுகிறேன், துக்கா! சற்று முன்பு வரை நான் தெம்பிழந்து கிடந்தேன். ஆனால் இப்பொழுது நம் வீரத்துக்குப் புது ரத்தம் பாய்ச்சப்பட்டு விட்டது. எனது ஆணைக்கு அடங்கிய சிற்றரசர் பதினன்கு பேரும், கடல் பொங்கி வந்தது போல் தம் சேனையுடன் எனக்குத் துணை வந்து விட்டார்கள். நாளையப் போரில் கிருஷ்ணதேவராயன் தப்ப முடியாது.

அமைச்சர் (வந்து கொண்டே): தப்பி விடுவான், அரசே! தப்பிவிடுவான்.

கஜபதி: என்ன?

அமைச்சர்: ஆம். கிருஷ்ணதேவராயனைச் சாதாரணமாக நினைத்தது நாம் செய்த பெரும் பிழை. நம் உதவிக்கு வந்திருப்பதாக நடிக்கும் பதினன்கு சிற்றரசர்களும், கிருஷ்ணதேவராயனும் ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

கஜபதி: ஆ!

அமைச்சர்: வியப்பான சேதிதான். ஆனால் நம்ப முடியாதது அல்ல. நமது சிற்றரசர்களுக்குக் கிருஷ்ண தேவராயன் பதினன்கு பெட்டிகளில் அனுப்பிய பரிசுப் பொருள்களையும், ரகசியக் கடிதங்களையும் நமது ஒற்றர்கள் கைப்பற்றிக் கொணர்ந்திருக்கின்றனர். கடிதத்தை நீங்களே படித்துப் பாருங்கள்.

கஜபதி (படிக்கிறார்): நாம் முன்பு செய்து கொண்ட ஒப்பந்தப்படி இப்பரிசில் அனுப்பப் பட்டிருக்கிறது. நாம் தாக்குகையில் கஜபதியைக் களத்தில் தனியே விட்டு விடுக.'

[பற்களை நெரித்து]

ஆ! சூழ்ச்சி. அத்தனையும் சூழ்ச்சி

அமைச்சர்: மகாராஜா! இந்நிலையில் சிற்றரசர்களை நம்பி நாம் போரில் ஈடுபடத்தான் வேண்டுமா? களத்தில் கிருஷ்ண தேவராயனின் படைகளுடன் சிற்றரசர்களின் படையும் சேர்ந்து கொள்ளுமானால்...

கஜபதி: போதும். நினைக்க நினைக்க நெஞ்சிலே வேல் பாய்ச்சுவது போலிருக்கிறது. இத்தனை நாட்கள் என் அடியைத் தொட்டு வணங்கி வந்த சிற்றரசர்கள் இப்போது என் முடியைத் தட்டிவிட நினைக்கிறார்கள். சந்தர்ப்பவாதிகள். அமைச்சரே! சூழ்ச்சி வலையில் நாம் சிக்கி விட்டோம். இனிமேல் பகைவருடன் போரிடுவதில் பயனில்லை. அரண்மனையிலிருந்து தப்ப ஏற்பாடு செய்யுங்கள். சீக்கிரம்.

அமைச்சர்: உத்தரவு, அரசே!

[விரைந்து செல்கிறார்]

துக்கா (கண்களில் நீர் மல்க): அப்பா! நாம் அரண்மனையை விட்டுக் கோழை போல் ஓடத்தான் வேண்டுமா? அதைவிடப் பகைவருடன் போரிட்டு மடிவதே மேல்.

கஜபதி: துக்கா! ஆவேசப் பேச்சுக்கு இது நேரமல்ல. அரை நாழிகைப் பொழுதில் நிலைமை பகைவனுக்குச் சாதகமாகி விட்டதைப் பார்த்தோம். இனி அரை ஆண்டுப் பொழுது கழிந்த பின்பாவது நம்பிக்கை ஓங்கலாம். அந்த நல்ல நாளுக்காகக் காத்திருந்து பகை முடிப்பதே அறிவுடைமை. சீக்கிரம் அரண்மனையை விட்டு வெளியேறத் தயார் செய்து கொள்.

## காட்சி 3

[கிருஷ்ண தேவராயரின் படை முகாம்; அழகிய பட்டுத் திரைச் சீலைகள் தொங்கும் கூடாரம் ஒன்றில் பேரரசர் கிருஷ்ண தேவராயரும், அமைச்சர் அப்பாஜியும் படைத் தலைவர்களும் அமர்ந்திருக்கிறார்கள். அனைவர் முகத்திலும் ஆனந்தம் தாண்டவமாடுகிறது.]

கிருஷ்ண: போர்க்களத்தில் பெறும் புண்களையே வெற்றிப் பதக்கமெனப் போற்றும் என் படைத் தலைவர்களே! உங்களுக்குப் பெரியதோர் ஏமாற்றம் காத்திருக்கிறது. போர் செய்யத் துடிக்கும் உங்கள் கரங்களுக்கு வேலையில்லை. ரத்த தாகம் கொண்ட உங்கள் வாள்களின் பசி அடங்கப் பகைவர் எவரும் கிடைக்க வில்லை. கஜபதியின் உதயகிரிக் கோட்டையைக் கைப்பற்ற ஒன்றரை வருடம் போராடினோம். ஆனால் கலிங்கத்தின் தலைநகரைக் கைப்பற்ற ஒன்றரை நாள்கூட நாம் போராட வேண்டி யிருக்காது. அறிவில் சாணக்யருக்கும் ஆசானான நமது அமைச்சர் அப்பாஜி, வெற்றிப் பாதையை அகலமாக்கி அதில் ரோஜா மலர்களையும் தூவி வைத்திருக்கிறார்.

அப்பாஜி: படைத் தலைவர்களே! இந்தக் கிழவனை வார்த்தைக்கு வார்த்தை புகழ்ந்து பேசாவிட்டால் பேரரசருக்கு உறக்கமே வருவதில்லை. இந்தப் புகழ்ச்சிக்குப் பாத்திரமாக அப்படி யென்ன பிரமாதமான காரியம் செய்து விட்டேன்?

படைத் தலைவர்: தற்புகழ்ச்சி கூடாது என்பதற்காகத் தாங்கள் இப்படிக் கூறினாலும் தாங்கள் செய்த போர்த் தந்திரம் வரலாறு புகழும் அரிய செயல். சிற்றரசர்களுக்கும் நமக்கும் ரகசிய ஒப்பந்தம் இருப்பதாகக் கதை கட்டிக் கடிதமும், பரிசில்களும் அனுப்பினீர்கள். அதைக் கண்ட கஜபதி உண்மையென்று நம்பி ஓடி ஒளிந்து கொண்டான்.

கிருஷ்ண: அது மட்டுமா? விவரம் இன்னதென்று அறியாத சிற்றரசர்களும், கஜபதியே ஓடி ஒளிந்து விட்டபின் நமக்கென்ன என்று படைகளுடன் தம் குறுநாடுகளுக்குத் திரும்பி விட்டனர். கல்லை விடாமல், கடிதம் எழுதியே கனியிரண்டை வீழ்த்த நம் அமைச்சர் ஒருவரால்தான் முடியும்.

அப்பாஜி: அரசே! வெற்றிப் பெருமிதத்தில் பொன்னான நேரத்தை வீணாக்குவது தகாது. உடனடியாக நாம் செய்ய வேண்டிய காரியம் இன்னொன்று இருக்கிறது. தப்பியோடிய கைதியை எவ்வாறேனும் சிறைப் பிடிக்க வேண்டும்.

**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கி றார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.
ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.




இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவந்தப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

**எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!**

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது

# பிலிப்ஸ்

REGD. TRADE MARK

## மில்க் ஆப் மக்னீஷியா

பூரண விநியோகஸ்தர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

கல்கத்தா-பம்பாய்-டெல்லி-சென்னை-பாட்னா-கௌஹாத்தி-கட்டாக்

PB/MOM/4-61

"பள்ளிக்கூடப் பசங்களுக்கு மந்திரி துணிகள் வாங்கிக் கொடுத்தாராம்! பேப்பரிலே போட்டிருக்கு!''

'துணிகள் வாங்கிக் கொடுத்து என்ன பிரயோஜனம்? வாத்தியார் கிட்டே சொல்லி 'மார்க்' வாங்கிக் கொடுத்திருந்தா நன்றாக இருக்கும்!''

---

கிருஷ்ண : ஆம்! என் கொலு மண்டபத்தில் கஜபதியைக் குற்றவாளியாக நிறுத்தி அவன் கொட்டத்தை அடக்கினால்தான் என் மனம் ஆறும். தானாதிபதி! கஜபதியைத் தேடிப் பிடிக்க உடனே ஒரு படையை அனுப்புக.

படைத் தலைவன் : ஆணை, மன்னவா!

கிருஷ்ண : நாளை சூரியோதயத்தில் நமது படைகள் கடகத்தினுள் நுழைய வேண்டும். சித்தமாயிருங்கள்.

ப. தலைவன் : உத்தரவு, மகாராஜா!

[வணங்கிவிட்டுச் செல்கிறான்]

## காட்சி 4

[கொலு மண்டபம். கிருஷ்ண தேவராயர் வீற்றிருக்கிறார். அவர் முன் விசாரணைக் கைதியாக மன்னன் பிரதாபருத்ர கஜபதியும் இளவரசி துக்கா தேவியும் பிரதானியார் மற்றும் சில அரச குடும்பத்தினரும் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றனர்.]

கிருஷ்ண : கஜபதி! என்னுடைய பிடியிலிருந்து தப்புவது அவ்வளவு சுலபமல்ல என்பதை இப்பொழுது உணர்ந்திருப்பாய். பாவம்! என்னுடைய விரோதத்தை விலை கொடுத்து வாங்கி விட்டு விடுபட முடியாமல் விழிக்கிறாய். கண் இமைக்கும் நேரத்துக்குள் உன்னைக் கால் வேறு கைவேறாகத் துண்டித்து விட என்னால் முடியும். ஆனாலும் உன்னை மனித இதயத்தோடு நடத்தவே நான் விரும்புகிறேன். என்னைப் பேரரசன் என்று ஒப்புக்கொள். கப்பம்கட்டச் சம்மதித்துவிடு. உன்னையும் கலிங்கத்தையும் விட்டு விடுகிறேன்.

கஜபதி : அரசே! இதயபூர்வமாகத்தான் இப்படிக் கூறுகிறீர்களா? கனவிலும் நனவிலும் உங்களைக் கடும் பகைவனாகக் கொண்டு இன்னல் பல இழைத்த எனக்கா கருணை காட்டுகிறீர்கள்? பகைவனையும் மன்னிக்கும் உங்கள் பண்பை உணராது நாவலிக்கத் தூற்றியதற்காக நாணமடைகிறேன். உங்களைப் பேரரசனாக மட்டுமல்ல, என் தெய்வமாகவே ஏற்றுக் கொள்கிறேன்.

கிருஷ்ண : உங்கள் மன மாற்றத்தைக் காண மகிழ்ச்சி. இனி நீங்கள் எமது நண்பர். கிருஷ்ணையாற்றங்கரைக்கு வடக்கில் நான் வெற்றி கொண்ட நாடுகளையெல்லாம் திரும்ப உங்களிடம் ஒப்படைக்கிறேன்.

கஜபதி : தங்களுடைய அருங்குணத்தைப் பாராட்டி நானும் ஒரு சிறந்த பரிசளிக்க விரும்புகிறேன். மனமுவந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். இதோ என் மகள் துக்காதேவி. இவளை மணந்து நம் நட்பு என்றும் மாறாது என்று உறுதியளிக்க வேண்டும்.

கிருஷ்ண : ஏன் இன்னும் சந்தேகம்? உங்கள் பரிசை ஏற்றுக் கொள்கிறேன்.

அப்பாஜி : மகாராஜா! சற்று ஆலோசித்து...

கிருஷ்ண : அவசியமில்லை. கஜபதியின் தூய உள்ளம் எனக்குத் தெரிகிறது. அவர் அளிக்கும் அன்புப் பரிசை ஏன் மறுக்க வேண்டும். பிரதாப ருத்ரரே! மண விழாவுக்கு நாள் கணித்து விடுங்கள். அடுத்த திங்களுக்குள் நான் விஜய நகரம் திரும்ப எண்ணியிருக்கிறேன்.

கஜபதி : இதோ, இப்பொழுதே திருமண ஏற்பாடுகளைத் தொடங்கி விடுகிறேன்.

## காட்சி 5

[திருமணத்தை முடித்துக் கொண்டு கிருஷ்ண தேவராயர் விஜயநகரம் திரும்பிய மறு நாள். மலைய கூடம் என்று வழங்கும் எழில் மிக்க மாளிகையின் ஒரு பகுதி. தோழி மல்லி பக்கத்தில் நிற்க துக்காதேவி மஞ்சத்தில் அமர்ந்திருக்கிறாள்.]

துக்கா : மல்லி! கிருஷ்ணதேவராயரை நான் கணவராக ஏற்றுக் கொண்டது உண்மை. ஆனால் அந்த உண்மைக்குப் பின்னால் ஒரு ரகசியம் ஒளிந்திருக்கிறது. என் தந்தை அவமானப்பட்டது உனக்குத் தெரியும். அவர் கையிலே விலங்கிட்டுச் சபை நடுவே நிறுத்தி அடிமைச் சாசனம் எழுதப்பட்டதையும் நீ அறிவாய். அந்தப் பழிக்குப் பழி வாங்கவே இந்தத் திருமணத்துக்கு நான் சம்மதித்தேன். ஒரு மன்னனை நெருங்காதபடி மந்திரிக்குக் கூடத் தடை போடலாம். ஆனால் மனைவிக்குத் தடைபோட முடியாதல்லவா? அந்த ஒரே ஒரு உரிமையை வைத்துக் கொண்டு எளிதில் பகை முடித்திடலாம் என்ற எண்ணத்தில் தான் இவரை நான் மணந்தேன்.

மல்லி : தேவி! உங்கள் பேச்சைக் கேட்கக் கேட்க என் ஆவி நடுங்குகிறது. எத்தனை பகை யிருந்தாலும் கொண்ட கணவனையே

கொலை செய்யத் துணிவது பெண் இனத்துக்குப் பெருமை ஆகாது.

துக்கா (கண்டிப்பான குரலில்): மல்லி! கணவன் கணவன் என்று கூறி என் மனத்தைக் கலங்க வைக்கப் பார்க்காதே. இந்தத் திருமணம் ஊருக்காக நடந்தது. உலகத்தின் கண்களைத் திரையிட்டு மறைப்பதற்காக நடந்தது. கிருஷ்ணதேவராயரை வஞ்சிப்பதற்காக நடந்தது. அதற்கு மேல் விளக்கம் கேட்காதே. நான் கூறுவதுபோல் நட.

மல்லி (தயக்கத்துடன்): என்ன தேவி செய்ய வேண்டும்?

துக்கா: இன்று இரவு எனது பள்ளியறைக்கு அரசர் வருவார். பணிப் பெண்கள் சந்தனமும், பன்னீரும், பாலும் பழங்களும் கொண்டு வந்து வைக்கும்போது நீயும் ஒரு தட்டில் ஐந்து குத்து வாள்களைப் பூவிட்டு மறைத்துக் கொண்டு வந்து வைத்து விடு. பிறகு நான் என்ன செய்யப் போகிறேன் என்பது....நமது அரண்மனைச் சித்திரத்தை நினைவுபடுத்திக் கொண்டால் புரியும்.

மல்லி: தேவி!...

துக்கா: உம். சொன்னபடி செய். போ—

[மல்லி போகிறாள்.]

## காட்சி 6

[வெள்ளித் தட்டென வெண்ணிலவு விண்ணிலே தொத்திக் கிடக்கும் நேரம். பள்ளியறைக்குள் கிருஷ்ண தேவராயர் நுழைகிறார். துக்கா தேவி மலர்ந்த முகத்துடன் அவரை வரவேற்கிறாள்.]

கிருஷ்ண: துக்கா! எதையும் அழகுபடச் செய்கிறாய் நீ. இந்த அறையின் அலங்காரம் எவ்வளவு நேர்த்தியாய் இருக்கிறது தெரியுமா? அடடா! ஏன் துக்கா திடீரென்று உன் முகம் வாடி விட்டது?

துக்கா: வாடாமல் என்ன செய்யும்? மங்கை என் ஒருத்தியின் அலங்காரம் உங்கள் மனத்தைக் கவரவில்லை. அறையின் அலங்காரம்தான்...

கிருஷ்ண: அவசரப்படுகிறாய், துக்கா! மணத்தைப் போற்றுபவன் அதற்குக் காரணமான மலரை மறந்து விடுவேனா?

துக்கா: மறக்க மாட்டீர்கள். மறக்கமுடியாதபடி உங்கள் சரித்திரத்தில் நிச்சயம் நான் இடம் பெற்று விடுவேன்.

கிருஷ்ண: சந்தேகமென்ன? கண்ணே! உன்னை மணந்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன் நான். உன் தந்தையின் குற்றங்களை யெல்லாம் மன்னித்ததே உன் மேல் கொண்ட மோகத்தால்தான். கஜபதி சற்றுத் தாமதித்திருந்தால் கூட நானே உன்னைத் தரும்படி வாய் விட்டுக் கேட்டிருப்பேன்.

துக்கா: ஊம். நான் அவ்வளவு அழகாகவாயிருக்கிறேன்?

கிருஷ்ண: பேரரசன் கிருஷ்ணதேவ ராயனே கண்டு காதலிக்கிறான் என்றால் அந்த அழகுக்கு இலக்கணமா கூற வேண்டும்? எழிலின் இருப்பிடமே! என் இதயப் பேழையில் இடம் பெற்று விட்ட ஒளிமுத்து நீ.

துக்கா (ஏளனமாக): மகாராஜா! நீங்கள் நினைப்பது தவறு. உங்கள் இதயப் பேழையைத் திறந்து இன்னொரு முறை பாருங்கள். அதிலிருப்பது முத்தல்ல. சாதாரண கூழாங்கல்தான்.

கிருஷ்ண: அன்பே! உன் பெருமை உனக்குத் தெரியவில்லை.

துக்கா: ஊம், என் பெருமையும் எனக்குத் தெரியும்; என் திறமையும் எனக்குத் தெரியும். வேண்டுமானால் இப்பொழுதே பாருங்கள். கத்தி வீசுவதில் எனக்கு நிகர் நானேதான்.

[துக்கா சரேலென்று பாய்ந்து ஒரு தட்டில் மறைத்து வைத்திருந்த குத்து வாள்களை எடுத்து ராயரை நோக்கிக் குறி வைக்கிறாள்.]

கிருஷ்ண: துக்கா! என்ன இது விளையாட்டு?

துக்கா (ஆவேசமாக): அசையாதீர்கள்! நான் நீண்ட நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த விளையாட்டு இது. உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள். உங்கள் உயிரைப் பறிப்பதற்காக உங்களை நான் மணந்தேன். இந்த ஐந்து வாள்களையும் உங்கள் உடலில் பாய்ச்சி, நீங்கள் கொட்டும் குருதியில் குளிப்பதுதான் என் மனத்திலிருக்கும் ஒரே ஆசை. நீங்கள் காட்டிய தேவதாசி

களின் நடனத்தை நான் ரசிக்கவில்லை. குத்துப் பட்ட உங்கள் உடல் துள்ளிக் குதித்துத் துடிப் பதைத்தான் ரசிக்கப் போகிறேன். கலிங்கத்து மக்கள் பகை முடிந்ததென்று விண்ணதிர முழங்கி வெற்றி விழா கொண்டாடட்டும். கன்னி என் அணைப்புக்காக ஓடோடி வந்த மன்னா, இதோ, நான் விடும் கத்தியை அணைத்துக் கொள்.

கிருஷ்ண : துக்கா! சற்றுப் பொறு.

[ஒன்றன் பின் ஒன்றாக அவள் வாள்களை வீச, கிருஷ்ணதேவ ராயர் சாமர்த்தியமாக ஒதுங்கித் தப்பித்துக்கொள்கிறார். ஆனால் அவள் வீசிய ஐந்தாவது வாள் அவர் மார்பில் பாய்கிறது. கிருஷ்ண தேவராயர் அலறியபடி மஞ்சத்தில் சாய்கிறார். அதே கணம் அமைச்சர் அப்பாஜி வீரர்களுடன் அங்கு தோன்றுகிறார். துக்கா பேய்க் குரலில் சிரிக்கிறாள்.]

அப்பாஜி : ஐயோ மகாராஜா! உங்கள் உயிரைக் காப்பாற்ற அரைக் கணம் தாமதித்து விட்டேன். நான் சந்தேகப்பட்ட படியே நடந்து விட்டது. [துக்காவை நோக்கி] அறிவிழந்த பெண்ணே! உன்னால் முடிந்த வரையில் சிரித்து விடு. ஏனென்றால் இனி மேல் நீ சிரிக்கவே முடியாது.

துக்கா (அலட்சியமாக) : ஹும். சிரிக்க முடியாமல் போனாலும் சரி, பார்க்க முடியாமல் என் கண்களைப் பாழாக்கினாலும் சரி, எனக்குக் கவலையில்லை. என் எண்ணம் ஈடேறி விட்டது. என் தந்தைக்கு நான் செய்ய வேண்டிய உபகாரத்தைச் செய்து விட்டேன்.

அப்பாஜி : அதுதான் இல்லை. உன் தந்தைக்கு நீ பெரிய அபகாரம்தான் இழைத்து விட்டாய். மன்னர் மடிந்த செய்தி கேட்டதும் உன் தந்தையே உன்மீது பழிகாரி, பாதகி என்று அடுக்கடுக்காய் அவச் சொற்களை அள்ளி வீசப் போகிறார்.

துக்கா (திகைப்புடன்) : ஏன்? அவருடைய யோசனைப்படிதானே இக்கொலை புரிந்தேன்?

அப்பாஜி : அன்று நிலைமை வேறு. எமது அரசர் வாழ்ந்தால்தான் உன் தந்தையும் வாழ முடியும். கவனமாகக் கேள். உன் தந்தைக்கு அடங்கிக் கிடந்த சிற்றரசர்கள் பதினொரு பேர்களும் இப்பொழுது எதிர்த்துக் கிளர்ச்சி செய்கிறார்கள். உதவி கேட்டு உன் தந்தை ஓலை அனுப்பியிருக்கிறார். நாங்கள் உதவ வில்லையானால் பிரதாபருத்ர கஜபதி மகாராஜாவின் கதி என்னவாகும் தெரியுமா? கடகத்துக் கோட்டை வாயிலில் கழுவேற்றப் படுவார். பழி வாங்கி விட்டோம் என்று எக்களிக்கும் பேதைப் பெண்ணே! உன் தந்தைக்கு உதவக்கூடிய ஒரே ஒரு மாவீரனை, எங்கள் மன்னர் திலகத்தை மண்ணிலே சாய்த்து விட்டாயே. போ, போய் உன் தந்தையின் பிணத்தையும் கண்டு மகிழ்.

துக்கா : ஐயோ, போதும்! புன்மைச் செயல் புரிந்து பாவிக்கே பாத்திரமானேன். கரும்பை வேம்பென்று நினைத்துச் சுவைக்க மறுத்தேன். பெண்ணினத்தில் நானொரு கடை மகள். கொடுமைக்காரி.

[சற்று நேரம் தேம்பி அழுதபின்]

மகா மந்திரியாரே! நீங்கள் சக்தி பெற்றவர். எதையும் செய்து முடிக்கும் வல்லமை பெற்றவர். இதோ என் உயிரைத் தருகிறேன். எப்படியாவது மன்னரைப் பிழைக்க வையுங்கள். என் மேல் படிந்த பெரும் பழியைத் துடைத்து விடுங்கள்.

அப்பாஜி (சற்று யோசித்து) : சரி, முயற்சி செய்து பார்க்கிறேன்.

[கிருஷ்ண தேவரின் அருகில் சென்று]

மகாராஜா! எவ்வளவு நேரம் இப்படி உடலை அசைக்காமல் படுத்திருப்பீர்கள்? மிகவும் சிரமமாக இருக்குமே! எழுந்திருங்கள்.

[கிருஷ்ண தேவராயர் எழுந்து உட்காருகிறார்]

துக்கா : ஆ! நான் காண்பது நிஜம்தானா?

கிருஷ்ண : நிஜம்தான் துக்கா. நான் இன்னும் சாகவில்லை. உன்னுடைய சதித் திட்டத்தைப் புரிந்து கொண்ட பிரதானியார், உன் தோழி கொண்டு வந்து வைத்த கத்திகளை எடுத்து விட்டு, அட்டைக் கத்திகளை மறைத்து வைத்து விட்டார். நீ வீசிய குத்து வாள் என் மீது பட்டதும் ஒடிந்து போயிற்று.

துக்கா : மகாராஜா! இந்த அறிவிலியை மன்னிப்பீர்களா? என்னுடைய பிழை பொறுப்பீர்களா?

கிருஷ்ண : தேவி!

[துக்காவை நெருங்க முயன்ற கிருஷ்ண தேவராயரை அப்பாஜி தடுக்கிறார்.]

அப்பாஜி : மகாராஜா! நீங்கள் செய்த சபதத்தை அதற்குள்ளாகவா மறந்து போய் விட்டீர்கள்?

கிருஷ்ண : இல்லை. அதை என்னால் மறக்க முடியாது. துக்கா! என்னை மன்னித்து விடு. இனி உன்னை என் ராணியாக ஏற்றுக் கொள்ள முடியாது.

துக்கா : பிரபோ! அப்படிச் செய்யாதீர்கள்....

கிருஷ்ண : துக்கா! நீ என்னைக் கொலை செய்யத் திட்டமிட்டிருப்பதாக அமைச்சர் கூறினார். அவர் கூற்றை நான் நம்பாமல் ஒரு சபதம் செய்து விட்டேன். நீ என்னைக் கொலை செய்ய முயல்வது நிரூபிக்கப்பட்டால் உன்னை ஆயுள் முழுவதும் வெறுத்து நிற்பதாக——

துக்கா : ஆ!

கிருஷ்ண : கலங்காதே, தேவி! இந்த மாளிகையிலேயே ஒரு மகாராணிக்குரிய அந்தஸ்துடன் நீ வாழ்ந்து வரலாம். ஆனால் என்னைப் பார்க்கவோ, பேசவோ விரும்பக் கூடாது.

துக்கா : ஐயோ! எவ்வளவு கொடுமையான தண்டனை?

கிருஷ்ண : தண்டனை உனக்கு மட்டுமல்ல, துக்கா! எனக்கும்தான். இது நமக்கு நாமே விதித்துக் கொண்ட ஆயுள் தண்டனை. அப்பாஜி! வாருங்கள்!

[கிருஷ்ண தேவராயரும் மற்றவர்களும் செல்கின்றனர்! துக்கா கதறி அழுகிறாள். அந்த அழுகுரல் மாளிகை யெங்கும் எதிரொலித்துக்கொண்டிருக்கிறது.]



# மணிபல்லவம்

## 25 - முரட்டுப் பிள்ளை

இளங்குமரன் சிந்தித்தான். நீலநாக மறவரின் அந்த வேண்டுகோளுக்குத் தான் எப்படி இணங்கினேன் என்பதை நினைத்துப் பார்த்தபோது அவனுக்கு மிகவும் வருத்தமாயிருந்தது. மறுத்துச் சொல்ல முடியாமல் தன்னை அந்த வேண்டுகோளுக்கு ஒப்புக் கொள்ளச் செய்த நீல நாகமறவரின் திறமையை வியந்தான் அவன். அவருடைய பேருருவம் நினைவுக்கு வந்தபோதே அவனுக்குப் பணிவும் அடக்கமும் உண்டாயிற்று.

‘இன்னும் சிறிது காலத்துக்கு நீ இந்தப் படைக்கலச் சாலைக்குள்ளேயே எனது கண்காணிப்பில் இருக்க வேண்டும். தனியாக நகருக்குள் எங்கும் போக வேண்டாம்’ என்று அவர் கட்டளையிடுவது போல் வேண்டிக் கொண்டபோது தன்னால் அதை மறுத்துச் சொல்ல முடியாமற் போன காரணம் என்ன என்பது நீண்ட நேரச் சிந்தனைக்குப் பின்பே அவனுக்குப் புரிந்தது.

‘தூய்மையான மனமும் தோற்றமும் உடைய சில பெரியவர்கள் நமக்கு முன்னால் உட்கார்ந்து பேசுகிறபோது நம்முடைய மனம் அகங்கார வெம்மை அழியப் பெற்று மழை பெய்த நிலம் போலக் குளிர்ந்து குழைந்து விடுகிறது. அப்போது நம்முடைய மனத்தில் பயங்களும், குழப்பங்களும், வாழ்க்கை ஆற்றாமைகளும் இருந்தால்கூட அவை நீங்கி விடுகின்றன. அந்தத் தூய்மைக்கு நமது மனம் தோற்றுப் போகிறது! நீலநாகமறவரை எதிர்த்துப் பேச முடியாமல் நாம் அடங்கி நின்றதும் இப்படித்தான் நேர்ந்திருக்க வேண்டும்’ என்று இளங்குமரன் உணர்ந்தான். தனக்கு ஏதோ பயங்கரத் துன்பங்கள் வரப் போவதாக நினைத்துக் கொண்டு மற்றவர்கள் அஞ்சி முன்னேற்பாடாகப் பாதுகாப்பதை அவன் விரும்பவில்லை. ‘பிறருடைய இரக்கத்தையும், அனுதாபத்தையும் எதிர்பார்த்துத் தவித்து

நா. பார்த்தசாரதி

அவற்றுக்காகவே ஏங்கிக் கொண்டிருப்பவன் கோழை; பிறர் மேல் அநுதாபமும், இரக்கமும் செலுத்துவதற்குத் துணிந்து நிற்பவன்தான் ஆண்மையுள்ள வீரன். அநுதாபத்தையும் இரக்கத்தையும் தன்னிடமிருந்து பிறருக்கு வழங்குவதுதான் வீரம்! அவற்றைத்தான் பிறரிடமிருந்து வாங்கிக் கொள்வது வீரமன்று'- என்பது போல் ஒரு முரட்டுப் பிடிவாதம் சிறு வயதில் இருந்தே இளங்குமரனுக்குப் பொருந்தியிருந்தது. அவனைத் தனியாக அழைத்துச் சென்று பேசிக் கொண்டிருந்த சமயத்தில் அவன் வாய் திறந்து கேட்காமலிருக்கும்போதே அவனது மனத்தில் இருந்த சில கேள்விகளைத் தாமாகவே புரிந்து கொண்டு கூறுகிறவர் போல் குறிப்பாகச் சில கருத்துக்களைக் கூறியிருந்தார் நீலநாக மறவர். அவற்றை யெல்லாம் இப்போது இரண்டாம் முறையாக நினைவின் விளிம்புக்குக் கொண்டு வந்து எண்ணிப் பார்த்தான் இளங்குமரன். அவ்வாறு எண்ணிப் பார்த்தபோது அவர் சொல்லியிருந்த ஒவ்வொரு கருத்தும் விடையறியாக் கேள்விகளாகத் தன் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்த ஒவ்வொரு வினுவுக்கும் விடை போல் அமைவதும் அவனுக்கு விளங்கிற்று.

"தம்பீ! மனத்தை வினாக் குழப்பிக் கொள்ளாதே. மனமும், நினைவுகளும் வளர்ந்து வளம் கொள்கிற வயதில் கவலைகள் புகுந்து அழிக்க விடக் கூடாது. கவலைகளுக்கு அழிந்து போய் விடாமல் கவலைகளை அழித்துவிட வேண்டிய வயது இது! கடலும், மலையும், வானமும், சூரியனும், சந்திரனும், தங்களுக்குத் தாயும், தந்தையும், யாரென்று தேடித் துயர் கொள்வதில்லை. பூமிக்குத் தாய் வானம். வானத்துக்குத் தாய் பூமி. பிரகிருதியே ஒரு தாய்தான் தம்பீ! ஆகாயத்தை உடம்பாகவும், திசைகளைக் கைகளாகவும், சூரிய சந்திரர்களைக் கண்களாகவும், மலைகளை மார்பாகவும், தரையைத் திருவடிகளாகவும் கொண்ட விசுவரூபமே தாயின் வடிவம்தான். அதையே நீயும் தாயாக நினைத்து வணங்கி விடு" என்று அவர் சொல்லியதற்குப் பொருள் 'தாயை நினைத்து வினாக் கலங்காதே' என்று தனக்கு அறிவுறுத்துவதுதான் என்பதை அவன் தெளிந்தான்.

"நீ செய்வதற்கு இருக்கும் செயலைக் காட்டிலும் உன்னுடைய நோக்கம் பெரிதாக இருக்க வேண்டும். அதைத்தான் இலட்சியம் என்கிறோம். நினைப்பதை யெல்லாம் பெரிதாக நினைப்பதற்குப் பழகிக் கொள். நினைவின் எல்லை விரிவாக இருக்கட்டும்" என்று இப்படிப் பல அறிவுரைகள் கூறியபின்பே அந்த வேண்டுகோளையும் கூறியிருந்தார் நீலநாக மறவர். நினைக்கும்போதெல்லாம் புதிதாகவும் நினைப்புக்கேற்ற விதமாகவும் மணக்கும் மனோரஞ்சிதப் பூவைப் போல் அவருடைய அறிவுரையில் குறிப்பாகப் பலவற்றை அவன் புரிந்து கொண்டான். எண்ணிப் பார்த்தால் திட்டமிட்டுத் தேவையறிந்து வேண்டிய அறிவுரையை வேண்டிய அளவு அவர் தனக்குத் தந்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது. மறுபடியும் அவருடைய முன்னேற்பாட்டை வியந்தான் அவன்.

கதக்கண்ணன் முதலிய நண்பர்களோடு அன்று மாலையில் ஆலமுற்றத்துச் சிவன் கோவிலுக்குப் போனுன் இளங்குமரன். வானத்தை மறைத்து வீழ்துகளைக் காலூன்றிப் பசுமைப் பந்தல் வேய்ந்ததுபோல் பெரிய ஆலமரமும் அதனருகே கோவிலும் மாலை நேரத்தில் மிக அழகாயிருந்தன. மணற் பரப்பைக் கடந்து கடல் என்னும் நீலமேனி நீர்ச் செல்வி நித்திய யௌவனத்தோடு அலைக் கைகளை அசைத்துக் கொண்டிருந்தாள். மேலைத்திசை வானத்தில் குங்கும வெள்ளம் பாய்ந்திருந்தது. இளங்குமரனும் நண்பர்களும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளாமல் அமைதியாக நடந்து கொண்டிருந்தார்கள். ஆலமுற்றத்துக் கோவில் படைக்கலச் சாலையைச் சேர்ந்த பகுதியாய் மிகவும் அருகில் இருந்ததால் தான் நண்பர்களின் துணையோடு இளங்குமரனைப் போகவிட்டிருந்தார் நீலநாக மறவர். கோவிலில் வழிபாட்டை முடித்துக் கொண்டு கடற்கரை மணற் பரப்பில் நண்பர்களுடனே நெடுநேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு இளங்குமரன் மீண்டும் படைக்கலச் சாலைக்குத் திரும்பியபோது அங்கே அவனை எதிர்பார்த்து ஓவியன் மணிமார்பன் வந்து காத்துக் கொண்டிருந்தான். தான் அப்போது நீலநாக மறவரின் படைக்கலச் சாலையில் வந்து தங்கியிருப்பதை அந்த ஓவியன் எப்படித் தெரிந்துகொண்டான் என்பது இளங்குமரனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

"நீ மறுபடியும் என்னைத் தேடிக் கொண்டு வந்திருப்பதைப் பார்த்தால் இன்னும் யாராவது என்னுடைய ஓவியத்தை வரைந்துகொண்டு வரச்சொல்லி உன்னை இங்கே அனுப்பியிருக்கிறார்களோ என்று சந்தேகமாயிருக்கிறது. அப்பனே! என்ன காரியமாக என்னிடம் வந்தாய்?" என்று இளங்குமரன் அவனை விசாரித்தான்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை ஐயா! ஒருமுறை உங்கள் ஓவியத்தை வரைந்து கொடுத்துவிட்டு நான் படுகிற பாடு

போதும். ஏழேழு பிறவிக்கு இப்படி அநுபவங்கள் இனிமேல் ஏற்படவே வேண்டாம்.''

விளையாட்டாகப் பேசுவதுபோல் சிரித்துப் பேசத் தொடங்கியிருந்த இளங்குமரன் ஓவியன் கூறிய மறுமொழியில் வேதனையும், துயரமும் இருந்ததைக் கேட்டுத் திகைத்தான். ஓவியன் அச்சம் கொள்ளும்படியான நிகழ்ச்சிகள் எவையேனும் நிகழ்ந்திருக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. அவன் ஓவியனைக் கேட்டான்:-

''பதற்றப் படாமல் நிதானமாகச் சொல், மணிமார்பா! என்னுடைய ஓவியத்தை வரைந்து கொடுத்ததனால் இப்படி என்னிடமே வந்து அலுத்துக் கொள்கிறாற் போல் உனக்கு என்ன துன்பங்கள் நேர்ந்து விட்டன?''

இதற்கு மணிமார்பன் மறுமொழி கூறவில்லை. இளங்குமரனைச் சூழ்ந்து நிற்கும் நண்பர்களைப் பார்த்துத் தயங்கினான். அந்தக் குறிப்பு இளங்குமரனுக்குப் புரிந்தது. ஓவியன் தன்னிடம் தனியாகப் பேசுவதற்கு விரும்புகிறான் என்று உணர்ந்தவனாக அவனை மட்டும் தனியே அழைத்துக் கொண்டு படைக்கலச் சாலையின் வேறு பகுதிக்குச் சென்றான் இளங்குமரன்.

''பிறருக்காக நான் துன்பப்படும்படி நேர்ந்தால் அதைப் பொறுத்துக் கொள்வேன் மணிமார்பா! ஆனால் என்னால் பிறர் துன்பப்பட நேருவதை நான் ஒரு போதும் பொறுத்துக் கொள்ள முடியாது. விவரமாக நடந்ததைச் சொல். நான் வெளியேறி வந்தபின் பட்டினப்பாக்கத்தில் அந்த மாளிகையில் என்ன நடந்தது? உனக்கு அந்தப் பெண் தருவதாக ஒப்புக் கொண்டிருந்த நூறு பொற்கழஞ்சுகளைத் தந்தாளா இல்லையா?''

''அதையெல்லாம் அப்புறம் சொல்கிறேன். முதலில் இந்த மடலை வாங்கிக் கொள்ளுங்கள். படித்துவிட்டுப் பேசலாம்'' என்று சுரமஞ்சரியின் மடலை எடுத்து நீட்டினான் மணிமார்பன். அவர்கள் நின்று பேசிக் கொண்டிருந்த பகுதியெல்லாம் தன் மணத்தைப் பரப்பியது அந்த நறுமண மடல்.

''ஆயிரங் காலம் பழகி அன்புகொண்டவனைப் போல் எனக்கு மடல் எழுத இவள் எப்படி உரிமை பெற்றாள்?'' என்று அருகிலிருந்த தீபத்தில் மடலைப் படித்து விட்டுக் கோபத்தோடு கேட்டான் இளங்குமரன். அதைக் கேட்டு மணிமார்பன் மெல்லச் சிரித்தான்.

''எதற்காகச் சிரிக்கிறாய்? சிரிப்பதற்கு இதில் என்ன இருக்கிறது?''

''ஒன்றுமில்லை! ஆனால் சற்றுமுன் நீங்கள் கூறியதை மறுபடியும் நினைத்துப் பார்த்தால் எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. உலகத்திலேயே கட்டுப்பாட்டுக்கும், கட்டளைக்கும் அடங்காமல் தன் விச்சையாகப் பிறந்து வளரும் உணர்வு அன்பு ஒன்றுதான். அதற்குக் கூட உரிமை தர மறுக்கிறீர்களே நீங்கள்?''

''மறுக்கவில்லை மணிமார்பா! இரண்டு நாள் சந்தித்துப் பேசிவிட்டோம் என்ற செருக்கில், 'நெஞ்சு களம் கொண்ட அன்பருக்கு, அநேக வணக்கங்களுடன் அடியாள் சுரமஞ்சரி எழுதும் மடல். நான் உங்களை மிக விரைவில் சந்திக்க விரும்புகிறேன். கூடுமானால் உடனே சந்திக்க விரும்புகிறேன். இந்தச் சந்திப்பில் என் நலனைவிட உங்கள் நலன்தான் அதிகம். உங்களிடம் சில செய்திகளை மனம் விட்டுப் பேசித் தெரிந்து கொள்ள வேண்டும். எங்கே எப்போது நாம் சந்திக்கலாமென்று இந்த மடல் கொண்டு வரும் ஓவியரிடம் அருள்கூர்ந்து சொல்லியனுப்புங்கள்' என்று எழுதியிருக்கிறாளே அப்பனே; இவள் கூப்பிட்ட நேரத்துக்குக் கூப்பிட்ட இடத்திலெல்லாம் வந்து சந்திக்க இளங்குமரன் இவளுடைய ஏவலாளனில்லையே!'' என்று சொல்லிக்கொண்டே மணம் நிறைந்த அந்த வெண் தாழை மடலைக் கசக்கி எறியப் போனான் இளங்குமரன். அப்போது அவன் அப்படிச் செய்துவிடாமல் ஓவியன் அவனுடைய கைகளைப் பற்றிக் கொண்டு விட்டான்.

''பூக்களைக் கசக்கி எறிவது மங்கலமான செயல் அல்ல, ஐயா! மென்மையான மனம் படைத்தவர்கள் அதை விரும்ப மாட்டார்கள்.''

'எனக்கு மென்மையான மனம் இல்லையென்றே வைத்துக்கொள்! அதற்காக நான் வருத்தப்பட மாட்டேன். இந்தா, இதை அவளிடமே திருப்பிக் கொண்டு போய்க் கொடு'' என்று கசக்கி எறிவதற்கிருந்த மடலை மணிமார்பனுடைய கைகளில் திணித்தான் இளங்குமரன். மணிமார்பனின் நிலை தவிப்புக்குரியதாகி விட்டது. என்ன செய்தாலும், எவ்வளவு தெளிவாக எடுத்துச் சொன்னாலும் இளங்குமரனின் மனத்தை நெகிழச் செய்வதற்கு இயலாதென்று தோன்றியது ஓவியனுக்கு. அதைப் பற்றி மறு பேச்சுப் பேசாமல் அவன் திருப்பிக் கொடுத்த மடலை வாங்கிக் கொண்டு, பேச்சை வேறு திசையில் திருப்பினான் மணிமார்பன். இளங்குமரன் பட்டினப்பாக்கத்து மாளிகையிலிருந்து வெளியேறியபின் தனக்கு அங்கு ஏற்பட்ட

அச்சமூட்டும் அநுபவங்களை மணிமார்பன் அவனுக்கு விரிவாகச் சொன்னான். தன்னை அந்த மாளிகையிலேயே ஓவியனாக நியமித்திருப்பதையும் சொன்னான். சுரமஞ்சரியின் தந்தையும், நகைவேழம்பர் என்னும் ஒற்றைக்கண் மனிதரும் சந்தேகத்துக்கும் பயப்படுவதற்கும் உரியவர்களா யிருந்ததையும், அவர்கள் இருவரும் இளங்குமரன் மேல் என்ன காரணத்துக்காகவோ கவனம் செலுத்திக் கொண்டிருப்பதையும் விவரித்துக் கூறி விட்டான் மணிமார்பன். இவற்றையெல்லாம் கேட்ட பின்னர் இளங்குமரனின் மனத்தில் மேலும் சந்தேகங்கள் உண்டாயின. அந்த மாளிகையிலிருந்து தான் வெளியேறிய போது அதே ஒற்றைக் கண் மனிதர் தன்னைப் பின் தொடர்ந்து வந்ததையும் அவன் நினைவு கூர்ந்தான். ஒற்றைக் கண்ணரைப் போலவே சுரமஞ்சரியின் தோழி வசந்தமாலையும் தன்னைப் பின்தொடர்ந்து வந்ததனால்தான் நீலநாக மறவரின் படைக்கலச் சாலையில் தான் தங்கியிருப்பது அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதையும் இப்போது இளங்குமரனால் அநுமானம் செய்ய முடிந்தது. பட்டினப் பாக்கத்து எட்டிப்பட்டம் பெற்ற பெருநிதிச் செல்வரும், அவரிடம் இருக்கும் ஒற்றைக்கண் மனிதரும் எதற்காகவோ தன்னைப் பிடித்து அழிக்கக் கண்ணி விரிக்கிறார்கள் என்று தோன்றியது அவனுக்கு. ஒருவேளை அவர்கள் விரிக்கும் அந்த வலையில் தன்னைச் சிக்க வைப்பதற்கு இந்தப் பெண் சுரமஞ்சரியும் உடந்தையா யிருக்கலாமோ என்றும் சந்தேகமுண்டாயிற்று இளங்குமரனுக்கு. சுரமஞ்சரியைப் பற்றிய தன்னுடைய சந்தேகத்தை மணிமார்பனிடம் வெளியிட்டு, 'அப்படியும் இருக்கலாமோ?' என்று வினவினான் இளங்குமரன். ஆனால் மணிமார்பன் அதை மிகவும் வன்மையாக மறுத்துச் சொல்லி விட்டான். "ஒரு போதும் அப்படி இருக்காது, ஐயா! அந்தப் பெண் உங்கள்மேல் மெய்யாகவே அன்பு செலுத்துகிறாள். தன் தந்தையாரும் நகைவேழம்பரும் உங்களைப் பற்றி அப்படி நடந்து கொள்வது அவளுக்கே பிடிக்கவில்லை. அந்தப் பெண் நிச்சயமாக உங்களுக்குத் துரோகம் செய்யமாட்டாள். எப்போதாவது அந்த ஏழடுக்கு மாளிகையிலிருந்து உங்களுக்குப் பேராபத்து வருவதா யிருந்தால் அப்போது உங்களைக் காப்பாற்றுவதற்கு அவள் தான் முன் நிற்பாள். பெண்களின் உள்ளம் அன்பு மயமானது. தங்களால் விரும்பப் படுகிறவர்களுக்கு வஞ்சகமிழைக்க அன்பு இடந் தராது, ஐயா!"

"அப்படி எல்லாப் பெண்களையும் நம்பி விட முடியாது, அப்பனே! பெண்களின் வஞ்சகத்தால் உலகத்தில் பிறந்த மகா காவியங்கள் பல."

"ஆனால் பெண்களின் அன்பினால் பிறந்த மகா காவியங்கள் அவற்றைக் காட்டிலும் பன்மடங்கு அதிகம் ஐயா!"

"அப்படி மகாகாவியங்களைத் தோற்றுவிக்கிற அன்பை அந்த ஏழடுக்கு மாளிகையிலிருந்து நாம் எதிர்பார்க்க முடியாது, மணிமார்பா!"

"மாளிகை என்ன செய்யும், ஐயா! மனம் கொண்டதுதான் மாளிகை. அன்பின் சக்தி அளப்பரியது. அதற்கு முன் சாதாரண உணர்வுகள் தோற்று விடுகின்றன. ஒரு காலத்தில் இதே பெண்ணின் சிரிப்புக்கு நீங்கள் தோற்றுப் போனால்கூட நான் ஆச்சரியப்பட மாட்டேன்."

ஓவியன் மேலே பேசுவதற்குள் பளீரென்று அவன் கன்னத்தில் ஒரு பேயறை விழுந்தது. "நாவை அடக்கிப் பேசு, அப்பனே! இப்படி இன்னொருவர் பேசியிருந்தால் பல்லை உதிர்த்துக் கையில் கொடுத்திருப்பேன். போய் விடு...இனி ஒரு கணமும் இங்கே நிற்காதே" என்று கொதிப்போடு கூக்குரலிட்டுக்கொண்டே அந்தக் கணமே மணிமார்பனைப் பிடரியில் கைவைத்துத் தள்ளி வாயில் வரையில் சென்று துரத்திவிட்டு வந்தான் இளங்குமரன்.

'பிறரால் எனக்குத் துன்பம் வந்தாலும் பொறுப்பேன், பிறர் என்னால் துன்புற விடமாட்டேன்' என்று கூறிய அதே மனிதனின் கைகள்தான் தன்னைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளின என்பதை ஓவியனால் நம்பவே முடியவில்லை. இளங்குமரன் இவ்வளவு உணர்ச்சி வசப்பட்டு நடந்து கொள்வான் என்று கனவிலும் மணிமார்பன் எதிர்பார்க்கவில்லை.

கசக்கித் திருப்பியளிக்கப்பட்ட தாழை மடலைப்போலவே அவனும் மன வேதனையுடன் கசங்கிய நினைவுகளோடு அந்த அகால நேரத்திலே தனியாகப் பட்டினப் பாக்கத்துக்குத் திரும்பினான்.

தான் சுரமஞ்சரியின் மடலைக் கொடுப்பதற்காக மாளிகையிலிருந்து வெளியேறி மருவூர்ப்பாக்கத்துக்கு இளங்குமரனைக் காணச் சென்று திரும்புவது ஒருவருக்கும் தெரியாமல் இருக்க வேண்டுமென்று நினைத்திருந்தான் ஓவியன். ஆனால் அதுவும் அவன் நினைத்தபடி நடக்கவில்லை. நினைத்திருந்ததற்கு நேர் மாறாகவே நடந்தது.

# நீங்களும்
# இவ்வணங்கின்
# அழகிய
# கேசத்தைப் பெற
# விரும்புவீர்கள்!

ஓர் திருப்பம், ஓர் பார்வை—அவளுடைய அழகிய கேசம் உங்கள் மனதில் அழியாத இடம் பெறுகிறது. பிறகு, "இவ்வழகிய கேசம் எனக்கிருந்தால்", என்று நினைக்கிறீர்கள். மிகச் சிறந்த மூலதாரப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட 'கேஷா' அபரிமிதமான அழகிய கேசத்தை உங்களுக்கு அளிப்பதுடன், உங்கள் கேசத்திற்கு முற்றிலும் புதிய அழகிய வனப்பை அளிக்கிறது—நீங்கள் விரும்பும் அழகு உங்களை நாடுகிறது. கேஷாவின் மென்மையான நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

உங்கள் கேச
பாதுகாப்பு
திட்டத்திற்கு

## கேஷா




லோமா தயாரிப்பாளரின்
இன்னும் ஒரு
சிறந்த தயாரிப்பு



TAM

பூரண ஏஜெண்டுகள்:
**எம். எம். கம்பாத்வாலா**
அஹமதாபாத்-1

ஏஜெண்டுகள்:
**ஸி. நரோத்தம் & கோ.,**
பம்பாய்—2

சென்னை ஏஜண்டுகள்: ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள்: சிருன் கதிர் & கோ., 41, 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# 26. கொலைத் தழும்பேறிய கைகள்

**ப**யந்து கொண்டே திரும்பி வந்த ஓவியன் பிரதான வாயிலில் நுழையும் போது மாளிகை அமைதியா யிருந்தது. சுரமஞ்சரி முன்னேற்பாடாகச் சொல்லி வைத்திருந்ததனாலோ என்னவோ வாயிற் காவலர்கள் எவரும் அவனைத் தடுக்க வில்லை. அவன் திரும்பி வருவதை எதிர் பார்த்துக் காத்திருப்பதற்கு அடையாள மாகச் சுரமஞ்சரியின் மாடத்தில் மட்டும் தீபங்களின் ஒளி தெரிந்தது.

'நல்ல செய்தியா யிருந்தால் உடனே சுரமஞ்சரியின் மாடத்துக்கு ஓடிப் போய்த் தெரிவிக்கலாம். நீங்கள் கொடுத் தனுப்பிய மடலை அந்த முரட்டு இளைஞர் வாங்கிப் படித்து விட்டு என்னிடமே திருப்பிக் கசக்கி எறிந்து விட்டார் என்று தயங்காமல் அவளிடம் எப்படிச் சொல்வது? அவ்வளவு நேரமாக இனிய கனவுகளோடு காத்திருக்கும் அந்தப் பெண் மனம் இதைக் கேட்டால் என்ன பாடுபடும்?' --- மென்மையான மனம் படைத்த அந்த ஓவியன் தயங்கினான். ஒளி நிறைந்து தோன்றும் சுரமஞ்சரியின் மாடத்திலும் மனத்திலும் இருள் சேர்க் கும் சொற்களைத் தான் போய்ச் சொல்ல லாமா, வேண்டாமா என்று தவித் தான். 'கலைஞர்களுக்கு, அவர்களிடம் அமைந்திருக்கும் மென்மையான கலைத் திறமையைப் போலவே, பிறர் கூசாமற் செய்யும் முரட்டுக் காரியங்களைத் தாங்கள் நினைக்கவும் கூசுகிற மென்மை யான மனத்தையும் கடவுள் கொடுத்துத் தொலைத்திருக்கிறாரே' என்று வருந்தி னான் அவன்.

தன்னைப் போன்ற கலைஞர்களுக்கு இந்த மென்மைதான் பெரிய பலவீன மென்று தோன்றியது அவனுக்கு. இந்த ஒரு பலவீனம் மட்டும் இல்லாவிட்டால் தயக்கமின்றிச் சுரமஞ்சரியின் மாடத் துக்கு ஏறிச் சென்று 'உங்கள் மடலை அவர் கசக்கி எறிந்துவிட்டார் அம்மணி' என்று உடனே சொல்லி விடலாமே-' என்று இத்தகைய தயக்கத்தோடு சுர மஞ்சரியின் மாடத்துக்குச் செல்வதற் கான படிகளின் கீழே நின்றான் மணி மார்பன்.

மாளிகையே அமைதியில் ஆழ்ந்திருந்த அந்த அகால வேளையில் தான் மட்டும் தனியாய் அங்கே நிற்கிற சூழ்நிலையே ஓவியனுக்குப் பயமூட்டுவதா யிருந்தது. மூச்சு விட்டாலும் இரைந்து கேட்கக் கூடிய அந்த அமைதியில் ஓசையெழாமல் படிகளில் ஏறி மேலே செல்வது எவ்வாறு என்று அவனுக்குப் புரியவில்லை.

கீழிருந்து மேலே போகும் படிகளில் முதல் பத்துப் பன்னிரண்டு படிகள் வரை ஒரே இருட்டாயிருந்தது. அப்பாலுள்ள படிகளின் மேல் மாடத்து விளக்கொளி இலேசாக மங்கிப் பரவியிருந்தது. தயங் கியபடியே சிறிது நேரம் நின்ற பின், 'விளைவு என்ன ஆனாலும் சரி! நான் மேலே சென்று சுரமஞ்சரியைப் பார்த்து இளங்குமரன் மடலைத் திருப்பியளித்து அவமானப் படுத்திய விவரத்தைச் சொல்லிவிட வேண்டியதுதான்' என்று உறுதி செய்து கொண்டு படிகளில் ஏறினான் மணிமார்பன்.

முதற் படியிலிருந்து இரண்டாவது படிக்கு அவன் ஏறியபோது படியோரத்து இருளிலிருந்து யாரோ அவன் வாயை இறுகப் பொத்தி மோதித் தரையில் தள்ளுவது போல் கீழ்ப்புறம் இறக்கி இழுத்துக் கொண்டு வரவே அவன் உடலில் இரத்தம் உறைந்து உணர்வு மரத்துப் போகத் தொடங்கியது. அவன் திமிறிக் கொண்டு ஓடவோ, கூச்ச லிடவோ, இடம் கொடுக்காத முரட்டுக் கைகளாக இருந்தன அவை.

சிறிது தொலைவு கொலைத் தழும் பேறினவை போன்ற அந்தக் கைகளின் பிடியில் இறுகிக் கொண்டே வந்தபின் சற்றே ஒளி பரவியிருந்த ஓரிடத்தில் கண்களை அகலத் திறந்து பார்த்தபோது, நகைவேழம்பரின் முகம், "கூச்சலிட்டா யானால் அநாவசியமாக இப்போது இந்த இடத்தில் ஒரு கொலை விழ நேரிடும்" என்று அவன் காதருகே குனிந்து வாய் திறந்து கூறியது. வாயைப் பொத்தி யிருந்த கையை எடுத்து விட்டு இடுப்பி லிருந்து குறுவாள் ஒன்றை எடுத்து அவன் கழுத்தின் மிக அருகில் சொருகி விடப் போவது போல் பிடித்துக் காட் டினார் அவர். பகலிலேயே பூத பயங்கரம் காட்டும் அந்த முகம் இப்போது இரவில் இன்னும் குரூரமாகத் தோற்றமளித்தது. மணிமார்பனுக்குச் சப்த நாடிகளும்



ஒடுங்கி விட்டன. 'வெளியேறிச் சென்று விடுவதற்கு ஓர் அற்புத மான வாய்ப்புக் கிடைத்திருந்தும் பயன்படுத்திக் கொண்டு தப்பிப் போகாமல் மறுபடியும் திரும்பி இந்த மாளிகைக்கு ஏன் வந்து தொலைத்தோம்?' என்று வருந்தினான் அவன். அவருடைய பிடி இழுத்த இழுப்புக்கு மீறாமல் அவன் சவம்போல் இழுபட்டுக் கொண்டு போனான்.

மாளிகைத் தோட்டத்தின் அடர்த்தியான ஒரு பகுதிக்குச் சென்று அடித்துப் போடுவதுபோல் பிடியை உதறி அவனைக் கீழே தள்ளினார் அவர். ஓவியன் நடுங்கினபடியே தட்டுத்தடுமாறி மெல்ல எழுந்து நின்றான்.

"எங்கே போயிருந்தாய் இவ்வளவு நேரம்? உண்மையை மறைக்காமல் அப்படியே சொல்."

"சொல்லாவிட்டால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டான் ஓவியன்.

"புதிதாக ஒன்றும் செய்துவிட மாட்டேன். இதோ, இந்த இரண்டு கைகளின் பிடியில் இவற்றுக்கு உரியவனை இதுவரை எதிர்த்திருக்கிறவர்கள் எத்தனை பேரோ அத்தனை பேருடைய உயிர்களும் எப்படித் துடிதுடித்துச் செத்திருக்கின்றன என்பது உனக்குத் தெரியாது. நீ விரும்பினால் அந்த அநுபவத்தை உனக்கும் அளிப்பதற்கு எனக்குச் சம்மதம்தான்!"

"கொலைகாரனுக்குத் தற்புகழ்ச்சி ஒரு கேடா?"

"போர்க்களங்களில் நிறையக் கொலைகள் செய்தவர்களை வீரர் என்றுதானே சொல்கிறார்கள்? அப்படியானால் இன்று உன்னையும் சேர்த்து நான்......"

"போதும் உங்கள் கொலைப் பெருமை! தெரிந்துதானே கடவுள் உங்கள் முகத்தில் இலட்சணத்தைக் கொலை செய்து வைத்திருக்கிறார்?"

"சந்தேக மென்ன? என் கைகளில் அகப்பட்டிருந்தால் அந்தக் கடவுளை யும்......" என்று குரூரமாகச் சிரித்தார் நகைவேழம்பர். அந்த விகார மனிதர் நாத்திகம் தழும்பேறிய மனத்தை யுடையவர் என்று தோன்றியது மணி மார்பனுக்கு. எதையும் செய்யக் கூசாத கொடூர சித்தமுடையவர் என்பது அவ ரைப் பார்த்தாலே தெரிந்தது.

"மறுபடியும் கேட்கிறேன். எங்கே போயிருந்தாய்? யாரைக் கேட்டுப் போயிருந்தாய்?"

"பெரிதாகப் பயமுறுத்துகிறீர்களே! என்னை அடிமையாக விலைக்கு வாங்கி யிருக்கிறீர்களா, என்ன? எல்லாம் கேட்க வேண்டியவர்களைக் கேட்டுக் கொண்டு போக வேண்டிய இடத்துக்குத் தான் போயிருந்தேன். என்னைப் பாதுகாக்கச் சொல்லித்தான் உங்களுக்குக் கட்டளை யிட்டிருக்கிறார்கள். கொலை செய்யச் சொல்லிக் கட்டளை யிடவில்லை."

"யார் அப்படி எனக்குக் கட்டளை யிட்டிருக்கிறார்களோ?"

"வேறு யார்? இந்த மாளிகைக்கு உரியவர்தான்!"

"அடடா! அதைச் சொல்கிறாயா? உனக்கு இந்த மாளிகைக்கு உரியவரைத் தெரியாது. அவர் கட்டளையிட்டிருக்கும் சொற்களை மட்டும்தான் உனக்குத் தெரியும். எனக்கு அந்தச் சொற்களின் பொருளும் தெரியும். அவரையும் தெரியும். இந்த மாளிகையில் சொற்க ளுக்காக அர்த்தம் கிடையாது. அர்த்தத் துக்காகத்தான் சொற்கள் உண்டு."

"இங்கேதான் எல்லாமே தலைகீழாக இருக்கிறதே?..."

"இன்னும் சிறிது நேரத்தில் நீ என் கைகளினால் துடிதுடித்துச் சாகப்போவது உள்பட! ஏனென்றால் இங்கே தலைகீழாகக் கட்டப்பட்ட பின்புதான் கொலையைக் கூடச் செய்வது வழக்கம். சந்தேகமா யிருந்தால் என்னோடு வா. உனக்குக் காட்டுகிறேன்" என்று மறுபடியும் அவனை இறுகப் பிடித்து இழுத்துக் கொண்டு நடந்தார் அவர்.

ஒரு கையில் ஓவியனையும், இன்னொரு கையில் தீப்பந்த மொன்றையும் பிடித் துக் கொண்டு அந்த மாளிகையின் கீழே பாதாள அறையாக அமைக்கப்பட் டிருந்த பொதியறைக்குச் செல்லும் சுரங்க வழிப் படிகளில் இறங்கினார் நகைவேழம்பர். அந்தப் பாதாள அறை யில் முடை நாற்றம் குடலைப் பிடுங்கியது. கொடிய வன விலங்குகளான புலி சிங் கங்கள் இருக்கும் பகுதியில் அப்படி நாற்றம் வருவதுண்டு. கீழே பொதி யறைக்குள் இறங்கிப் பார்த்தபோது மெய்யாகவே அவ்விடத்தில் பக்கத்துக்கு ஒன்றாகப் புலிகள் அடைக்கப் பெற்ற இரும்புக் கூண்டுகள் இருந்தன. கொள்ளி போல் மின்னும் செந்தழற் கண்களுடன் செவ்வரிக் கோலங் காட்டும் வாட்ட சாட்டமான வேங்கைப் புலிகள் இரண்டு கூண்டிலும் பசியோடு உலாவிக் கொண் டிருந்தன. அந்த இருளில் அவை பயங் கரமாய்த் தோன்றின.

"பார்த்தாயா?" என்றார் நகை வேழம்பர். ஓவியனுக்கு நாக்கு மேலண் ணத்தில் ஒட்டிக் கொண்டு விட்டது. பேச வரவில்லை. தீப்பந்தத்தைத் தூக் கிக் காட்டிக் கொண்டே கூறினார் அவர்: "அதோ இரண்டு புலிக் கூண்டுக்கும் நடுவே மேல் விட்டச் சுவரில் ஒரு பெரிய இரும்பு வளையம் தொங்குகிறது, பார்த் தாயா; அதில் தண்டனைக்குரிய மனி தனைக் கயிற்றில் தலைகீழாகக் கட்டித் தொங்க விட்டு மேலே போய் நின்று கொண்டு இரண்டு புலிக் கூண்டுகளின் கதவிலும் இணைக்கப்பட்டிருக்கும் இரும் புச் சங்கிலியை இழுத்துக் கதவுகளைத் திறந்து விட்டு விடுவோம். பின்பு புலி களுக்கு விருந்துக் கொண்டாட்டம்தான். அதோ பார், சுற்றிலும் எத்தனையோ மனிதர்கள் இங்கு அழிந்திருக்கும் சுவ டுகள் தெரிகின்றன" என்று தரையில் சுற்றிலும் சிதறிக் கிடந்த எலும்பு களையும் மண்டை ஓடுகளையும் காண் பித்தார் அந்தக் கொடிய மனிதர். மணிமார்பனுக்கு எலும்புக் குருத்துகளில் நெருப்புக் குழம்பு ஊற்றினாற் போல் உடம்பெங்கும் பயம் சிலிர்த்தது. "உனக் குச் சந்தேகமாயிருந்தால் இதோ பார்! ஆட்களை எப்படித் தலைகீழாய்த் தொங்க விடுவதென்று காண்பிக்கிறேன்" என்று சொல்லித் தீப்பந்தத்தை அவன் கையில் கொடுத்து விட்டுக் கீழே இறங்கி ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு மேல் உள்ள இரும்பு வளையத்தில் பாதங் களை நுழைத்துக் கோத்தபடி இரண்டு கணம் தாமே தலை கீழாகத் தொங்கிக் காண்பித்தார் நகைவேழம்பர். அப்போது நர வாடை கண்ட அந்தப் புலிகள் உறுமியதையும் வாலைச் சுழற்றி அடித்துக் கொண்டு கூண்டிலிருந்து வெளியே பாய முயன்றதையும் பார்த்தபோது ஓவிய னுக்குக் குடல் குலுங்கி நடுங்கியது.

ஒரே ஒரு விநாடி அந்த மென்மையான கலை உள்ளத்திலும் கொலைவெறி கன்றிய ஆசை ஒன்று உண்டாயிற்று. 'அப்படியே தீப்பந்தத்தோடு மேலே ஓடிப் போய்ப் புலிக் கூண்டுக் கதவுகளை இழுக்கும் சங் கிலியைப் பிடித்திழுத்து நகைவேழம் பரைப் பழி வாங்கி விட்டால் என்ன?' என்று நினைத்தான் ஓவியன். **(தொடரும்)**

# நல்லதையே நாடுங்கள்

# ஸாவ்லான் உபயோகியுங்கள்

ஆன்டிஸெப்டிக் திரவம்

## நோய்பரவாமல் தடுத்துசுத்தம் செய்கிறது

'ஹிபிடேன்' 'செடவ்லான்' இரு கிருமிநாசினிகள் கொண்டது

வேறு எந்த ஆன்டிஸெப்டிக்கைக் காட்டிலும் அதிகமான கிருமிகளையும் எல்லா விதமான கிருமிகளையும் கொல்லுகிறது.

'டிசாமு' வாக உபயோகிக்கலாம்.

தலையில் பொடுகைத் தடுக்கிறது.
தேவதாருவின் நறுமணமுடையது
வலிக்காது. வேதனையளிக்காது.

மற்ற 'ஸாவ்லான்' தயாரிப்புகள்
ஸாவ்லான் ஆன்டிஸெப்டிக் கிரீம்
ஸாவ்லான் ஆன்டிஸெப்டிக் ஸலெஞ்ச்
ஸாவ்லான் பேபி பவுடர்




இம்பீரியல் கெமிகல்
இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்.

கல்கத்தா பம்பாய்
சென்னை புதுடெல்லி

ISC-32 TM

# எல்லோரும் நம்மவர்கள்

"ரகு! நடந்தவைகளை மறந்துவிடு. இப்படிப் பைத்தியக்காரனைப் போல் எத்தனை நாட்கள் வாழப் போகிறாய்? நான் என் மனத்தைக் கல்லாக்கிக் கொள்ளவில்லையா...?" என்றாள் ராஜரட்னா. அவள் கண்கள் இலேசாகக் கலங்கியிருந்தன.

"ராஜரட்னா! மனத்தைக் கல்லாக்கி விடலாம். ஆனால் வாழ்க்கை கண்ணாடியாகி விட்டால்....?"

"ரகு இப்பொழுதெல்லாம் தத்துவம் பேசுவதே உனக்குப் பழக்கமாகிவிட்டது. கமலா என் சகோதரி. அவள்மீது எவ்வளவு அன்பு வைத்திருந்தேனோ, அவ்வளவு உன் மேலும் எனக்கு இருக்கிறது. நீயும் என்னை ஏமாற்றி விடாதே!"

"நாமிருவருமே ஏமாந்து விட்டோம்" என்றான் ரகு.

ரயில் புறப்படப் போகிறது என்று எச்சரிக்கை செய்ய மணி அடித்தது.

ரகுநாதன் இரண்டாம் வகுப்புப் பெட்டிக்குள் ஏறினான். கதவை அடித்துச் சாத்தி விட்டு ராஜரட்னா ஜன்னல் பக்கம் வந்து. 'ரகு! நடந்தவைகளையெல்லாம் மறந்து விடு. மட்டக்களப்புக்குப் போனதும் கடிதம் எழுது" என்று கூறி ரகுவின் கையைக் குலுக்கினாள். வண்டி மெல்ல நகர்ந்தது. ரயில் வண்டி கண்ணுக்கு மறையும் வரை பார்த்து நின்றாள் ராஜரட்னா. கண் கலங்கியது.



வெட்கமும் துக்கமும் நிறைந்த பயங்கரமான சம்பவங்களுக்குப் பிறகு இன்றுதான் இலங்கைப் புகையிரத வண்டிகள் ஒழுங்காக இயங்க ஆரம்பித்தன.

கொழும்புக் கோட்டை நிலையத்தில் இருந்து மட்டக்களப்புக்குச் செல்லும் ரயில் வண்டி, இருட்டைக் கிழித்துக் கொண்டு நிதானமாக முன்னேறிக் கொண்டிருந்தது.

மக்கள் மனத்தில் பீதி இன்னும் மறையவில்லை. விரல் விட்டு எண்ணக் கூடிய பிரயாணிகள்தான் வண்டியில் இருந்தனர். இரண்டாம் வகுப்பு வண்டி வெறிச்சிட்டிருந்

தது. ஒரு மூலையில் ரகுநாதன் தனியாக உட்கார்ந்திருந்தான். அவன் பக்கத்தில் ஒரு தோல் பை. அவன் முகம் வண்டி முகட்டைப் பார்த்துக் கொண்டிருந்தாலும், பார்வை அதையும் கடந்து எங்கோ ஒரு சூனியத்தில் லயித்திருந்தது. அவன் மனம் ஒரு நிலையில் இல்லை. முன்னும் பின்னும் மூரணுக அலைந்து கொண்டிருந்தது.

சுமனவை நினைக்கும்போது அடிவயிற்றில் தீ கொழுந்து விட்டெரிந்தது அவனுக்கு. சாதாரணமாக மறந்துவிடக் கூடியவளா சுமனு? அவள் அடிக்கடி சொல்லுவாள்: "எல்லாரும் நல்லவர்கள்; எல்லாரும் நம்மவர்கள்." இந்த வார்த்தையில் தான் எவ்வளவு நம்பிக்கை அவளுக்கு? அவள் தூய்மையானவள் விசால மனத்தினள். அவளுடைய எண்ணச் சுவடுகள் என்றும் அழியா.

ரகுநாதன் சர்வகலாசாலையில் படித்துக் கொண்டிருக்கும்பொழுதுதான் சுமனுவின் அண்ணனுடைய நட்பு கிடைத்தது. அந்த நட்பின் பாதையிலே சுமனுவும் மெல்ல மெல்ல ரகுநாதனை நெருங்கினுள். அதில் ஏற்பட்ட பிணைப்பு நெருக்கம் இருவரையும் இணை பிரியாத நண்பர்களாக்கி விட்டது.

படிப்பு முடிந்து பட்டத்தைச் சுமந்து கொண்டு மட்டக்களப்புக்கு வந்தான் ரகுநதன். படிப்பைக் கொண்டு வயிறு வளர்க்க வேண்டுமென்ற அவசியம் இருக்கவில்லை. கல்குடாவில் இருந்த தென்னந் தோட்டம் ஒன்றே போதும், பத்துத் தலைமுறைகளுக்கு!

தமிழர்களும், சிங்களவர்களும் சகோதரர் போல் வாழ்ந்த காலம் ஒன்றிருந்தது! அது பெருமைப்படவேண்டியகாலம்.





இடைக்காலத்தில் எழுந்த அர்த்தமற்ற அரசியல் உரிமை என்ற நச்சுப்புகையை மக்கள் என்று மோப்பம் பிடிக்க ஆரம்பித்தார்களோ, அன்றிலிருந்து நாட்டின் இருதயம் பாழடைந்து விட்டது. ஒருவரை யொருவர் கொன்று குவிக்கும் நிலையில் மக்கள் அலைந்து திரிந்து கொண்டிருந்தனர்.

இந்தச் சமயத்தில்தான் ரகுநாதனின் கல்குடாத் தோட்டத்தில் வந்து இறங்கினுள் சுமனு.

அசோக வனத்தில் அனுமான் மூட்டிய தீயைப் போல், இனவெறி மக்கள் மனத்தில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்தது.

பொலன்னறுவையில் தமிழர்கள் வந்து காரை மறித்து நெருப்பு வைத்து விட்டார்கள். சந்திவெளியில் சிங்களவர்கள் வந்த காரைத் துப்பாக்கியால் சுட்டு இரண்டு பேர்கள் கொலையுண்டு கிடந்தனர். கல்குடாவை அடுத்த பாசிக்குடாவில் வாடி இறங்கியிருக்கும் மீன்பிடி சிங்களவர்களைத் தாக்கத் தமிழர்கள் ஆயத்தம் செய்தார்கள். இப்படி எத்தனை எத்தனையோ?

காற்றேறி வெடிக்க ஆயத்தமாகும் ரப்பர் பலூனைப் போல், வதந்திகளால் வெறியேறி வெடிக்க ஆயத்தமாக இருந்தது மக்கள் மனம்.

இந்தச் செய்திகள் கல்குடாத் தோட்டத்தில் இருந்த ரகுநாதனுக்கு எட்டியது. நாடு இருக்கும் நிலையில் சுமனு தமிழ்ப் பிரதேசத்துக்குள் நுழைந்தது தவறுதான். வந்தவளை என்ன செய்வது? எப்படியும் காப்பாற்றித் தானுக வேண்டும். ரகுநாதன் தீவிரமாக யோசித்தான்.

சுமனுவும் அவனும் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். இரவு 9-15க்கு வாழைச்சேனைக்கு வருகிற-

**பித்தன்**

மட்டக்களப்பில் இருந்து கொழும்புக்குப் போகும் ரயில் வண்டியில் கமனா கொழும்புக்குப் போய்ச் சேர்வதென்று. இந்த ஆலோசனைக்குப் பிறகு ரகுநாதன் சற்றுத் தெளிவு பெற்றான்.

இத்தருணத்தில் தோட்டக் கங்காணி ஓடி வந்து, "ஐயா! கொழும்பு ரயில் மட்டக்களப்பை விட்டுப் புறப்பட்டது. ஒன்றரை மைல் தொலைவில் தண்டவாளத்தை விட்டுச் சரிஞ்சிட்டுதாம். பொட்டி எல்லாம் ஒடிஞ்சிபோய் ஒருத்தர்கூடத் தப்பலியாம்" என்றார்.

"உண்மையாகவா கங்காணியார்...?"

"மெய்தானய்யா. ரயில் நிலையத்தில்தான் சொன்னாங்க."

ரகுநாதன் ஒன்றுமே பேசாமல் யோசித்துக் கொண்டு நின்றான்.

"அப்புறம் நம்ம தோட்டத்துக்குள்ளே யாரோ சிங்களப் பெண் ஒருத்தி ஒளிந்து கொண்டிருக்கிறாளாம்... அவளை இன்று ராவைக்குள்ள அப்புறப்படுத்த வேணுமாம்."

"யார் சொன்னது...?" என்று ரகுநாதன் கோபத்தில் கத்தினான்.

"ஊருக்குள்ளேதான் சொல்றாங்கய்யா!"

"தோட்டத்துக்குள் யாராவது நுழைந்தால் சுட்டுவிடுவேன்" என்றான் ரகுநாதன்.

"ஐயா, யோசனையா எதையும் செய்யுங்க. ஊரை எதிர்த்து நாம என்ன செய்ய முடியும்?" என்றார் கங்காணியார்.

ரகுநாதன் யோசித்தான். கங்காணி சொல்வதும் சரிதான். யோசனையால்தான் காரியத்தைச் சாதிக்க முடியும். எப்படிச் செய்வது? ரகுநாதன் தலையில் பாரம் ஏறிக் கொண்டிருந்தது

உடல் குலுங்கிய அதிர்ச்சியில் சிந்தனை கலைந்து நிமிர்ந்தான் ரகுநாதன். ரயில் வண்டி குருநாகல் நிலையத்தில் நின்று கொண்டிருந்தது. குருநாகல் ரயில் நிலையமா அப்படி வாடிக்கிடந்தது? ரயில் நிலையம் மட்டுமல்ல மனிதர்கள் உள்ளமும் வாடித்தான் கிடந்தது.

"எல்லாரும் நல்லவர்கள், எல்லாரும் நம்மவர்கள்." இந்த வார்த்தைகள் இரும்பவும் ரகுநாதன் மனத்தில் சுழன்றன. கமனா பல சந்தர்ப்பங்களில் இந்த வார்த்தைகளைப் பயன்படுத்துவாள். எங்கே இருந்து இதைக் கற்றுக் கொண்டாள்? ஏசுநாதரிடமா? முகம்மது நபியிடமா? மகாத்மா காந்தியிடமா? யாரிடமிருந்து கற்றுக் கொண்டாள்...? மகான்கள் சொல்வது போலல்லவா அவள் அதைச் சொல்லுவாள்! அவன் மனம் அழுதது.

அவளைப் போல் எத்தனை உயிர்கள் இப்படி கூண்டுக்குள் அடைபட்ட புலி போல் அலைபாயும் உள்ளத்தைச் சுமந்து சுற்றிக் கொண்டிருக்கின்றனவோ?

தாமதமாகும் ஒவ்வொரு நிமிடமும் அவனைப் பரபரப்புக்குள்ளாக்கியது. ரயில் கவிழ்ந்து விட்டது; வேறு வழி? கமனா எப்படியும் கொழும்பு போய்த்தான் ஆகவேண்டும்.

ரயில் கவிழ்ந்தது கமனாவுக்குத் தெரியாது. பிரயாணத்துக்கு ஆயத்தமாக சூட்கேசுடன் ரகுவை நெருங்கினாள் கமனா.

"ரகு! புறப்படலாமா?"

"புறப்பட வேண்டியதுதான்! எதில் எப்படிப் புறப்படுவது?" ரகுநாதன் மூளையில் மின் வெட்டுவது போல் ஒரு யோசனை தோன்றி மறைந்தது. அவன் காருக்குள் ஏறி உட்கார்ந்தான். மறுபுறக் கதவைத் திறந்து விட்டான். கமனாவும் ஏறிக் கொண்டாள். கார் வாழைச்சேனை பெட்ரோல் நிலையத்தை நோக்கிப் பறந்தது. வழியில் தமிழர்கள் கூட்டம் கூட்டமாக நின்று பேசிக் கொண்டிருந்தனர். என்ன திட்டங்கள் வகுத்துக்கொண்டு நிற்கிறார்களோ?

புனானைச் சந்தியில் கார் இடது பக்கம் திரும்பியதும், 'கிறீச்' என்ற சத்தத்துடன் நின்றது. துவக்குகளும், கம்புகளும் ஏந்திய வண்ணம் ஐந்தாறு பேர் நின்றார்கள். அதில் ஒருவன்... "காரை விட்டு இறங்குங்கள்" என்றான்.

"ஏன் என்ன வேண்டும்?" என்று கேட்டான் ரகுநாதன்.

உடனே துப்பாக்கியுடன் ஒருவன் நெருங்கி, 'டார்ச் லைட்' வெளிச்சத்தில் இருவரையும் அடையாளம் பார்த்து விட்டு, "யார், சீனி* புள்ளி போல் இருக்கிறதே?" என்றான்.

"இல்லை அவள் தமிழ்ப் பெண்" என்றான் ரகுநாதன்.

"என்னையா எங்கிட்டச் சொல்றீங்களோ?" ஏளனமாக வெளிவந்தது அவன் வார்த்தை.

ரகுநாதன் எதுவுமே பேசவில்லை. இந்தச் சமயத்தில் காருக்குக் குறுக்கே நின்ற குழப்பக் காரர்கள், பாதை ஓரமாக நடந்து காரை நெருங்கிக் கொண்டிருந்தனர். சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்த ரகுநாதன் கண்களை மூடிக் கொண்டு, முழு வேகத்தைச் செலுத்திக் காரை ஓட்டினான். கார் பாய்ந்தது. ஒருவன் கையில் இருந்த தடியால் அடித்தான். 'மளார்' என்ற ஒரு சத்தம். பின்புறக் கண்ணாடி நொறுங்கியது. கமனா, "மகே அம்மே...." என்று கத்தினாள். கார் வெகுதூரம் போய்விட்டது.

"தமிழர்களே இப்படி இருக்கிறார்களே! அங்கே நமக்கு என்ன காத்துக் கொண்டிருக்கிறதோ....?" என்றான் ரகுநாதன்.

"எல்லாரும் நல்லவர்கள் எல்லாரும் நம்மவர்கள். நடப்பதை ஏற்றுக் கொள்வோம்" என்றாள் கமனா.

கார் புனானை ரோட்டில் மேடு பள்ளங்களில் ஏறி இறங்கி இருட்டுக்குள் பாய்ந்து சென்று கொண்டிருந்தது.

"ரகு, யானை...."—கமனா கத்தினாள்.

ரகு, யானையைக் கண்டான். காட்டுக்குள்ளிருந்து சாலைக்கு வந்து கொண்டிருந்தது யானை. காரில் இருந்த விசை முழுவதையும் அழுத்திப் பிடித்தான் ரகு. மின்வெட்டும் வேகத்தில் யானையைக் கடந்தது கார்.

'கவனமாகப் போங்கள், ரகு! யானைகள் குறுக்கிடும்" என்றாள் கமனா.

---

* சிங்களவர்களைக் குறிக்கும் ரகசிய பாஷை.

# அன்பு விளைவித்த மறதி



அவனுடைய பிறந்த நாளுக்கென ஒரு ஜதைநிஜார்கள் தைத்தாள் அவன் அன்னை. புதிதாகவும், மடிப்புக் கலையாமலும் இருக்க அவற்றைச் சலவைக்கு அனுப்பினாள். விளைவு: அவை சுருங்கிப் போயின! ஆம் 'ஸான்போரைஸ்ட்' முத்திரை துணியில் இருந்ததா என்பதை அவள் பார்க்க மறந்துவிட்டாள்!



துணி வாங்கும்போதே இவ்விஷயத்தில் அவள் சிறிது கவனம் செலுத்தியிருந்தாளா னால், பல சலவைகளுக்குப் பிறகும் அணிவதற்குக் கச்சிதமாய் விளங்கி யிருக்குமே இந்த நிஜார்கள்.

நீங்கள் வாங்கும் பொருள்கள் முழுப் பயனளிக் குமா என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள்

லேபில் மேல்




என்ற முத்திரையுள்ளதா என்றுபாருங்கள், உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்காது.

'ஸான்போரைஸ்ட்' என்ற ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்கின் சொந்தக்காரர்களான க்ளுவெட், பீபாடி அண்டு கோ, இன்கார்ப்பொரேட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ-யில் இணைக்கப் பெற்றது) அவர்களால் இந்த விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இந்தக் கம்பெனியின் 'சுருங்காது' என்பதற்கான கடும் நிபந்தனைகளுக்குட்பட்டுத் தயாரிக்கப்படும் துணிகளில் மட்டுமே 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க் உபயோகிக்க அனுமதிக்கப் படுகிறது.

விவரங்களுக்கு 'ஸான்பொரைஸ்ட்' ஸர்வீஸ், 95, மெரீன் டிரைவ், பம்பாய்-2.

msa. SAN. 266 A TAM

"யானைகளைப் பற்றிப் பயம் இல்லை. மனிதர்களுக்குப் பயந்தல்லவா ஓடுகிறோம்!" ரகு பாதையைப் பார்த்தபடி காரை ஓட்டிக் கொண்டிருந்தான்.

ஐம்பது. ஐம்பத்தைந்து மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்தது அது. கறுவாக் காட்டில் கமலாவின் வீட்டுக்கு வந்தபோது மணி மூன்று இருக்கும்!

ரகுநாதன் காரை விட்டிறங்கி இரும்புக் கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே சென்றான். கமலா அவனைப் பின் தொடர்ந்தாள்.

"கௌதே....?" (யார்) என்றொரு சத்தம் கேட்டுச் கமலா திரும்பிப் பார்த்தாள். பத்துப் பதினைந்து கலகக்காரர்கள் கம்பும் தடியுமாக நின்றார்கள்.

"என்ன வேண்டும்?" என்றாள் கமலா.

"அது யார்?" என்றான் கும்பலில் ஒருவன்.

"அது நம்மான்தான்" என்றாள் கமலா.

'அவன் ஒரு தமிழன்' என்று காதுக்குள் குசுகுசுத்தான் இன்னொருவன்.

கமலா வீட்டை நோக்கி நடந்தாள். அங்கே ரகுவும் கமலாவின் அண்ணன் ராஜ ரட்ணாவும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"அண்ணா! முதலில் சாப்பிடுவதற்கு ஏதாவது தா" என்றாள் கமலா.

மூவரும் உள்ளே சென்றனர்.

சூடாகக் காப்பி தயாரித்து மூவரும் குடித்தனர். பிறகு கமலாவும், ரகுவும் வெண்ணெய் தடவிய ரொட்டியும் வேகவைத்த முட்டையும் சாப்பிடத் தொடங்கினர்.

வெளியே ஏதோ ஆரவாரம் கேட்பதுபோல் ராஜரட்ணாவுக்குத் தென்பட்டது. மெதுவாக ஜன்னலோரம் நின்றபடி வெளியே கவனித்தான். ஐம்பதுக்கு மேற்பட்ட கலகக்காரர்கள் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தனர். தெரு வாசலில் நிறுத்தப்பட்டிருந்த ரகுநாதனின் கார் தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது.

இந்த விஷயத்தைச் கமலாவிடமோ அல்லது ரகுவிடமோ ராஜரட்ணா சொல்லவில்லை. மிகவும் நிதானமாக மாடிக்குச் சென்று அங்கிருந்த டெலிபோனை எடுத்து விஷயத்தைப் போலீசுக்கு அறிவித்தான். திரும்பவும் ராஜ ரட்ணா கீழே வந்து "ரகு! சாப்பிட்டு முடிந்தும் எழுந்து மேலே வா சீக்கிரம்" என்றான்.

ராஜரட்ணாவுக்கு விஷயம் புரிந்து விட்டது. 'ரகு ஒரு தமிழன். அவன் இங்கே தங்கி யிருக்கிறான். இது கலகக்காரர்களுக்குத் தெரிந்து விட்டது. அவர்கள் ஆத்திரம் காரைக் கொளுத்துவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியவில்லை. ரகு கீழே இருப்பதைத் தவிர மாடியில் இருப்பது எதற்கும் நல்லது' என்று நினைத்தான்!

ரகு கையில் ஒரு கோப்பைத் தேநீருடன் மாடியை நோக்கிச் சென்றான். கமலா பாத்திரங்களைச் சீர் செய்து கொண்டிருந்தாள்.

வெளிக் கதவு தட்டும் சத்தம் கேட்டு, கமலா போய்க் கதவைத் திறந்தாள். அங்கே பத்துப் பதினைந்து காடையர்கள் அவளைத் தள்ளிவிட்டு உள்ளே வர முயன்றனர். கமலா தைரியமாக அவர்களை எதிர்த்தாள்.

"எங்கே அந்தத் தமிழன்? அவனை வெளியே விடு....!" கூட்டத்தில் நாலா பக்கத்திலிருந்தும் இந்தக் கேள்வி எழுந்தது.

"முதலில் நீங்கள் வெளியே போங்கள்" என்றாள் கமலா.

கலகக்காரர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தனர். நிலைமை மோசமாக உரு வாகியது. கலகக்காரர்கள் கமலாவை தெட்டித் தள்ளிவிட்டு, வீட்டினுள்ளே பாய்ந்தனர். வெறி கொண்ட பெண் புலிபோல் கலகக் காரர்களை எதிர்த்துப் போராடினாள் கமலா. கூட்டத்துக்குள் கமலாவை அடையாளம் காண முடியவில்லை. இருந்தாற்போலிருந்து "ஐயோ...! அண்ணா ரகு!...." என்று கத்தியபடி கமலா ஓட முயன்று இரண்டடி வைத்ததும், கீழே விழுந்து விட்டாள். கமலாவின் உடலை மிதித்துக் கொண்டே கலகக்காரர்கள் உள்ளே பாய்ந்தனர்.

சத்தம் கேட்டதும் 'ரிவால்வரை' எடுத்துக் கொண்டு ராஜரட்ணா மாடியிலிருந்து ஓடி வந்தான். கலகக்காரர்களில் சிலர் மாடியை நோக்கி ஓடிவந்தனர். அதே சமயம் தெருவில் துப்பாக்கி சுடும் சத்தம் கேட்டது.

'போலீஸ்....! போலீஸ்....!!" என்ற கூக்குரல் கிளம்பியது. கலகக்காரர்கள் அங்குமிங்கும் பாய்ந்தோடினர். கலகக்காரர்களைப் பின்தொடர்ந்து, ராஜரட்ணா ஓடினான். அங்கே கமலா இரத்த வெள்ளத்தில் தோய்ந்து கிடந்தாள்.

"கமலா....! நங்கி.... (தங்கச்சி)" என்று அலறினான் ராஜரட்ணா.

இந்த அலறல் சத்தம் கேட்டு, மாடியிலிருந்து ரகு ஓடிவந்தான். கமலாவின் நிலை அவனைத் திடுக்கிட வைத்தது. அவள் வயிற்றில் ஒரு கத்தி பாய்ந்திருந்தது!

"கமலா....! கமலா....! என்ன நடந்தது கமலா....!" என்று கத்தினான் ரகு.

அவன் கேள்விக்குப் பதில் சொல்லக் கமலாவுக்குச் சக்தியில்லை. அவள் மெல்ல மெல்லச் செத்துக் கொண்டிருந்தாள்.

ராஜரட்ணா, தலையில் கை வைத்தபடி பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். ரகு கமலாவின் கையைப் பிடித்து அவளது கன்னத்தில் அழுத்திப் பிடித்தபடி 'கமலா! கமலா!!" என்று கத்தினான். கமலா இலேசாக முனகினாள். ராஜரட்ணாவும், ரகுவும் அவளையே கவனித்துக் கொண்டிருந்தனர்.

"ரகு...!" கமலா மேல் மூச்சு வாங்க அழைத்தாள். "எல்லா...ரும் நல்ல....வர்கள்.... எல்லாரு....ம் நம்ம....வர்கள்." அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. அவளுடைய கடைசி மூச்சு எப்பொழுது பிரிந்தது என்று தெரியாது. ராஜரட்ணா "நங்கி! நங்கி!!" என்று கத்தினான். ரகு மௌனமாகக் கண்ணீர் வடித்தான்.

மட்டக்களப்பு ரயில் வண்டி, ஏறாவூர் நிலையத்தில் வந்து நின்றது. மட்டக்களப்புக்கு இன்னும் எட்டு மைல்தானிருக்கிறது. ரகுநாதன் சூனியம் நிறைந்த பார்வையை வெளியே படரவிட்டான். அதைவிட அதிகம் அவன் உள்ளத்தில் சூனியம் நிறைந்திருந்தது.



# ஆதரவுடன் சீராட்டி
# ஆஸ்டர்மில்க் பாலூட்டி...

நீங்கள் பெற்ற செல்வம்...அன்பு கனிந்த ஆதரவுக்கு அன்னை முகம் நோக்கும் ஆரமுது...அருமையிலும் அருமையான ஆதரவெல்லாம் அவனுக்கே உரிமையாகும்...பொன்னான அவனது ஆரோக்கியத்திற்கு ...... ஆஸ்டர்மில்க். ஏனெனில், தாய்ப்பாலுக்கு நிகரான ஆஸ்டர்மில்க், சிறு குழந்தைகளுக்கென்றே தயாரிக்கப் பட்டுள்ள தூய பாலுணவாகும்.



பாப்பாவின் பச்சிளம் ஜீரண சக்திக்கேற்றவாறு பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது ஆஸ்டர்மில்க். மேலும், இரத்தசோகை ஏற்படாமல் பாதுகாப்பதற்கான அதிகப்படி அயச் சத்தும், தவிர வைட்டமின் 'டி'யும் அதில் சேர்க்கப்பட்டுள்ளன.

**தாய்ப் பாலுக்கு நிகரானது**

இலவசம்! 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலத்தில்)..குழந்தைப் பராமரிப்பு நூல். 50 ந. பைசாவிற்குத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக; ஆஸ்டர்மில்க், தபால் பெட்டி எண் 2420, சென்னை-2.

OS 6-50-M. TM





# தமிழகத் தலைவர்கள்

சுப்பிரமணிய சிவாவின் திருவுருவப் படத்தைத் திறந்து வைப்பதில் எனக்கு முதலிடம் தரப்பட்டது குறித்து மகிழ்ச்சி.

அந்தக் காலத்திலே சிறைச்சாலைக்குச்செல்வதென்றால் இப்போதெல்லாம்போல் இல்லை. சேலம் ஜெயில் என்றாலே குலை நடுக்கம் உண்டாகும். அவ்வளவு பயங்கரம். அதுவும் சிவாவைப் போல் ராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டால் கேட்கவே வேண்டியதில்லை.

பாரதியாரின் பாடல்களை ஊர் ஊராகச் சென்று பாடிச் சுதந்திர உணர்ச்சியை ஊட்டி வந்தார் சுப்பிரமணிய சிவா.

பாரத மாதாவையே தமது தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்தார். பாப்பாரப்பட்டியில் சித்தரஞ்சனதாஸ் அஸ்திவாரக் கல் நாட்டினார் அவருடைய பாரத மாதா ஆசிரமத்துக்கு. தமது இறுதிக் காலத்தில் பாரத மாதாவின் திருவடிகளிலேயே உயிரைத் துறக்க வேண்டுமெனக் கருதிப் பாப்பாரப் பட்டிக்குப் பயணமானார் சிவா. ரயிலிலே கொடிய தொழு நோயால் பீடிக்கப்பட்ட அவரை ஏற்றிக் கொள்ளவே மறுத்தார்கள். அப்படி இருந்தும் எதிர்ப்புகளைக் குறித்து அஞ்சாமல் ஸ்டேஷனில் வந்து நின்று கொண்டார். ரயில் புறப்படப்போகும் சமயம். சிவாவினால் உள்ளே ஏறிக்கொள்ள முடியவில்லை. அருகிலிருந்த அருமை நண்பரொருவர் அப்படியே குண்டு கட்டாகத் தூக்கி அவரை உள்ளே போட்டார்.

எப்படியோ பாப்பாரப்பட்டிக்கு வந்து சேர்ந்தார். அங்கே தாம் அமைத்திருந்த



ஆசிரமத்தில் இறுதிக் காலத்தைக் கழித்தார். இறுதி மூச்சுள்ள வரையில் சுதந்திரத்துக்காகப் போராடி சுதந்திரம் வருவதைக் கண்ணால் காணாமலே மறைந்து விட்ட தியாகி, சிவா.—ஜீவா

தலைவர் ராஜாஜி அவர்கள் வீற்றிருக்கும் அதே மேடையில் உட்கார்ந்து பேசும் குற்றத்துக்காக முதலில் அவருடைய மன்னிப்பையும் கோருகிறேன்.

இங்கே வந்ததும் வராததுமாக ராஜாஜி அவர்கள் என்னுடைய உடல் நலம் பற்றியும் ஜீவா அவர்களுடைய தேக நிலை பற்றியும் அக்கறையுடன் விசாரித்தார்கள். இருவருமே நோய்வாய்ப்பட்டுக் கிடந்தது அவருக்குத் தெரிந்திருக்கவே, அன்புடன் அதுபற்றிக் கேட்டார்கள். இதை எதற்காகச் சொல்கிறேன் என்றால் வயதில் சிறிய எங்களுக்கு வயது முதிர்ந்த இளைஞர் ராஜாஜியின் ஆசி இன்று கிட்டியிருக்கிறது!

நாங்கள் இந்தத் தியாகிகளை நோக்கும் விதத்துக்கும் ராஜாஜி அவர்கள் உள்ளத்தில் இன்று எழும் உணர்ச்சிகளுக்கும் நிறைய வேற்றுமை உண்டு. ராஜாஜி அவர்கள் இந்தத் தலைவர்கள் வாழ்ந்த அந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர். என் முன்னே திரண்டு எழுந்திருக்கும் இளைஞர் சமுதாயத்தை நான் கேட்டுக் கொள்வது இதுதான். அந்தத் தலைமுறையினர் நமக்கு வாங்கித் தந்த சுதந்திரத்தைப் பேணிப் பாதுகாக்க வேண்டியது உங்களது தலையாய கடமை. இன்றைய வாலிப சமுதாயம் விழிப்புடன் இருக்கவேண்டும்.

வெள்ளையனுடைய கப்பலுக்குப் போட்டியாக, அதனினும் சிறப்பாகக் கப்பலோட்டி, ராஜத் துரோகக் குற்றத்துக்காகச் சிறை சென்று செக்கிழுத்த அந்தச் செம்மலின் பெயரால் பாரத நாட்டுப் போர்க் கப்பல் ஒன்று கடலைக் கிழித்துக் கொண்டு செல்ல வேண்டும் என்பது என் லட்சியக் கனவு.

விரைவிலேயே அது நனவாக வேண்டும்; அதனைக் கண்குளிர நான் பார்க்க வேண்டும். —ம. பொ. சி.







# தியாகத் திருவுருவங்கள்

இந்தக் கூட்டத்தைச் சந்தேகக் கண் கொண்டு ஒரு சாரார் பார்ப்பது எனக்குத் தெரிகிறது. ஆனல் மிகுந்த சந்தேகத்துக்குள்ளான எனக்கும் ஆச்சாரியாருக்கும் இடையே 'மேயர்' அவர்கள் அமர்ந்திருப்பது கவனிக்கத்தக்கது! அதே சமயத்தில் முற்றிலும் மாறுபட்ட கொள்கை யுடையவர்களாகக் கருதப்படும் சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்தவரும் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரும் அருகருகே அமர்ந்து அளவளாவுவது மிகுந்த மன மகிழ்ச்சியை அளிக்கிறது!

சிறையிலே நான் இருந்தபோது திரு வி. க. அவர்கள் காலமான செய்தியைத் தெரியப் படுத்தினர்கள். அப்போது நான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தில் அதனைக் குறித்து மௌனமாய்க் கண்ணீர் சிந்தி அன்னருக்கு அஞ்சலி செலுத்தினேன்.

சுதந்திரத்துக்குப் பாடுபட்ட மற்றத் தலைவர்களுக்கும் தமிழ்த் தந்தைக்கும் வித்தியாசமுண்டு. ஏனையோர் புரட்சியை வளர்த்த போது, திரு வி. க. கனிவை வளர்த்தார்கள்.

சென்னை நகராட்சி மன்றத்தில் இன்று திறந்து வைக்கப்படுபவை நான்கு படங்களே. ஆயினும் இதே போன்று மற்றத் தேசியத் தலைவர்கள் அனைவருடைய படங்களும் ஒரு மணிமண்டபத்தை அலங்கரிக்க வேண்டுமென்பது என் அவா.

இந்தத் தலைவர்களெல்லாம் விட்டுச்சென்ற காரியங்களைப் பூர்த்தி செய்யும் நற்பணியையே ராஜாஜி இன்று மேற்கொண்டுள்ளார்கள். சுதந்திரப் போராட்டம் இன்னும் முற்றுப் பெறவில்லை. தமிழகம் முழுதும் அது தொடர்ந்து நடக்கும். அதற்கு நாமெல்லோரும் ஒன்று சேருவோம். இப்படிச் சொல்லும் போது தேர்தல்கூட்டைக் குறிப்பிடவில்லை நான்!



—ஸி. என். அண்ணுதுரை

இந்தப் படங்களில் உள்ளோரிட மெல்லாம் நான் நெருங்கிப் பழகி யிருக்கிறேன். என்றாலும் அவர்கள் வாழ்க்கை வரலாற்றைக் கோவையாகக் கதைபோல் மற்றவர்கள் மாதிரி என்னல் சொல்லவியலாது. அதற்குக் காரணம் என் மனம் வேறுவிதமான முக்கிய சிந்தனைகளில் ஈடுபட்டிருப்பதுதான்.

வ. வே. சு. அய்யர் இங்கிலாந்தில் சட்டம் படித்து பரீட்சை எழுதப் பணமும் கட்டி விட்டார். அப்போது ராஜத் துரோகிகள் என்று அவரையும் வேறு சிலரையும் பிரகடனப்படுத்தினர்கள். 'லா' பரீட்சை எழுதவிருந்த அவர் 'அவுட்லா'வாகி விட்டேன் என்று வேடிக்கையாகக் கூறி தரை மார்க்கமாகத் தாய்நாடு திரும்பினர்.

இந்தப் படங்களில் உள்ளவர்களுள் திரு வி. க.வைத் தவிர மற்றவர்கள் தாங்கள் எதற்காகப் பாடுபட்டார்களோ, அந்தச் சுதந்திரத்தைக் காணுமலே கண்மூடி விட்டார்கள். அவர்கள் பாக்கியசாலிகள். இப்போது உயிருடன் அவர்கள் இருந்தால் என்னைப் போல் அவர்களும் துன்பப்படுவார்கள். இது எதைப் போலிருக்கிறது என்றல்: மாம்பழம் ஒன்றைப் பெற முயன்று அது இடைக்காத வரையில் ஒருவித வருத்தம். ஆனல் கஷ்டப்பட்டு அதைச் சம்பாதித்த பிறகு அது காய் வெட்டாக, புளிப்பாக இருந்தால் மனத்துக்கு எவ்வளவு சங்கடம்? இந்த நிலை மாற வேண்டுமானல் புளிப்பாயிருக்கும் அதைக் கொஞ்ச காலத்துக்குப் பழுக்கப் போட வேண்டும், ஒருமூலையில். இதை நீங்கள் எப்படி வேண்டுமானலும் அர்த்தம் செய்து கொள்ளுங்கள். இதற்குமேல் நான் அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. இது கட்சிக் கூட்டம் இல்லையே என்று மேயர் நினைத்துச் சிரமப் பட்டுக் கொண்டிருப்பது எனக்குத் தெரிகிறது. —ராஜாஜி



# புதுமை பெறுக! இதம் பெறுக!
# நவீனமாய் இருங்கள்! நாள் முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்தபின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது... உன்னத மனோரம்மிய மணம் கொண்டது.

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய
மணத்துடன் கூடிய
டால்கம் பௌடர்!




CHTP/6/9 TAM

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 19. பர்மிங்ஹம் நகரம்!

பி. பி. ஸி.யின் பயிற்சிக்கு இந்தியாவி லிருந்து நான் சென்றதுபோல், உலகின் பல தேசங்களிலிருந்தும் நாட்டுக்கு ஒருவர் வீதம் முப்பத்தைந்து ஒலிபரப்பாளர்கள் லண்டனுக்கு வந்திருந்தார்கள். இவர்களில் மூன்று பேருக்கு, அதாவது இலங்கை ரேடியோவி லிருந்து வந்திருந்த அமரதுங்கா என்ற நண்பருக்கும், பாகிஸ்தான் ரேடியோவி லிருந்து வந்திருந்த கலிமுல்லா என்ற நண்பருக்கும், ஆல் இந்தியா ரேடியோவிலிருந்து சென்றிருந்த எனக்கும், பிரயாணத்துக்குரிய திட்டங்களையும் அவற்றுக்கான செலவு நிர்வாகங்களையும் ஏற்றுக் கொண்டிருந்தவர், 'இம்பீரியல் ரிலேஷன் ட்ரஸ்ட்' என்ற பிரிட்டிஷ் ஸ்தாபனத்தார். இவர்கள் எங்களுடைய ஒலிபரப்புப் பயிற்சிக்குப் பிறகு இங்கிலாந்திலும், ஸ்காட்லாந்திலும், ஐர்லாந்திலும் பல இடங்களையும் சுற்றிப் பார்க்கத் திட்டம் வகுத்துக் கொடுத்தார்கள்.

எனக்காக வகுக்கப்பட்டிருந்த பிரயாணத் திட்டத்தில் கலை, இலக்கியம் ஆகிய இரண்டு துறைகளிலும் சிறப்பு வாய்ந்த பற்பல வட்டாரங்களையும் சென்று காணும்படி ஏற்பாடு செய்து தந்தார்கள். இந்தியாவிலிருந்து செல்லும் எழுத்தாளரும் ஒலிபரப்பாளர்களும் இங்கிலாந்தின் கலை வளத்தையும் இலக்கிய வரலாறுகளையும் தெரிந்துகொள்வதன் மூலம், இந்திய ரசிகர்களுக்கும் ஆங்கில ரசிகர்களுக்குமிடையே நல்லுறவை உண்டாக்க வேண்டும் என்பதே இத்தகைய திட்டங்களின் நோக்கம். எனவே நான் சென்ற வெளியூர்களில் பல எழுத்தாளர்களையும், கலைஞர்களையும் சந்தித்ததோடு, அங்குள்ள கலைக் கழகங்களில் நமது நாட்டு இலக்கியங்களையும் கலைகளையும் பற்றிப் பேசக்கூடிய வாய்ப்பும் எனக்குக் கிட்டியது. பல கலைக்கூடங்களையும் சரித்திரப் புகழ் பெற்ற நகரங்களையும் விரிவாகவே சென்று காண முடிந்தது. அத்தகைய முக்கிய இடங்களில் ஒன்று பர்மிங்ஹம் நகரம்!

பிரிட்டனிலேயே லண்டனுக்கு அடுத்தபடியாக ஜனத்தொகையிலும் பரப்பிலும் பெரிய நகரம் பர்மிங்ஹம்தான்! மற்றப் பழைய பட்டணங்களோடு ஒப்பிடும்போது இதை ஒரு நவீன நகரம் என்றே சொல்ல வேண்டும். எனினும் பலவித வியாபாரப் பொருள்களை உற்பத்தி செய்து உலகின் பல நாடுகளுக்கும் அனுப்பி வருவதால் இது ஒரு முக்கியமான வாணிக நகரமாகத் திகழ்கிறது! பழம் பெருமை வாய்ந்த கட்டடங்கள் நகரின் எல்லைக்குள் அதிகம் இல்லை. ஆனால் நகரத்தின் அருகிலும் சுற்று வட்டாரங்களிலும் மிகவும் புகழ் வாய்ந்த பல சரித்திரச் சான்றுகளும் இலக்கியச் சின்னங்களும் நன்னிலையில் இருக்கின்றன. ஆகையால் இந்த நகரத்தில் ஒரு வாரம் தங்கி யிருந்தேன்.

நான் தங்கி யிருந்த இடம் ஒரு யூதப் பெருமகனுரின் வீடு. 'கோல்ட்' என்று பெயர். தங்கமான மனிதர். எழுபது வயது வாலிபர்! இந்தியர்களிடத்தில் மிகுந்த அன்பும் மரியாதையும் கொண்டவர். நான் அவருடைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த சமயம், பாலஸ்தீனத்திலிருந்து ஒரு பெரிய பத்திரிகாசிரியரும் அங்கே வந்து தங்கி யிருந்தார். தினந்தோறும் இரவு ஒன்பது மணிக்கு மேல் தங்கப்பர் (கோல்ட்) என்ற கிழவரும் பென்ஸ்வி என்ற அந்த எழுத்தாளரும் மாடியில் என்னுடைய அறைக்கு வந்துவிடுவார்கள்! சித்தர் பாடல்களைப் பற்றி அவர்கள் இருவரும் ஆர்வத்தோடு கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுக் கொண்டிருந்த அந்த இலக்கிய இரவுகளை மறக்கவே முடியாது! ஒரு நாள் இரவு 'ஹீப்ரு' மொழியிலுள்ள சில துதிப்பாடல்களை அவர்கள் இருவரும் இரு குரலிசையாக எனக்குப் பாடிக் காட்டினார்கள். அதோடு நிறுத்தவில்லை! நம்முடைய துதிப் பாடல்களில் குறைந்தது ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பாடலாக ஒரு பாடலைத் தேர்ந்தெடுத்து நான் பாடிக் காட்ட வேண்டும் என்று என்னை வற்புறுத்தினார்கள். பிறகு கேட்க வேண்டுமா! தமிழ்ச் செவிகளுக்கு அப்பால் ஆறாயிரம் மைல்கள் தள்ளி யிருக்கிறோம் என்ற துணிவையே ஆதார கருதியாகக் கொண்டு "சிறையாரும் மடக்கிளியே" என்ற சம்பந்தர் தேவாரத்தைப் பழந்தக்க ராகம் என்ற பண் முறைப்படி சுத்தசாவேரி ராகத்தில் 'ஜிஞ்ஜாமிர்தம்' செய்தேன்!

என்னுடைய சொந்த அனுபவங்கள் ஒரு புறமிருக்க, பர்மிங்ஹம் நகரத்தின் பொதுக்



பர்மிங்ஹம் நகரப் பொது நிலையம்

கலை விரிவாக வரிசைப் படுத்தி அணி அணியாக வைத்திருக்கிறார்கள். 'ஆர்ட் காலரி' என்னும் கலைக்கூடம் ஓர் அரிய பண்பாட்டுக் களஞ்சியம்! உள்ளே நுழையும் போதே முகப்பில் சலவைக் கல்லிலே ஒரு சாசனம் எழுதி நிறுத்தி யிருக்கிறார்கள். இரண்டாவது உலகப் போரின் போது 1940இல் நவம்பர் 22ந் தேதியன்று ஒரு பெரிய குண்டு விழுந்து பழைய கலைக் கூடங்கள் எல்லாம் அழிந்து போய்விட்டன என்றும், காட்சிப்பொருள்களுக்கு மட்டும் எவ்வித மான சேதமும் ஏற்படாத வாறு அவற்றை முன் கூட்டியே அப்புறப்படுத்தி வைத்திருந்தார்கள் என்றும் இந்தக் கல்வெட்டு சொல்லுகிறது! யுத்தத்தின்போது பொது மக்களுடைய உயிரைப் பாதுகாப்பது போலவே கலைப் பொருள்களையும் பாதுகாக்க வேண்டும் என்பதில் அவர்களுக்கு அத்தனை ஆர்வம் இருந்தது!

சிறப்புக்களில் மிகவும் முக்கியமானது அங்கேயுள்ள ஷேக்ஸ்பியர் நூல் நிலையம்! ஏறத்தாழ முப்பத்தையாயிரம் புத்தகங்களுக்கு மேல், ஷேக்ஸ்பியர் சம்பந்தமான நூல்களையே இங்கே வைத்திருக்கிறார்கள்! இன்னும் சேர்த்துக் கொண்டும் இருக்கிறார்கள்! அந்த இலக்கிய ஆர்வத்தையும் நிர்வாகத்தையும், அவர்களுடைய செயலாற்றும் திறனையும் எப்படிப் புகழ்வது! ஆங்கிலேயர்களின் கம்பனான ஷேக்ஸ்பியரைப் பற்றி அத்தனை நூல்கள் எழுதப்பட்டு அத்தனை பாதுகாவலோடு வைக்கப்பட்டிருக்கின்றன!

'நகர மன்றம்' என்ற கட்டடம் ரோமாபுரியின் சிற்ப முறையிலே உருவாகி நிற்கிற ஒரு பெரிய இசை மண்டபம்! இங்குள்ள 'ஆர்கன்' என்ற மிகப் பெரிய சங்கீத வாத்தியத்தின் புகழ் இங்கிலாந்து முழுதும் பரவியிருக்கிறது! சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு பெரிய இசைமேதை இந்த வாத்தியத்திலேதான் பல அதிசய சாகித்தியங்களைப் புனைந்தாராம்! அந்த வரலாறும் அங்கே இருக்கிறது.

பர்மிங்ஹம் நகராண்மைக் கழகத்தின் மணிக்கூண்டு 160 அடி உயரத்தில் கம்பீரமாக உயர்ந்து நிற்கிறது. அங்குள்ள ஒரு கிறிஸ்து கோவில் பதினெட்டாம் நூற்றாண்டின் கட்டடக் கலைக்கு ஒரு சிறந்த சான்றாக நான்கு சித்திரச் சாளரங்களோடு காட்சி தருகிறது. இவ்வூரின் நீதிமன்றமோ அழகிய வேலைப்பாடோடு கூடிய மர விதானத்துடன் சிற்பச் சுவர்களும் நகர சரித்திரத்தைச் சித்திரிக்கும் ஓவியக் கண்ணாடிச் சாளரங்களும் கொண்டதாய் ஒரு பெரிய கலை மாளிகையாகவே திகழ்கிறது!

இந்த நகரத்திலேயுள்ள பெரிய காட்சிச் சாலையைப் பற்றிச் சொல்ல வேண்டாமா? இங்கே பிரிட்டிஷ் பறவைகளின் வகைதொகைகளை

இதே கலைக்காட்சிச் சாலையிலேதான் கோஹினூர் வைரத்தின் போலி ஒன்றையும் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்கள். அதிலுள்ள சரித்திரக் குறிப்பு பலவிதமான கற்பனைகளுக்கும் ஊட்டம் தருகிற முறையில் ஒரு கதைக் குறிப்பாகவே இருக்கிறது. அந்தக் குறிப்பின் கருக்கத்தைப் பாருங்கள் :

புராணப் புகழ் பெற்ற இந்திய நாட்டின் கோஹினூரானது தில்லியில் முகலாயர்களின் பொக்கிஷங்களோடு 1304 வரை இருந்து வந்தது. பின்னர் 1739இல் நாதிர்ஷா இதைக் கவர்ந்தார். பிறகு இது காபூல் சென்றது. பின்னர் 1713இல் தப்பி ஓடிய மன்னரோடு இந்த வைரமும் லாஹூர் சென்றது. 1849இல் பஞ்சாப் பிடிபட்ட பிறகு, இந்த வைரம் விக்டோரியா ராணிக்குப் பரிசாக வழங்கப்பட்டது. 1852 ஆம் ஆண்டில் மீண்டும் சாணை பிடிக்கப்பட்டது. முன்பு 191 காரட் அளவில் இருந்த இந்த வைரம் புதிதாகப் பட்டை பிடிக்கப்பட்ட பிறகு 108·9 ஆகத் தேய்ந்துவிட்டது. 1937இல் பிரிட்டிஷ் அரசிக்கு மகுடம் செய்த போது அந்த மகுடத்திலே பதிக்கப் பெற்று, இன்றளவும் அதிலிருந்து அணி செய்து வருகிறது கோஹினூர்!

இந்தக் குறிப்பைப் படித்துவிட்டு அடுத்த வைரத்துக்கு வந்தேன். அது யூஜீன் என்ற வைரத்தின் போலி. 51 காரட் உள்ள வைரம்! ரஷ்ய அரசி காதரீனும் பின்னர் பிரெஞ்சு அரசி யூஜீனும் அணிந்திருந்த இந்தப் புகழ்பெற்ற வைரம், இப்பொழுது பரோடா கெய்க்வாரின் உடைமையாகத் திகழ்கிறது.

இந்தப் போலி வைரங்களைத் தவிர, பர்மிங்ஹாம் கலைக்காட்சியில் நான் பார்த்த சித்திரங்கள் எல்லாம் உண்மை வைரங்கள்; விலைமதிப்பற்ற இரத்தினங்கள்! இவற்றில் ஒன்று, பிரெஞ்சு ஓவியர் வெர்நெட் என்பவர் வரைந்த ஒரு துறைமுகக் காட்சி. பிரான்ஸ் தேசத்தில் அரசாண்ட லூயி மன்னரின் கட்டளைப்படி இந்த ஓவியர் துறைமுகக் காட்சிகள் பலவற்றைச் சித்திரமாக வரைந்து கொடுத்தாராம். அந்த உற்சாகத்தில் மேலும் பல ஓவியங்கள் வரைந்தாராம். அப்படி வரைந்த சித்திரங்களிலே ஒன்றுதான் இது; இந்தப் படத்தில் பனிப் படலத்துக்குள்ளே கதிரவன் கண் விழித்து வருவதை எழி லுணர்ச்சியோடு வரைந்து காட்டியிருக்கிறான் அந்த அற்புத ஓவியன்! கடற்கரையிலே ஒரு கோட்டை. அதன் அருகில் ஒரு கப்பல் நிற்கிறது. அதற்குப் பக்கத்தில் ஒரு சிறு படகு. அந்தப் படகுக்குச் சற்றுத் தொலை விலே படகோட்டிகள் பெண்டு பிள்ளைக ளோடு இருந்து நெருப்புக் காய்கிறார்கள்! பனிப்படலம் காட்சி முழுவதையும் போர்த்தி நிற்கிறது. நீல நிறமும் கரும் பச்சை நிறமும் சேர்ந்து கடலையும் வானத்தையும் பின்னணி யிலே காட்டி நிற்கின்றன. இந்தப் பசிய நீலக் கரும் பின்னணியின் கீழே, அடியிலே, சிவப்பு வர்ணத்தினால் நெருப்பைக் கொழுந்து வீசி எரியும்படி மூட்டியிருக்கிறான் ஓவியன்! தன்னுடைய செந்நிற நாக்குகளை நீட்டிய வண்ணம் இந்தச் சுடாத வர்ண நெருப்பு இருநூறு ஆண்டுகளாகப் புகையாமல், எரியா மல், அவிந்தும் விடாமல் கலைக் கனலாகச் சுடர் விட்டுக் கொண்டிருக்கிறது, அந்த வண்ண ஓவியத்துக்குள்ளே!

எனக்கு மிகவும் உகப்பாக இருந்த இன்னொரு சித்திரம், வில்லியம் காலின்ஸ் என்ற ஆங்கிலேய ஓவியர் 1815ம் ஆண்டில் வரைந்த 'வழியனுப்புதல்' என்ற ஒரு சித்திரம்! அது சொல்லும் கதையைப் பாருங்கள்:

கிராமத்திலுள்ள தனது தாய் வீட்டுக்குப் பேறு காலத்துக்காக வந்த மகள் பிரசவம் ஆன பிறகு அங்கிருந்து தனது குழந்தை யோடு புறப்படுகிறாள். தாய் அவளை வழி யனுப்பி வைக்கிறாள். இதுதான் கதை. படத்திலே நதி ஓடுகிறது. படகும் புறப் படத் தயாராக நிற்கிறது. கரையில் மகளின் தம்பியும், வயதான தாயும் நிற்கிறார்கள். அருகிலே அவர்கள் வீட்டு நாயும் நிற்கிறது. பாசம் கனியும் கண்களோடு! படகிலே மகளுக்கு அருகில் அவளுடைய கணவன் நிற்கிறான். பாட்டி தன் பேரக் குழந்தையை மகளிடம் கொடுத்துக் கொண்டே அவர்களை வழியனுப்புகிறாள். கணவனுடைய கையில் நார்க் கூடை. கரையின் பின்னணியில் வயல் வெளியும் களத்து மேடும்! முப்பத்து நான்கு அங்குல அகலம், நாற்பத்துமூன்றரை அங்குல உயரத்தில் காட்சி தருகிறது இந்தப் படம்! அது சித்திரிக்கும் உணர்ச்சியின் பரப்போ என்றால் அங்குலங்களையெல்லாம் கடந்தது! தாயுள்ளத்தின் எல்லையற்ற பாசத்தை. அதன் அலகிலா உணர்ச்சி அலைகளை, வர்ணச் சட்டத்துக்குள்ளே பிடித்து நிறுத்திவிட்டது. இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஓர் ஓவியரின் இறகு!

கலையழகு நிரம்பிய இந்த நேர்த்தியான காட்சிகளையும், வியாபாரப் புகழ் நிரம்பிய பர்மிங்ஹாம் கடை வீதிகளையும் ஒரு நாள் முழுதும் சுற்றிப் பார்த்துவிட்டு மறு நாள் காலையில் 'ஸ்ட்ராட் போர்ட் அபான் ஏவன்' என்ற அகில உலகப் புகழ் கொண்ட கிரா மத்தை நோக்கிப் புறப்பட்டேன். லண்டனி லிருந்து எண்பது மைல் தூரத்திலுள்ள கவிஞர் பிறந்த அந்தக் கிராமத்துக்கு அவரது இலக்கியச் செல்வத்திலே மனத்தைப் பறி கொடுத்தவர்கள் ஆயிரக்கணக்கில் விஜயம் செய்து அவருக்கு அஞ்சலி செலுத்தி வருகின் றனர். உலக மகா கவிஞராகிய ஷேக்ஸ்பியர் பிறந்த ஊர் அல்லவா அது! (தொடரும்)



சென்னையில் பிரபல கண் டாக்ட ரான திரு ஈ. வி. ஸ்ரீநிவாஸாச் சாரியாரின் பேத்தியும் கல்கத்தா ஹெர்குலிஸ் இன்ஷ்யூரன்ஸ் திரு ஈ. கே. ஸ்ரீநிவாஸன் அவர்களின் புதல்வியுமான குமாரி சித்ராவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீ பத்தில் கல்கத்தாவில் திரு ஆர். சபேசன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடந்தது. ரசிகப் பெரு மக்கள் குமாரி சித்ராவின் பரதநாட் டியத்தையும் அவரது குரு திரு மருதப்பபிள்ளை அவர்களின் நட்டுவாங்கத் தையும் வெகுவாகப் பாராட்டினர்.


அறிவிப்பு:
என் பிள்ளைக்குக்
கடன் கொடுத்தவர்
களெல்லாம் என்னை
வீட்டில் வந்து சந்திக்
கவும்! எனக்கும்
நிறைய கடன் தேவை
யாக இருக்கிறது!


பெரியவர்: எனக்கும் என்
மனைவிக்கும் கருத்து
வேற்றுமை ஏற்படுவது
இல்லை.
மற்றவர்: அப்படியா?
ஆச்சர்யமாக இருக்கிறதே!
பெரியவர்: ஆமாம் நான்
என் கருத்தை வெளியிடு
வதில்லை.


"என்னப்பா டாக்ஸி!
போலீஸ்காரன் மேல்
இடித்து விட்டுத்தலை தெறிக்
கப் போகிறாயே!"
"மூன்றடி இன்ஸ்பெக்டர்
மேல் இடித்ததை நீங்கள்
பார்க்கவில்லையா?"


"நான் தினம் மாம்பலம்
போகிறேன்! ஒரு நாள்
கூட பஸ் டிக்கட் வாங்கி
னது கிடையாது!"
"அது சட்ட விரோதமாச்சே!"
"என்னய்யா? நடந்து
போவது சட்ட
விரோதமா?"




ரயில் பிரயாணத்தின்
போது:
கணவன்: நீ நம்ப வீட்டு
இரும்பு பீரோவையும் கொண்டு
வந்திருந்தால் சௌகரியமாக
இருந்திருக்கும்!
மனைவி: என்ன இது பரிகாசம்?
கணவன்: பரிகாசம் இல்லே!
அதுலே தானே நம்ப டிக்
கட்டையெல்லாம்
வைத்திருக்கேன்!

அறையில் பூ மணம் வீசியது: அந்த மணத்துக்கு உள்ளத்தைச் சுண்டி இழுத்து விடும் சக்தி அதிகமாகையால் என் உள்ளமும் சலனமுற்றது. அறையில் என்னையன்றி வேறு யாரும் இல்லை. நான்கூட அங்கே நுழைந்து இன்னும் மூன்று நிமிஷங்கள் முழுசாகக் கடக்கவில்லை. மணம்மிக்க அந்த அறை எனக்குப் பிடித்தது. ஆகவே வேகத்தில் உள் நுழைந்து அலுப்பின் வேகத்தைத் தணிக்கக் கட்டிலில் கட்டையைச் சாய்த்தவன்தான்.

கட்டிலிலிருந்தபடியே புரண்டு கண்களைச் சுழல விட்டதில் என் தலைக்கு நேராகச் சுவரில் ஒரு பெரிய புரை போலும் சிறிய மாடம் போலும் விளங்கிய இடத்தில் ஒரு சுருள் பழம் பூ கிடந்தது தெரிந்தது. ஒரு முழம் கதம்பம்தான்; பழைய கதம்பம். ஆயினும் அதன் மணம் புதிதாக உருவாகிக் காற்றில் கலந்து, பழைய காற்றைப் புதிதாக்கி, பழைய அறையில் புதிய சோபையை உருவாக்கிக் கொண்டிருந்தது. நான் அங்கு நுழைவதற்கு முன்பும் அந்தப் பூ அங்கே மணத்துக்கொண்டு




# மணம்

வை. சுப்ரமண்யம்

இருந்திருக்க வேண்டும்; யாருமற்ற அந்த வெற்றிடத்தில் வீசிய அந்த மணத்தைக் கொண்டு அந்த அறையே அப்படி ஒரு சுவாசம் வீசிக் கொண்டிருந்ததோ என்று நினைத்தேன். இப்போது என்னுடைய நுழைவுக்குப் பிறகு நான் விடும் சுவாசமே அப்படி மணக்கிறதோ என்றும் ஒரு சிறு பிரமை தட்டியது.

அறையில் நிழல் விழுந்தது. திரும்பிப் பார்த்தேன். விசாரிக்க வந்த ஆள் என்று தெரிந்தது. அது நெற்றியில் எழுதி ஒட்டாத குறைதான். அறை விளக்கு மங்கலானது தான். அவனது நிழல் மட்டும் கறுத்து, நீர்க்கமாகச் செதுக்கியது போன்று என் கட்டிலுக்கும் அவன் காலடிகளுக்கும் இடையே நீண்டு கிடந்தது.

"சாப்பாடு கொண்டு வரலாமா, சார்?"

"அதற்குள் என்னப்பா சாப்பாடு? ஏதாவது டிபன் இருந்தால் கொண்டு வாயேன்."

"டிபன் சொல்லி வச்சிருந்தால்தான் சார் கிடைக்கும். ஆறு மணியோட காலியாகிவிடும். மற்றப்படி ஸ்டாலிலே இருக்கிறதெல்லாம் நீங்க சாப்பிடற மாதிரி ஒண்ணும் இருக்காதுங்க, சார்!"

நான் யோசித்தேன். இரவு ரயிலில் வந்த அலுப்புக்கு ஒரு மணி நேரமாவது தூங்கினும் தேவலை போல் தோன்றியது.

"நமக்கு பிஸினெஸ்ஸா சார்?" என்றான் அவன், நடம் முற்றிலும் மாறி.

"நமக்கும் சரி, எனக்கும் சரி. பிஸினெஸ் ஒன்றும் கிடையாது. எங்கள் கம்பெனிப் படம் இந்தப் பக்கங்களில் ஓடுகிறது. எங்கள் பிரதிநிதிகள் தியேட்டர்க்காரர்களைக் கண்காணிக்க வந்திருக்கிறார்கள்; நான் எங்கள் பிரதிநிதிகளைக் கண்காணிக்க வந்திருக்கிற இன்ஸ்பெக்டர். இந்த ஊரிலும் எங்கள் படம் ஓடுகிறது."

"ஒரு வாரம் தங்குவீர்களா, சார்?"

"ஏன் அதற்கும் குறைவாகவோ அதிகமாகவோ தங்கக் கூடாதா?"

"நல்லா தங்கலாம். போறதுக்குள்ளாற உங்க படத்துக்கு ஒரு பாஸ்..."

"ஓ! அதெற்கென்ன தருகிறேன்...சரி! இப்போது சாப்பாடு கீப்பாடு ஒன்றும் வேண்டாம். ஒன்பது மணிக்கு வந்து கூப்பிடு. அது வரை நான் கொஞ்சம் தூங்க வேண்டும்!" என்றேன். அவன் சரியென்று சென்றான்.

நான் கண்ணை மூட முயன்றேன். கதம்பம் மனத்தைத் திறக்கமுயன்றது. இந்தப் பழைய கதம்பம் நேற்றிரவு வண்டியில் பிரயாணம் தொடங்கிய போது புதிய கதம்பம் மணத்த ஒரு சிறு சம்பவத்தைத் தன் மண இழைகளால் கட்டிக் கொணர்ந்து என் மனத்தைப் பிணைத்தது.

கோயமுத்தூரில் நான் வண்டி ஏறினேன். வண்டி புறப்படுகிற அவசரத்தில் ஏதோ கிடைத்த இடத்தில் அமரலாமென்று இடத்தை நோட்டம் விட்டேன். ஒரு பெரிய குடும்பம் எதிர்ப் பெஞ்சு முழுதும் நிறைத்துக் கொண்டிருந்தது. நான் நின்றிருந்த பக்கமாக ஜன்னல் ஓரம் பார்த்தபடி ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள்.

"இந்தப் பக்கம் வந்து விடேனம்மா. அவர் உட்கார்ந்து கொள்ளட்டும்" என்று அந்தக் குடும்பத்தின் தலைவி போன்றிருந்த ஒரு பெரிய அம்மாள் சொன்னதும், அவளது வார்த்தைகள் முடியுமுன்னரே அந்தப் பெண் இடம் மாறி விட்டாள்.

இடம் கிடைத்தும்கூட எனக்கு யோசனையாக இருந்தது. அவர்களுடைய சுதந்திரத்

தில் தலையிடுகிறமாதிரி அங்கே உட்காரலாமா, வேண்டாமா என்று நினைத்தபோது அந்தப் பெரியம்மாள், ''பரவாயில்லை, நீங்க உட்காருங்க. எங்க பிள்ளை மாதிரி வயசு உங்களுக்கு...'' என்றாள். ரயில் உபசாரம் இது. ஆனால் உண்மையானஉபசாரமும்கூடத்தான். உட்கார்ந்த பிறகு ஜன்னல்புறம் தலையை நீட்டி வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன்.

பிளாட்பாரம் முழுதும் ஒரு திரைக் காட்சி போல் தோற்றமளித்துக் கொண்டிருந்தது. யாரிடம் பார்த்தாலும் ஒரு வேகமான இயக்கத் தன்மை பளிச்சிட்டது. குறுக்கும் நெடுக்குமாக ஜனங்கள் உலவிக் கொண்டிருந்தனர். சற்றைக்கெல்லாம் ஆர்ப்பாட்டத்துடன் கிளம்பிவிடப் போகும் ரயிலுடன்கூட அந்த ஸ்டேஷனே கிளம்பிவரத் துடித்துக் கொண்டிருந்தது போன்ற பரபரப்பு. இந்தப் பரபரப்புக்கு மற்றவர்கள் தங்கள் பங்கைச் செலுத்தி வந்தது போலப் பூக்காரன் ஒருவனும் தன் குரல் எழுப்பி நடை போட்டுக் கொண்டிருந்தான். அவனது நடை அளந்த நடை; குரலும் மாத்திரையைக் கணக்கிட்டு ஒலித்தது.

'' இங்கே கொண்டாப்பா !'' பெரியம்மாள் தன் உடம்பை ஜன்னல்புறமாக நீட்டிக் கொண்டு வந்தாள். என் எதிரிலிருந்த பெண், ஸீட்டின் பின்புறம் முதுகை முடிந்த மட்டும் நிமிர்த்திச் சாய்த்துப் பெரியம்மாளுக்கு இடம் விட்டாள். அந்த முகம் பெரியம்மாளின் சரீரத்துக்குப் பின்னால் மறைவதற்கு முன் ஏற்பட்ட இடைவெளியில்தான் என் பார்வையில் பட்டது. என் முகத்தில் ஒரு சோதி வீசி மறைந்து கொண்டாற் போல் இருந்தது. முகத்திலேயே அந்த முழுச் சோதியுமா, அல்லது அந்தக் கண்கள் இமைக்கும் போது தோன்றி இமை மூடிய பின் மறைந்தொளிரும் மாய ஒளியா ?

உள்ளே கதம்பம் மணத்தது - வண்டியுள் தவிர என்னுள்ளேயும்தான். அந்த முகத்தின் தரிசனத்தை அடுத்துப் பூ மணமும் பரவவே, என்னுள்ளம் என்னவென்று புரியாத ஓர் அனுபவத்தில் இறங்கியது. இரண்டு முழங்கள் நான்கு சாண்களாகின. நாலு அரை டிக்கெட்டுகளில் இரண்டு குழந்தைகள்; இரண்டு இரண்டுங்கெட்டான்கள். நான்கு தலைகளிலும் பூ ஏறியது. காசுக்காகத் தலைப்பளிக்கப் போன அம்மாள், '' என்னம்மா, நீயும் பூ வைச்சுக்கயேன். வாங்குறேன் '' என்றாள்.

'' வேண்டாம், அம்மா !'' என்றாள் எதிர் ஸீட்டுப் பெண்.

'' பூ வச்சுக்க என்று சொன்னால் வேண்டாம் என்று யாராவது—அதுவும் கன்னிப் பொண்ணு-சொல்வாங்களா ? நீ என்னம்மா இப்படி இருக்கே ? கன்னிப் பொண்ணு தானே நீ ? எங்கே போறே ? தனியாப் போறே போல் இருக்கே ! இல்லே, யாராவும் வருவாங்களா வண்டி கிளம்பறதுக்குள்ளே ? இந்தாப்பா, இன்னும் ஒரு முழம் கதம்பம் கொடப்பா.''

அவர்கள் குடும்பத்துப் பெண்தான் அவளும் என்ற என் இயல்பான நினைவு அறுபட்டது. கவனத்தைத் திருப்பாதிருந்தாலும் காதுகளை என்ன செய்ய ?

சில விநாடிகள் கழித்தே அந்தப் பெண் பதில் சொன்னாள் : '' யாரானும் வருவதற்குள் வண்டி கிளம்பி விட வேண்டுமே என்று தானம்மா வேண்டிக் கொண்டிருக்கிறேன்.'' பேச்சு வாக்கில் பதில் அமுங்கிவிடக் கூடாதென்றோ, அவசியமற்றதாகப் போய்விடக் கூடாதென்றோ நினைத்துச் சிறிது அழுத்தியே பேசிய மாதிரியிருந்தது அவள் பேசிய முறை.

பூவை அவள் தலையில் வைத்துக்கொண்டே, '' அதென்னடியம்மா ஒரு போடு போடறே ! வீட்டை விட்டா கிளம்பி வந்து விட்டே ?'' என்று கேட்டாள் பெரியம்மாள்.

அந்தப் பெண்ணின் முகம் மாறியது. அவள் உள்ளம் ஏதோ வேதனையைத் தாங்கிய ஒரு குடமாக இருக்க வேண்டும். அதன் அலைமோதல் போல் ஒரு சலனம்தான் அவள் முகத்தில் அந்த மாறுதலை உண்டுபண்ணியது.

'' வீட்டை விட்டு நான் போக வில்லை ; வீட்டை விட்டு நான் ... எப்படியென்று சொல்வது .... துரத்தப்பட்டேன் என்று சொல்லிவிட மனம் இடம் தரவில்லை. ஆனால் அதற்குச் சமமானதுதான் ...''

பெரியம்மாளின் முக பாவம் ஆவல், ஆதங்கம் இரண்டையும் பங்கு போட்டுக் கொள்ளத் துடிக்கும் நிலையில் படபடத்தது.

'' என்னம்மா சொல்றே நீ? வயசுப் பெண்ணாயிருக்கே. என்னமோ பெரிய பாரதமாக இருக்கும் போல் இருக்கே. நீ சொல்றதைப் பார்த்தா ? எங்கேயிருக்கிறே நீ ? இப்ப எங்கே கிளம்பி விட்டே ?'' பெரியம்மாளின் ஆவலைப் பார்த்தால், அப்போதைய அவசரமான பதிலைத் தவிர அந்தப் பெண்ணிடமிருந்து அவள் பிறந்தது முதல் உள்ள சுயசரிதையைப் பிடுங்கிவிட வேண்டுமென்ற தாகமும் ஏற்பட்டிருப்பது தெரிந்தது.

''என் வயசுதான் எனக்கு எதிரியாக முளைத்தது, அம்மா! நான் இதோ இருக்கிற உங்க பேரக் குழந்தைகள் மாதிரியே இருந்திருக்கக் கூடாதா என்றுதான் இப்போதுகூட நினைக்கிறேன். இதோ இந்தப் பெண் மாதிரி நான் ஏழெட்டு வயசாக இருக்கும்போது ஒரு குடும்பத்திலே குழந்தை தூக்கி வைத்துக் கொள்கிற வேலைக்காரப் பெண்ணாகச் சேர்ந்தேன். எனக்கு வேறு நாதி கிடையாது என்பதற்கு இன்னும் விவரம் வேறே சொல்ல வேண்டாம் என்று நினைக்கிறேன். பத்து வருஷங்கள் அந்தக் குடும்பத்திலே வேலைக்காரப் பெண்ணாகவே இருந்து ஓட்டிக் கொண்ட பிறகு இப்போது யாருக்கும் தெரியாமல் வண்டி ஏறி ஓடி விடுகிற நிலைமை ஏற்பட்டு விட்டது....''

'' அதுதான் ஏன் என்கிறேன்? அன்னியியா, திருடியியா ? அப்படி யெல்லாம் கை நீளம் காட்டற பெண்ணுட்டம் தெரியலியே. வேலைக்காரியா இருந்தேன்னு சொல்லாத இருந்தா உன்னை ஒரு ராஜாத்தின்னுல்லே கடைசி வரையில் நினைச்சிருந்திருப்பேன்...... ஏன் இப்படி நீ ஓடணுமாம் ?''

''அதுதான்என்வயசுகாரணம் என்கிறேனே? நான் வேலை செய்கிற வீட்டுக் குடும்பத்துத் தலைப் பிள்ளை மேல் நாட்டிலே படித்துவிட்டுத் திரும்பி வருகிறானம், இன்னும் ஒரு வாரத்திலே. அவன் நான் அறியாத பிள்ளையா,

தெரியாதவனு? ஆனால் ஐந்தாறு வருஷங்கள் ஆகிவிட்டன அவனைப் பார்த்து. அவன் வருகிற சமயத்திலே நான் அந்த வீட்டிலே இருக்கக் கூடாது என்றும் என்னை எப்படி வேலையை விட்டுப் போகச் சொல்வதென்றும் அம்மாவும் ஐயாவும் பேசிக் கொண்டார்கள். இதை நான் ஒட்டுக் கேட்க நேர்ந்துவிட்டது! அவர்களுக்கு அந்தச் சிரமமெல்லாம் வைக்காமல் நான் கிளம்பி விட்டேன்...''

''இதென்னடியம்மா கூத்தாயிருக்கு! அந்தப் பிள்ளையாண்டான் வந்தால் என்ன? உன்னை என்ன பண்ணிடுவான் அவன்? அவனை நீதான் என்ன பண்ணிடுவாயாம்? அதற்காக உன்னை ஏன் வீட்டை விட்டு விரட்டணும்?''

அவள் தலை குனிந்து இலேசாகச் சிரித்துக் கொண்டாள். அம்மாளின் வெள்ளை உள்ளப் பேச்சு அவர்களது மாஜி எஜமானர்களின் மருண்ட மனோபாவத்துக்கு ஒத்து வராததாயிருக்கிறதே என்று நான் எண்ணியபடியே தான் அவளும் எண்ணிச் சிரித்திருக்க வேண்டும்.

''அவர்கள் நீங்கள் நினைக்கிறமாதிரி வெள்ளை மனசுக்காரர்கள் இல்லை, அம்மா! நல்லதை எண்ணுவதைவிடக் கெட்டதை முதலில் எண்ணிவிடும் அவசரக்காரர்கள். தெளிந்த நீர் அவர்கள் கண்ணில் படாது; குட்டையைக் குழப்புவதைப் பற்றிப் பேசிப் பொழுது போக்கும் சுபாவம் உடையவர்கள். பழகியதால் தெரிந்து சொல்கிறேன்.''

பெரியம்மாள் பெருமூச்சு விட்டாள். ஓடிக் கொண்டிருந்த வண்டியின் சிறகுகளுடன் ஒன்றியது அந்த மூச்சு.

''கஷ்டம்தான். அப்படியிருக்கிற மனிதர்களுடன் பழகுவது முள்மேல் நடக்கிறமாதிரி தான் இருக்கும். சரி; நீ கிளம்பிவிட்டே! என்ன பண்ணுவதாக உத்தேசம்? எங்கே போவதாகத் தீர்மானம்?''

இன்னொரு முறை அவள் அரைச் சிரிப்பாகச் சிரித்தாள். பேச்சின் தொடக்கமாகத் தோன்றிய அந்தச் சிரிப்பு பேச்சினிடையே அப்படியே நிலைத்தது. அது ஓர் அழகுச் சிரிப்பு.

''ஒரு உத்தேசமுமில்லை; ஒரு இடம் என்ற குறிக்கோளும் கிடையாது. இந்த ரயில் எந்த ஊர்வரையில் போகிறதோ, அதுவரை போவது. அங்கிருந்து வேறு ரயில்...''

பெரியம்மாள் மூக்கின்மேல் விரலை வைத்து விட்டாள். அதன் பிறகு அவள் வாய் அடைத்து விட்டது. பிரமிப்பினால் ஒன்றும் பேசாது நிறுத்திக் கொண்டாள்.

என் மனசில் அந்த விரக்தி வார்த்தைகள் மணலில் விரவும் ஈரம்போல் பரவின.

''அந்த அக்கா பேரென்ன, பாட்டி?''

பெரியம்மா சலித்து விட்டதால் அவளுக்கு வக்காலத்து வாங்க முன் வந்தது போல் அந்தக் குழந்தைகளில் ஒன்று கேட்டது.

''திலகம் என்று பேர், குழந்தை! உன் பெயர்?'' என்று கேட்டு அதன் முதுகைத் தட்டிக் கொடுத்தாள் எதிர்வீட்டுப் பெண். அவர்களிடையே பேச்சு வளர்ந்தது. பேச்சில் யானை முதல் குடைக்கம்பி வரை அடிபட்டது.

அந்த இருவர் தோற்றங்களும் என் நினைவைச் சுருட்டின......

என்னுடைய இந்த உத்தியோகம் சென்னைக்கு ஒரு தடவை என்னை இழுத்துச் சென்றது. மாமாவின் வீட்டில் அந்தப் பத்துப் பதினைந்து நாட்களும் தங்குவதென்று நிர்மானித்தேன். அவர்கள் உயரப் பறப்பவர்கள். மாமா ஏதோ வியாபாரத்தில் பணம் கொழிப்பவர். என்னைப் பற்றி அவர்களுக்கெல்லாம் ஊதாரி, சோம்பேறி இப்படி ஏதேதோதான் அபிப்பிராயம். நான் ஒண்டிக்கட்டை, வாழ்க்கையுடன் போராடி உத்தியோகம் என்ற லட்சியத்தைப் பிடித்திருக்கிறேன். உத்தியோகஸ்தனுகி என்னைக் கண்டதும் போகப் போக மாமாவுக்கு என்னைப் பற்றிய அபிப்பிராயம் மாறியிருக்க வேண்டும். அவர் இரண்டு முறை வருந்தி அழைத்த பிறகுதான் அப்போது போனேன்.

அவர்கள் வீட்டில் 'பிள்ளை தூக்கிப் பெண்' ஒன்றைக் கண்டேன். பத்து வயது இருக்கும். பிள்ளை தூக்க மட்டுமா அந்தப் பெண்? அதனால் முடிந்தால் எல்லாரையும் தூக்கி வைத்துக் கொண்டால் தேவலை என்றுதான் எல்லாரும் நினைத்தார்கள்!

சுவரில் இயங்கும் கடிகாரத்துக்கு இணையாகத் தரையில் இயங்கும் கடிகாரமாக அந்தப் பெண் காட்சியளித்தது.

'' டீ கன்னிம்மா !'' கன்னியம்மாவைவிட 'டீ'தான் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரையில் எல்லாருக்கும் சரளமாய் வந்தது.

'' டீ, குழந்தைக்கு கவுன் மாத்தினியா ?''

'' டீ கன்னிம்மா! ஓடிப்போய் எனக்கு ஒரு பலப்பம் வாங்கிண்டு வாயேன் !'' பலப்பத்தால் எழுதத் தெரிகிற குழந்தை முதல் பலப்பத்தைச் சாப்பிடத் தெரிந்த குழந்தை வரையில் நாலைந்து அவதாரம் ஆகியிருந்தன.

மாமா ஒருத்தர்தான் கன்னியம்மாவைப் பணிக்கு ஏவாதவர். அவர் காரிலிருந்து இறங்க நேரமில்லாதவர்; இருந்தால் அவரும் அவளை ஏவுவார்.

குடும்பம் ஒரு நாள் கண்காட்சிக்குத் திரண்டெழுந்தது. உடைகளில் ஒளிர்ந்தனர் எல்லாரும்; குறிப்பறிந்து கன்னியம்மாவும் முதல் நாளே தன் பாவாடைகளுச் சோப்புப் போட்டு உலர்த்தி யிருந்தாள். அதில் ஜொலிக்கிறோமா என்று தன்னைச் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டு இடது கையில் பலப்பம் விழுங்கும் குழந்தை வீற்றிருக்க, வலது கையில் டிபன் காரியருடன் புறப்பட்டாள்.

உடையிலும் நகையிலும் மின்னிய கூட்டத்திலின்றும் மூன்றடி தூரம் தள்ளியே விளிம்பாக அமைந்தாற்போல் அந்தப் பெண் நடந்து சென்றதைப் பார்த்தபடி நானும் கண்காட்சிக்கு நடந்தேன்.

கண்காட்சியில் நான் கவனித்தது முழுதும் அந்தப் 'பிள்ளை தூக்கிப் பெண்' இரண்டு கைகளிலும் பாரம் குறையாமல் அவர்கள் எல்லாருக்கும் சேர்ந்தமைந்த ஒரே நிழலாய் நடந்து சென்றதைத்தான். ஒரு துணிக் கடையில் என் பரிசளிப்பாக மாமா குழந்தைகளுக்குத் துணி எடுத்தேன். நீலத்தையும் சிவப்பையும் பச்சையையும் கண்டு பறந்தன குழந்தைகள். பிள்ளைதூக்கிப் பச்சைக் குழந்தை அமைதியாகக் கடை வாசலில் நின்றது.

'' உனக்கு ஏதாவது வாங்கிக் கொள், கன்னியம்மா !'' என்றேன். அது சங்கோசத்தில் நெளிந்தது.

ஆனால் மாமி சீறினாள் ; ''இப்போ வாங்கியிருக்கிறதெல்லாம் யாருக்கென்றுடா நினைக்கிறே? ஒரு பிரட்டுப் போட்டுப் பிரட்டி மறு மாசம் அது கிட்டேதானே வீசி எறியப் போறதுகள் இதுகள்! கிடக்கு விடு !'' என்று கடையை விட்டு இறங்கி விட்டாள் மாமி.

நான் கன்னியம்மாவைத் திரும்பிப் பார்த்தேன். கிளுகிளுப்பு தெறித்த கண்களில் இரு துளிகள் பெரும் திரைகளாய் மறைத்துக் கொண்டு நின்றன.

சமீபத்தில் கூடச் சென்னைக்குச் சென்றிருந்தேன். இந்த ஏழெட்டு வருஷங்களில் ஒரு தடவை கூட மாமா வீட்டுக்குப் போக முடியவில்லை. ஒன்றிரண்டு நாட்கள் அலுவலுடன் திரும்ப வேண்டிய நிலை. இந்த முறை போனபோது பெரிய பெரிய மாறுதல்கள். எலிவால் பின்னல் போட்ட மருமாள்கள் கல்யாணத்துக்கு நின்றனர். பலப்பப் பேர்வழிகள் ஹைஸ்கூலை நாடிக் கொண்டிருந்தார்கள்.

'' கன்னியம்மா எங்கே? அல்லது உங்கள் பாஷையில் அந்த 'டீ' எங்கே ?''

'' கிடக்குடா கொஞ்சாதே ! அதைத் துரத்தி அனுப்பிச்சுட்டோம். உன்னாட்டம் தான் அதுவும் மாமாகிட்டே கொஞ்சம் போலிருந்தது. விரட்டி விட்டேன் '' என்று கூறினாள் மாமி.

'' என்ன மாமி இது? மாமாவுக்கு வயது என்ன? அதுக்கு இன்னிக்கெல்லாம் பதினெட்டு இருக்குமா ?''

'' அட போடா ! அந்தப் பதினெட்டுக்கும் ஐம்பதுக்கும்தான் எல்லாம் நேரும்...''

'' அப்படி அது ஏதாவது தப்பு பண்ணினதா.... ?''

'' தப்பு பண்ணலை ! பண்றதுக்கு முன்னாடி தொலையட்டும்னுதான் அனுப்பிச்சுட்டேன்.''

'' பெரிய பாவத்தை விலைக்கு வாங்கி விட்டாயே, மாமி. அவள் என்ன பண்ணுவாள் நடுச்சந்தியிலே ?''

'' அவள் இருந்தால்தானே எதுவும் பண்றதுக்கு? அவள் போய்ட்டான்னு ஒரு பெரிய கதையோட பேப்பரிலே செய்தி வந்தாச்சு ; நீ வேணா அவளுக்காக ஒரு முழுக்குப் போட்டு விட்டுச் சாப்பிட வா !'' என்றாள் மாமி.

இடிந்தேன்.

* *

மீண்டபோது எதிரில் திலகம் என்னையே உற்றுப் பார்ப்பதைக் கண்டேன். உணர்வற்ற என் நிலையைக் கண்டு கண் பதித்தவள் என் உணர்வு மீண்டதும் தானும் பார்வையை மீட்டுக் கொண்டாள் போலும் !

திலகம் என்ற பெயரில் இவள் இன்னொரு கன்னியம்மாவா? அவள் பட்ட கஷ்டங்களெல்லாம் இவளும் பட்டுத்தான் இருக்க வேண்டும்; அல்லது அவளுக்கு ஏற்பட்ட சௌகரியங்களைவிட இவளுக்கு அதிகமாகவும் எதுவும் ஏற்பட்டிருக்க முடியாது. வெளி உலகத்தில் வாழ்க்கையைத் தொடங்கி, உடனே அதன் விளிம்பையும் கண்டுவிடும் துணிவுடன் புறப்பட்டிருக்கிறாள் என்பது தெரிந்தது.

வெளியில் இருள் அடையாய்க் கனத்திருந்தது. எட்ட எட்டத் தெரியும் ஊர் விளக்குகள் கருந்திரையில் இட்ட சிவப்புப் புள்ளிகள் போல் இருளை மேவிக்கொண்டு தெரியத் துடித்தன. உள்ளே திரும்பினால் திலகத்தின் பளீர் முகம்! அந்த இருள் மூட்டத்தை எதிர்த்துச் செல்லும் ஒளியா அது!

பெரியம்மாள் மடியில் இருபுறமும் இரண்டு குழந்தைகளைச் சாத்திக்கொண்டு கண்ணயர்ந்தாள். அம்மன் சந்நிதியின் மூல விக்கிரகம் நிஷ்டையில் சாய்ந்து விட்டாற்போன்றிருந்தது. இங்கே என் எதிரே அலங்கார விக்கிரகம் கண் இமைகளைக் கொட்டியவாறு இருளையும் என்னையும் மாறி மாறிப் பார்த்தபடி மலர விழித்தது.

'' நீங்கள் எது வரையில் போகிறீர்கள், ஸார்?'' - திலகம்தான் கேட்டாள்.

எங்களிடையே பேச்சு நிகழும் என்று எதிர்பார்க்காததால் அதிர்ச்சி ஏற்பட்டது. என் உடல் படபடத்தது.

''பழநிக்குப் போகிறேன். ஏன், ஏதாவது உதவி...''

''ஒரு சிறிய உதவிதான். நான் வேலை பார்த்து வந்த வீட்டுக்கு நன்றி தெரிவித்து



டில்லி "தக்ஷிண பாரத் சமாஜ்", அதனுடைய எட்டாவது ஆண்டு விழாவை 18–3–61 அன்று மத்திய சர்க்கார் உதவி நிதிமந்திரி ஸ்ரீமதி தாரகேசுவரி ஸின்ஹா அவர்களின் தலைமையில் விமரிசையாகக் கொண்டாடியது. விழாவின்போது பல நிகழ்ச்சிகளிடையே சமாஜ் அங்கத்தினர்களால் "ஆசைக்கோர் அளவில்லை" என்ற ஓரங்க நாடகம் நடத்தப்பட்டது. அதில் ஸ்ரீ பாலு, ஸ்ரீ கோபால் இருவரும் முறையே கோபு, பாபுவாக வந்து வெளுத்துக் கட்டினார்கள். சிறுவர், சிறுமியர்களுக்காக நடத்தப்பட்ட விளையாட்டு மற்றும் இலக்கியப் போட்டிகளில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. சமாஜத்தைத் திறம்பட நடத்திவரும் தலைவர் திரு வி. ஆர். பட்டாபிராமன் அவர்களும் உபதலைவர் திரு பி. இ. சுப்ரமணியம் அவர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

ஒரு கடிதம் எழுதிப் போடவேண்டும். நீங்கள் எழுதினீர்களானால் நான் கையெழுத்துப் போடுவேன். ஆனால் நான் போகிற இடம் அவர்களுக்குத் தெரியக் கூடாது."

சில விநாடிகள் மௌனமாயிருந்தேன். பிறகு எனக்குச் சரியென்று தோன்றியதைக் கூறினேன். "கடிதம் எழுதுவதைவிட நீங்கள் அங்கேயே திரும்பிப் போய்விடுவது நல்லதென்று தோன்றுகிறது."

"அந்த வீட்டுக்கு மறுபடியும் சென்றால் அவர்கள் துரத்தி யடிப்பார்கள். அவர்கள் விரட்டியடித்த பிறகு மறுபடியும் இதே ரயிலில் வர நேரும். அல்லது சந்தர்ப்பம் வேறுமாதிரியா யிருந்தால் என் உடல்மேல் ரயில் போக நேரும்." கொள்கையில் உள்ள உறுதி அவளது குரலில் கண்ட கடுமை மூலம் தெரிந்தது.

"அல்லது வேறு எங்கேயாவது...?" என்றேன் முடிக்கத் தெரியாமல்.

"வேறு எங்கே?"

"எங்காவது வேலைக்கு..."

"'குழந்தை தூக்கி'யாகவா?"

"ஏதாவதொரு வேலை..."

"யாருமே என்னை வேலைக்கு வைத்துக் கொள்ளாத போனால்?"

"வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்..."

"நீங்கள் சொல்வது புரிகிறது. எனக்கு நானே பிழைப்பைத்தான் தேடிக்கொள்ள முடியும்; வாழ்க்கையை, அமைத்துக்கொள்ள இந்த அநாதைக்கு..."

"அநாதை என்றெல்லாம் நீங்கள் சொல்லாதீர்கள்...."

"பின் எனக்கு நாதி யார்?"

அவள் கேள்விக்குப் பதிலை வைத்துக் கொண்டு என் நாவின் நுனி துடித்தது. உடலின் திமிர்ப் படபடப்பு என் நாவைத் தடுத்து விட்டது.

யோசித்தபடி இருந்தேன்.

விழித்தபோது திலகத்தை என் எதிரில் காணவில்லை. விழித்த இடம் பழநி.

* * *

மறுமுறை விழித்தபோது ஹோட்டல் ஆள், எதிரில் கைப்பிடிச் சுவரில் சாய்ந்த படி எனக்காகக் காத்து நின்றது தெரிந்தது. மறுகணம் கதம்ப வாசனை திலகத்தை நினைவூட்டியது.

'அவள் முந்தின ஸ்டேஷனில்தான் இறங்கியிருக்க வேண்டும். இறங்கி எங்கே போயிருப்பாள்?' உள் நினைவு மனத்தைப் புரட்டியது.

"சாப்பாடு வேண்டாமப்பா. நான் வெளியில் ஏதாவது பார்த்துக் கொள்கிறேன்..." என்று சொல்லிவிட்டு அறையைப் பூட்டிக் கொண்டு கிளம்பினேன். ஆனால் அந்தக் கதம்ப மணத்தை உள்ளும், என்னுள்ளும் வைத்துப் பூட்ட முடியவில்லை. அதன் இழைகள் என்னை எங்கோ இயக்கிச் சென்றன.

கோயிலுக்குச் சென்றேன். அடிவாரத்தில் படியேறும் இடத்தில் ஓர் ஓரமாகத் திலகம் உட்கார்ந்திருந்தாள்.

"திலகம்!" என்றேன்.

"இங்கேதான் காத்துக் கொண்டிருக்கிறேன். பழனிக்கு வந்துள்ள நீங்கள் கோயிலுக்கு வராமல் போக மாட்டீர்கள் என்று தெரியும். நேற்றிரவு முந்தின ஸ்டேஷனில் இறங்கி விட்டேன்... ஆனால் உங்களிடம் என் கேள்விக்குப் பதில் ஒன்று பாக்கி யிருக்கிறது. அதைத் தெரிந்துகொண்டு போய் விட வந்தேன்."

"என்ன கேள்வி?"

"எனக்கு யார் நாதி?"

என் கண்களைத் துடைத்துக் கொண்டு, கண்களிலேயே பதிலைத் தேக்கினேன். திலகம் நாணத்துடன் தலைகுனிந்தாள்.

அருகில் பூமணம் வீசியது. ஒரு முழம் புதிய கதம்பத்தை வாங்கி அவளிடம் முதல் பரிசாக அளித்தேன். என்னுள் புது மணம் வீசியது.

# பார்வையற்றவர்கள் பார்க்கிறார்கள்!

கி. ராஜேந்திரன்

வனாந்திரமான அந்தப் பிரதேசத்தில் நடந்து சென்றாள் ஒரு சிறுமி. காட்டு மலர்களைப் பறித்து மோந்து மகிழ்வதும் கனிகளைக் கண்டுபிடித்துக் கொய்து புசிப்பதும் அவளுக்குப் பொழுதுபோக்கு. அவற்றின் பல்வேறு மணங்களே அவளைக் கவர்ந்து இழுக்கும்; தங்கள் இருப்பிடத்தை அவளுக்குப் புலப்படுத்தும். இன்றும் அப்படியே வெகுதூரம் அலைந்து திரிந்தவாறே வந்துவிட்டாள். திரும்பும் வழி தெரியவில்லை.

தனித்துத் தன்னிச்சைப்படி கிளம்பி வந்து விடவில்லை அந்தச் சிறுமி. பின்னோடு அவளுடைய உபாத்தியாயினியும் நெருங்கிய உறவினளான மற்றொரு சிறுமியும் துணையாக இருந்தார்கள். அவர்களுக்கும் கூடக் கண்களைக் கட்டாமலே காட்டில் விட்டதுபோலத் தான் இருந்தது.

நீண்ட நேரம் திக்கு திசை புரியாமல் திண்டாடிய பின்னர் குறுகலான பாலம் ஒன்று தென்பட்டது. இரண்டு குன்றுகளுக்கு இடையே இருந்த 'கிடுகிடு' பள்ளத்தாக்கைக் கடக்கக் குறுகலான அந்தத் தொங்கு பாலம் பயன்பட்டது. அதன் மீது இருப்புப் பாதை வேறு அமைந்திருந்தது!

பாலத்தை அடைந்துவிட்ட அவர்கள் குதூகலித்தார்கள். இருப்புப் பாதையோடு சென்றால் நிச்சயம் ஊர் போய்ச் சேரலாமே என்று தைரியம் பெற்றார்கள்.

வழி புலப்பட்ட சந்தோஷத்தில் அந்தச் சிறுமி சிட்டாய் நடைபோட்டாள், எல்லாருக்கும் முன்னதாக. பாலத்தைப் பாதி தூரம் கடந்திருப்பார்கள் —

'கூ' வென்று ஊதிக்கொண்டே ரயில் வந்துவிட்டது, பாலத்தின் மறு முனையில்!

முன்னால் சென்ற அந்தப் பெண் தன்னை எதிர்நோக்கியிருக்கும் பேரபாயத்தை உணர்ந்ததாகவே தெரியவில்லை. நிச்சிந்தையாகத் தன் பாட்டுக்கு நடந்தாள் அவள்.

ஆம், அந்தச் சிறுமி ஒளியையும் ஒலியையும் உணரும் சக்தியை இழந்து விட்டவள்!

கவலையின்றி ஆனந்தமாய்ப் போய்க்கொண்டிருந்த அந்தக் குழந்தையைப் பின்னால் வந்த புண்ணியவதி பாய்ந்து சென்று தூக்கினாள். பாலத்தின் விளிம்பில் அவளைத் தொங்க விட்டாள். மூவருமே பாலத்தின் விளிம்பைப் பற்றிக் கொண்டு அந்தரத்தில் தொங்கினார்கள். அவர்களுக்குக் கீழே அதல பாதாளம்; மேலே விரைந்தோடும் ரயில் தொடர். மிக அருகில் ரயில் ஓடுவதைப் பாலத்தின் ஆட்டம் அந்தச் சிறுமிக்கு உணர்த்தியது. அவள் தேகத்தில் நடுக்கம் கண்டது. எப்படியோ பல்லைக் கடித்துச் சமாளித்துக் கொண்டாள் அவள். பெரிய கண்டத்திலிருந்து தப்பினாள்.

உபாத்தியாயினியின் சமயோசிதத்தினால் அன்று உயிர் பிழைத்த அந்தச் சிறுமி பயந்து விடவில்லை; மனம் தளர்ந்து விடவில்லை. மாறாக அந்தச் சம்பவம் அவளுக்கு நிசப்தமான இருளடைந்த ஓர் உலகில் நடமாடத் தைரியத்தையே அளித்தது.

நோயினால் பாதிக்கப்பட்டுத் தான் இழந்து விட்டவற்றை ஈடு செய்யப் புகுந்தாள். உறுதியுடன் போராடினாள். வெற்றி கிட்டியது. இன்றைக்குத் தன்னைப் போலவே ஒளி இழந்து விட்ட பல்லாயிரக்கணக்கானோருக்கு ஓர் எடுத்துக்காட்டாக, புத்துணர்ச்சியும் புதுத் தெம்பும் அளிக்கும் ஒரு தெய்வமாகவே விளங்குகிறார் ஹெலன் கெல்லர் அம்மையார்.

மற்றவர்களுடைய கண்களில் உள்ள ஒளியையெல்லாம் தம்முடைய ஆதவனாக்கிக் கொள்ளும் ஆற்றலைப் பெற்று விட்டார் அவர். பிறருடைய காதுகளில் ஒலிக்கும் இன்னிசையெல்லாம் தம்முடைய இன்ப கீதங்களாகவே மாறுவதைக் காண்கிறார். அருகிலுள்ளோரின் அதரங்களில் அரும்பும் புன்னகையையெல்லாம் தமது உவகைப் பெருக்காக்கிக் கொள்ளும் உன்னத நிலைக்கு உயர்ந்து விட்டார் ஹெலன் கெல்லர் அம்மையார். இருட்டிலும் நிசப்தத்திலும் கூட ஒருவித அழகு உண்டு என்பதை உண்மையாக உணர்ந்து கொண்டவர் அவர்.

ஹெலன் கெல்லருடைய வாழ்க்கை வரலாற்றைப் படித்தபோது உள்ளம் நெகிழ்ந்த எண்ணற்றவர்களுள் நானும் ஒருவன். அதே சமயத்தில் இன்னொர் எண்ணமும் கிளர்ந்தெழும் என் உள்ளத்தில். ஒளி இழந்த எல்லாருமே ஹெலன் கெல்லராகி விட முடியுமா? அவரைப்போல் அவர் ஒருவர்தான் இருக்க முடியும் என்று தோன்றும்.

வசந்த காலத்தில் பட்சி ஜாலங்கள் இசைக்கும் இன்னிசையைச் செவியுற்று, வண்ண மலர்களின் அழகினைப் பார்த்து, மரங்களில் உள்ள இலைகளெல்லாம் ஒரு சமயம் தங்க நிறமாக மாறி உதிர்வதையும் பின்னர் மரகதப் பச்சையாகத் தளிர் விடுவதையும் கண்டு, உலகமே இன்ப மயமாக இயங்குகின்ற அற்புதத்தை இதயபூர்வமாக விரும்பி ரசித்த பின்னர் திடீரென்று எல்லாவற்றையுமே பறி கொடுப்பதானால்....

நினைத்துப் பார்க்கவே நெஞ்சம் கூசுகிற தென்றால் நிஜமாகவே அந்நிலைக்கு உள்ளானோரின் கதி என்ன? அதோகதிதான் என்று இதுகாறும் நம்பி வந்தேன். வாழ்க்கை அவர்களுக்குக் கசந்துவிடும், சுயவெறுப்பு மிகுந்துவிடும், எதிலுமே ஈடுபாடு இல்லாமல் ஏனோதானோ வென்று காலத்தை ஓட்ட வேண்டியதுதான் என்று கருதியிருந்தேன். அது எவ்வளவு பெரிய தவறு என்பதைச் சில நாட்களுக்கு முன்னர்தான் அறிய முடிந்தது.

டே 'அன்பினால் சாதிக்க இயலாதது எதுவுமே இல்லை' என்று பூந்தமல்லியிலே உள்ள ஒளியிழந்த குழந்தைகளுக்கான பள்ளிக்கூடத்தில் படிப்பினை பெற்றேன்.

பால் மணம் மாறாத பாலகர்கள் முதல் வயது வந்த இளைஞர்கள் வரையில் இங்கே இருநூறு பேர்கள் பயிற்சி பெறுகிறார்கள். முயற்சி திருவினையாக்கும் என்பதை முற்றிலும் உணர்ந்து அறிவை வளர்த்துக் கொள்ளுகிறார்கள். உலகுக்குப் பாரமாயிராமல் தன்னம்பிக்கையுடன் வாழத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.



ஹெலன் கெல்லர்

பள்ளிக்கு நான் சென்றிருந்த சமயம் வருஷாந்திர விளையாட்டுப் போட்டிகள் நடந்து கொண்டிருந்தன. அந்தக் கோலாகலத்தைக் கண்டபோது அந்த இளஞ்சிறார்களின் தேகத்தில் குறைபாடு ஒன்று இருப்பதே அடியோடு மறந்து போயிற்று. அத்தனை லாகவமாக எல்லாவித விளையாட்டுக்களிலும் அவர்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள். எனக்குப் பிரமிப்பாகத்தான் இருந்தது.

படிப்பறிவுக்கும் அங்கே பஞ்சமில்லை என்பதை விளக்கி வைத்தார் பிரின்ஸிபால் நந்தகோபால்.

"அப்படியா? எதுவரையில் கற்றுத் தேறுகிறார்கள்?" என்று வினவினேன்.

"எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதுகிறார்களே மாணவர்கள். ஈ. எஸ். எல். ஸி. யோடு படிப்பை முடித்துக் கொள்வோரும் உண்டு" என்றார் அவர்.

"படிப்பு முடிந்த பிறகு? அவர்கள் எதிர்காலம் எப்படி அமையும்?"

"அதுதான் ஸார், மனத்தை ரொம்பவும் சங்கடப்படுத்துகிறது. கண் பார்வை இழந்தவர்களும் மற்ற எல்லாரையும் போல் செயல்பட முடியும் என்பதை ரொம்பப் பேர்கள் நம்பவே மறுக்கிறார்கள். அவர்களுக்கு வேலை வாய்ப்புத் தரத் தயங்குகிறார்கள். நீங்களே இப்போது பார்த்துக் கொண்டுதானே இருக்கிறீர்கள்? உடலில் ஓர் ஊனம் இருப்பதைத் தவிர வேறு எந்த விதத்தில் குறைந்து விட்டார்கள் இவர்கள்?" என்றார் நந்தகோபால் உணர்ச்சியோடு.

"எந்த விதமான காரியங்களை இவர்கள் செய்ய முடியும்?"

"செய்யக் கூடாதது என்று ஒன்றும் கிடையாது. கொஞ்சம் பழக வேண்டும், அவ்வளவுதான். பெரிய பெரிய தொழிற்சாலைகளில் 'பார்ஸல்' கட்டுதல் 'லேபிள்' ஒட்டுதல் போன்ற எத்தனையோ காரியங்கள் இல்லையா? கரங்களை உபயோகித்துச் செய்யக் கூடிய எந்த வேலையைக் கொடுத்தாலும் இவர்கள் திறமையாகப் பணி புரிவார்கள், நிச்சயம்."

"இங்கே பயிற்சி பெறுபவர்களின் எண்ணிக்கை ரொம்பக் கம்மியாக இருப்பதாய்த் தோன்றுகிறதே எனக்கு?"

"அதை ஏன் கேட்கிறீர்கள்? ஒளி இழந்தவர்களும் கூட வாழ்க்கையில் முன்னேற முடியும் என்பதை அவர்களுடைய பெற்றோர்களும் கற்றத்தாரும் பிடிவாதமாக நம்ப மறுக்கும்போது என்னத்தைச் சொல்ல?" என்று அலுத்துக் கொண்டார் நந்தகோபால். "'பள்ளிக் கூடமாவது? ஒன்றாவது! வீட்டோடு கிட' என்று கூறி விடுகிறார்களே. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், டாக்டர்கள் முதற்கொண்டு இப்படித் தவறாக எண்ணுகிறார்கள், ஸார்!" என்று பரிதாபப்பட்டார்.

"அது சரி! நீங்கள் விரும்புவதுபோல் எல்லாருமே துரதிர்ஷ்டவசத்தால் இந்தக் கதியை அடைந்து விட்ட குழந்தைகளைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பச் சம்மதிக்கிறார்கள் என்றே வைத்துக் கொள்வோம். நாட்டிலுள்ள இம்மாதிரியான சிறுவர் சிறுமியர் அனைவருக்கும் படிப்பறிவு புகட்ட வசதி இருக்கிறதா?"

"அதுவும் யோசிக்க வேண்டியதுதான். எஸ். எஸ். எல். ஸி. வரை கல்வி தரும் பள்ளிகள் இதைப்போல் இந்நாட்டிலேயே மொத்தம் மூன்றுதான் உள்ளன. மற்றவையெல்லாம் தொழில் பயிற்சி அளிப்பதுடன் சரி. இன்னும் எவ்வளவோ முன்னேற்றம் அடைய வேண்டும்."

"அப்படி, கண்ணிழந்தவர்கள்தான் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள்?"

"உலக முழுதிலுமுள்ள குருடர்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் நம் பாரத புண்ணிய பூமியில்தான் இருக்கிறார்கள்! எண்ணிக்கை லட்சக் கணக்கில் போகும். அதிலும் ஒரு வெட்கக்கேடான விஷயத்தைக் கேளுங்கள்! இவர்களில் இருபதுக்குப் பதினாறு பேர்களைக் குணப்படுத்திவிட முடியும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். போதிய வைத்திய வசதி இல்லாததால் அவர்கள் தொடர்ந்து இந்த நிலையிலேயே நிர்க்கதியாக வாழ்கிறார்கள். பள்ளியில் சேர்ந்து பயன்பெறுவோர் சில ஆயிரம் பேர்களே."

ஸ்ரீ நந்தகோபால் இங்கிலாந்து சென்று கண்பார்வை இழந்தோரின் சம்ரட்சணைக்காக விசேஷப் பயிற்சி பெற்றுத் திரும்பியவர் என்றும் அறிந்தேன். அவரைப் போன்ற உற்சாகிகள் ஒன்று சேர்ந்தால் பொதுமக்கள், சர்க்கார் இவர்கள் ஒத்துழைப்புடன் விரைவிலேயே நம் நாட்டில் நாம் அவமானப்படக் கூடிய அளவுக்குப் பரவியுள்ள இந்த நிலையை மாற்றி அமைக்கலாம் என்று நினைத்தவாறே விடைபெற்றுக் கொண்டேன்.

"நீங்கள் புறப்படுவதற்கு முன்னால் எங்கள் பள்ளியின் பழைய மாணவர் ஒருவரைச்

சந்திக்க வேண்டும்'' என்றார் பிரின்ஸிபால் நந்தகோபால்.

அறிமுகமான பின் அவருக்கு முகமன் கூறி, ''தற்போது என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''கிறிஸ்டியன் காலேஜில் எம். ஏ. பட்டம் பெறப் படித்து வருகிறேன்'' என்றாரே பார்க்கலாம்! முன்னர் எனக்குள்ளே உருவாகியிருந்த அபிப்பிராயங்கள் எல்லாம் ஒரு நொடியில் மாறிவிடவே, மென்று விழுங்கினேன் நான். கல்லூரியில் அவர் எப்படிப் பாடங்களைக் கற்கிறார் என்பதைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் உண்டாயிற்று எனக்கு.

''வகுப்புக்களில் பாடங்களை உன்னிப்பாகக் கவனிக்கவேண்டும். நானாகவே படித்துப்பயன் பெறும் வகையில் 'பிரெயில்' அச்சில் கல்லூரிப் பாடப் புத்தகங்கள் அதிகமாகக் கிடையாது. உள்ள ஒன்றிரண்டும் எனக்குத் தேவைப்படாது. ஆகவே, பாடங்களை யாரையேனும் படிக்கச் சொல்லிக் கேட்பேன். ஒரு டேப் ரிகார்டர் இருந்தால் வகுப்பில் புரொபஸர் கூறுவதையெல்லாம் ஒலிப்பதிவு செய்து கொண்டு பின்னால் மீண்டும் மீண்டும் அதைக் கேட்டு அறிவை வளர்த்துக் கொள்ளலாம். இந்த வசதிகளெல்லாம் மேல் நாடுகளில் சர்க்கார் செய்து தருகிறார்கள்'' என்றார்.

அப்படிப்பட்ட வசதிகள் ஏதுமில்லாமலேயே முன்னுக்கு வருவதில் முனைந்து நிற்கும் அவரை அதிசயத்துடன் நோக்கினேன் நான்.

''சமீபத்தில் ஒரு புத்தகம் படித்தேன், ஸார்!'' என்று ஆரம்பித்தேன்.

''வேத் மேதாவைத்தானே குறிப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டார் கிறிஸ்துவக் கல்லூரி மாணவர் ஸ்ரீதரன்.

திக்கு முக்காடிப் போனேன். ''ஆமாம்! எப்படி ஊகித்தீர்கள் அதை?'' என்றேன் ஆச்சரியத்துடன்.

''என்னைப் போன்ற ஒருவனிடம் சமீபத்தில் வெளியான வேறு எந்தப் புத்தகத்தைப் பற்றிப் பேசப் போகிறீர்கள்?'' என்று கேட்டார் அவர்.

என்னை வெட்கம் பிடுங்கித் தின்றது. மகத்தான குற்றம் புரிந்து விட்டவன் போலக் கூனிக் குறுகி உட்கார்ந்திருந்தேன்.

அதை நண்பர் எப்படியோ புரிந்துகொண்டு விட்டார் போலும்! சமாதானம் கூறுபவர் போல, ''வேத்மேத்தா ரொம்பத் திறமைசாலி தான். வறுமையுடனும் ஒளியற்ற கண்களுடனும் போராடியவாறே அமெரிக்கா சென்று பல இடையூறுகளுக்கிடையில் படித்துப் பட்டம் பெறுவது இலேசான காரியமா, என்ன? அந்தப் புத்தகத்தைத்தான் எவ்வளவு ரசமாக எழுதியிருக்கிறார்!'' என்றார்.

''அவருக்குக் கிட்டிய வாய்ப்பு இங்குள்ளோருக்கு அமைந்து விட்டால் ஒவ்வொருவருமே அவரைப்போல் உயர முடியுமே!'' என்றேன் நான்.

''முயன்று பார்ப்போம்'' என்றார் நண்பர் அடக்கத்துடன்.

''அந்தப் புத்தகத்தைப் படித்தபோது ஒரு விஷயம் என் மனத்தில் பதிந்தது. உங்களைப் போன்றவர்கள் பிறருடைய தயவை எதிர்பார்த்து வாழ்வதை வெறுக்கிறீர்கள், இல்லையா?''

''வாஸ்தவம்தான். காரணமின்றி எங்களிடம் கருணை காட்டுவோரைக் கூட என் போன்றோருக்குப் பிடிப்பதே இல்லை. எங்களை நாங்களே கவனித்துக் கொள்ள முடியும் போது அனாவசியமாகப் பிறர் உதவி எதற்கு? என்போன்றோருடன் பேசும்போது வேண்டுமென்றே சிலர் 'பாருங்கள்' என்ற வார்த்தையையே உபயோகிக்காது இருப்பார்கள். தப்பித் தவறி அந்தச் சொல்லைக் கூறிவிட்டாலும் பிறகு அடி உதட்டைக் கடித்துக் கொள்வார்கள்!'' என்று கூறிச் சிரித்தார் அவர். ''அப்படிப் பயப்பட வேண்டியதே யில்லை. சகஜமாகப் பழகுவதையே நாங்கள் பெரிதும் விரும்புகிறோம்.''

'வாஸ்தவம்தான்' என்று எனக்குள் நினைத்துக்கொண்டேன்.

'எண்ணும் எழுத்தும் கற்றுணர்ந்த இவர்களை ஒளியிழந்தவர்கள் என்று கருதுவதுதான் எவ்வளவு அபத்தம்?'

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு**

என்ற வள்ளுவர் வாசகத்தை நினைவுறுத்திக் கொண்டு சென்னை திரும்பினேன்.



# கல்கி

## புத்தாண்டு மலர்

160 பக்கங்கள்

30 காசு

சுவையான புதிய அம்சங்கள்

# திருமூலர் தவ்

ராஜாஜி எழுதும் கட்டுரைத்

# அன்பே ஆரமுதே

தி. ஜானகிராமன்
எழுதும்
சமூகத் தொடர் நாவல்



# நரி வேட்டை



கதை

சித்திரம்

# மொழி

தொடர்



# பட்டுப்பூச்சி

குறுநாவல்

இன்னும் பலப் பல!



# கொடுத்து வைத்தது

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

காலையில் எழுந்ததும், விவரிக்க இயலாத ஒரு புத்துணர்ச்சி என்னுள் பரவியது. இன்று ரயிலில் ஜானு வருகிறாள்.

என் வீட்டுக்கு வரப் போவதில்லை. அந்த ஊரில் இறங்கப் போவதுமில்லை. ஸ்டேஷன் வழியாக ரயிலில் போகப் போகிறாள். மிஞ்சிப் போனால் மூன்று நிமிஷ சந்திப்பு. அவ்வளவு தான்; ஆனால்? ஆறு வருஷங்களுக்குப் பிறகு அவளை மீண்டும் பார்க்கும் இந்தச் சந்தர்ப்பம்? அதை நினைத்ததும்தான் உடல் புல்லரித்தது.

கார்டை மீண்டும் எடுத்து, வரும் தேதியையும் ரயிலையும் பார்த்தேன். கோலம் போட்டதுபோல் முத்து முத்தான எழுத்துக்கள். கார்டில் இரண்டே வரி. அதில் வேறு எந்தத் தகவலும் இல்லை. ஆனால் அவை என்னுள் தூண்டிவிட்ட ஞாபகங்கள்?

மழை பெய்யக் குவியும் மேகங்களைப் போல் நினைவுகள் வேகமாய்த் துரத்தலாயின.

அப்போது நான் கல்லூரியில் கடைசி வருஷப் படிப்பை முடித்துக் கொண்டு விடுமுறைக்காகக் கிராமத்துக்கு, மாமாவிடம் போயிருந்த சமயம். நல்ல வேனிற் காலம். காவேரி ஆற்றில் புதுத் தண்ணீர் வரத் தொடங்கி விட்டது. இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு, மறுபடியும் கரையோடு கரை ஆற்றுநீர் ஓட ஆரம்பித்ததைப் பயன்படுத்திக் கொள்ள, படித்துறையில் காலை நேரக் கூட்டம் நிரம்பியிருந்தது.

எனக்கு நீந்தத் தெரியாது. வெளியில் சொன்னால் பரிகாசம் செய்வார்களோ என்ற பயம். ஆற்றங்கரைக்குப் பத்து மணிக்கு மேல், கூட்டம் வடிந்த பிறகு, போனேன். படித்துறையில் யானை படுத்ததுபோலப் பெரிய மேடை. அதன் அருகே கப்பும் கிளையுமாக நிழல் விரிக்கும் அரச மரம். நீர்மேல் கவியும் கிளையில் குரங்குகள் அனாயாசமாக ஊஞ்சலாடிக் கொண்டிருந்தன.

'குபு குபு'வென்ற சத்தம் கேட்டுத் திரும்பினேன். மேடையில் ஒதுக்கமாய் நான் உட்கார்ந்திருந்ததை அந்தப் பெண் பார்க்கவில்லையோ என்னவோ? நீரில் கொஞ்ச தூரம் இறங்கி அமிழ்ந்தவள், குலுங்கி எழுந்தாள்.

கட்டவிழ்ந்து நெளிந்த கூந்தல். வெண்தாமரை போன்ற மேனி. உடலில் பொங்கிய இளமையில் கூச்சம் செறிந்தது. அங்கச் செருக்கின் தெளிவில் அழகு இளமுறுவலாய்ப் பொங்கியது. 'புரு புரு'வென்று வட்டமிட்ட கண்கள் என்னைப் பார்த்துவிட்டன. சட்டென்று நீரில் அமுங்கினாள்.

நான் பார்வையைக் கரைக்குத் திருப்பிக் கொண்டேன். வாயின் அருகே புளி ஒட்ட வைத்த குடம், படியிலிருந்து உருண்டுகொண்டிருந்தது. அவள் அதைப் பார்த்திருக்க முடியாது. இரண்டே எட்டில் கரையை நோக்கி ஓடினேன். ஆற்றில் இறங்கிவிட்ட குடத்தை நான் தொடர்ந்ததுதான் தெரியும். என் காதில் விழுந்த அவள் குரல் கனவில் கேட்பது போல் இருந்தது. ஆற்று மணல் பிடி நழுவி விட்டது. நீரின் ஆழங்காண முடியாமல் கைகளை உதறிக் கொண்டேன். கண்களின்மேல் திரை மூடியதுபோல் நீர் குமிழியிட்டு ஓடியது.

இரண்டு நாட்களுக்கு நான் எழுந்திருக்கவே இல்லை. மண்டை, நீர் கொண்டு கனத்தது. கண்ணில் எரிச்சல். ஜுரத்தில் உடம்பு அனலாய்த் தகித்தது. மாமாவுக்கு நான் சரியான பதில் சொல்லவில்லை. ஆனால் அவருக்கு எப்படியோ நடந்தது தெரிந்துவிட்டது.

குடமும் கையுமாக அவள் தெரு வழியே போய்க் கொண்டிருந்தாள். என் பார்வை அவளைப் பின்னியது. பின்னாலிருந்து மாமாவின் கேலிக் குரல் கேட்டது.

'' என்னடி பெண்ணே! குடத்தைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள். என் மருமான் பத்திரமாய் ஊர் சேரணும் பாரு!''

மணிப் பின்னல் வளையல்களின்மேல் புரள, அவள் குறும்பாய்த் தலையை வெட்டி விட்டுப் போவாள். அவள் பார்வை மட்டும், என் மேல்தான் விழுந்தது போல் எனக்குப் பிரமை ஏற்படும்.

கோவிலுக்கு அடுத்தாற் போல் மாமாவுக்குக் கொஞ்சம் நிலம் இருந்தது. அந்தத் தோட்டத்தில் ஒரு புறம் பூஞ்செடிகள் வைத்திருந்தார். கோவிலுக்கும், எல்லோருக்குமே அந்தப் பூக்கள் உபயோகப்படும். அரளி, மல்லி, நந்தியாவட்டை, ரோஜா, கனகாம்பரம் இப்படி எத்தனையோ வகைகள். அவளுக்குக் கனகாம்பரமென்றால் கொள்ளை ஆசை.

புத்தகமும் கையுமாய் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு நான் அவள் கனகாம்பரம் கிள்ளும் வேகத்தையே பார்த்தபடி நிலைத்திருப்பேன்.

'' இவ்வளவு பூக்களை எப்படித் தொடுக்கிறாய்?'' என்று ஒருநாள் கேட்டேன். பேசிக் கொள்ளும் அளவுக்கு எங்கள் பரிச்சயம் வளர்ந்து விட்டது. சொடுக்குவது போல் அவளிடமிருந்து பதில் வரும். அவள் நடையில், பார்வையில், பேச்சில் பொய்யான நாணமே கிடையாது. விறுவிறுப்பான அந்த வீச்சில் அழகு போர்வையைக் களைந்து நிற்பது போலத் தோன்றும்.

என் கேள்விக்குப் பதிலாக, மறுநாள் மடியில் ஒரு மாலையைக் கட்டிக்கொண்டு வந்திருந்தாள். விரித்துப் பிரித்த மாலையை அளந்தேன். சரியாக அவள் உயரம்.

"என்ன செய்யப் போகிறாய் இத்தனையையும்...?"

"மாமிக்குக் கொடுப்பேன்."

"உனக்கு?"

"அதில் கொஞ்சம் எடுத்துக் கொள்வேன்!"

இரண்டு முழம் நானே கிள்ளினேன்.

"இந்தா உனக்கு!"

அவள் பார்வை குழைந்தது. சட்டென்று எனக்கெதிரே திரும்பினாள்.

"நீயே வை!"

அவள் செய்கையைத் தைரியம் என்று சொல்வதா? அல்லது இளமைத் துடிப்பின் வேகம் என்று பொருள் பிரிக்காமல் ஒதுக்கி விடுவதா? இரண்டுமே சரியில்லை என்றுதான் எனக்குத் தோன்றியது. ஆனால் அதன் பயனாய், என்னால் சமாளிக்க இயலாமல், இதயத்தில் எழுந்த எதிரலைகளுக்கு எத்தனை அர்த்தங்கள் கற்பிப்பது?

ஆடிப்பெருக்கு. மாமாவின் வில்வண்டியில் நாங்கள் நால்வருமாகப் போனோம். மாயாவின் விஷமப் பார்வைக்குத் தப்பிக்கவே எங்களுக்குப் பொழுது சரியாக இருந்தது. மரத்தடி நிழல், கட்டுச்சாத வேட்டை, புளியங் கொட்டை ஆட்டம், சப்பிப் பாதையில் வண்டி மாட்டின் ஓட்டம், காதில் கிறுகிறுவென்று குலுங்கிய சதங்கைச் சத்தம், எல்லாமே பின்னணியாக நின்றுவிட்டன. கழன்றோடிய அவள் பார்வை மட்டும் ஒவ்வொன்றிலும் முத்திரையாக விழுந்திருந்தது. நினைவின் மருங்கில் சூழ்ந்த அவள் உருவத்தை விதம் விதமாய்க் கற்பனை செய்து கொண்டு எனக்குள்ளே மகிழ்ந்து கொண்டேன். பதமாகாத அந்த உணர்ச்சிகள் அவ்வளவு தூரத்துக்கு அவளிடம் எதிரொலித்திருக்குமோ, என்னவோ? என்னால் அவள் மனத்தை அளவிட முடியவில்லை.

மாமா ஊரிலிருந்து என் ஜாதகத்தை வரவழைத்திருந்தார். எனக்கு அதன் காரணம் தெரியும். தெரியாதது போலவே ஒதுங்கிக் கொண்டேன். மாமா என்னை விடவில்லை.

"சொத்துள்ள இடம். ஒரே பெண். உன்னைச் சரியாகக் கட்டி மேய்க்கக் கூடியவள் தான்!" என்றார்.

நான் வெட்கிப் போனேன். என்னால் பதில் சொல்ல முடியவில்லை. அவள் நினைவு பூத்த அந்த வேளையில் இனம் தெரியாத மகிழ்ச்சி என்னுள் மதுரமாய்க் கனிந்தது.

மறு நாள் இரவு. திண்ணையில் மாமாவும் நானும் தனியாக உட்கார்ந்திருந்தோம். காற்று விழுந்து விட்டது. புரையில் அகல் விளக்குக் கடைசிப் பொறிக்குத் தடுமாறிக் கொண்டிருந்தது. மாமாவின் முகம் சரியாகத் தெரியவில்லை. அவர் பேச்சை எதிர்பார்த்துக் கொண்டு, என் ஆர்வத்தை வெளிக் காட்ட முடியாமல் உட்கார்ந்திருந்தேன்.

"உனக்குக் கொடுத்து வைக்கலேடா! ஒரே பெண். எப்படிக் கொடுப்பார்கள்? அவள் வாழ்ந்து அனுபவிக்க வேண்டாமா? உனக்குக் களத்திரம்."

ஏமாற்றத்தில் அவர் குரல் கரகரத்து உடைந்தது. நான் அதிர்ந்து போனேன். என்னைச் சுற்றிலும் கருமேகம் சூழ்ந்து படர்ந்தது போன்ற ஓர் உணர்ச்சி என்னை அழுத்திக்கொண்டிருந்தது.

அன்று இரவு நான் தூங்கவில்லை. கனவில் கண்ட வசீகரம், விழிப்பின் வெளிச்சத்தில் மறைவது போல் ஒரு சஞ்சலம். இருளில் கைகள் புரண்டு துழாவியபோது, எண்ணங்கள் தடுமாற்றம் கொண்டன.

ஊருக்குத் திரும்ப ஒரு வாரம்கூட இல்லை. ஜானுவின் கண்ணுக்குப் படாமல் தப்பிவிட விரும்பினேன். அவள் எந்த நேரத்தில் எங்கே இருப்பாளென்று எனக்குத் தெரியும். அந்த இடங்களுக்குப் போகாமல் ஒதுங்கிக் கொண்டேன். அவள் நினைவே தாங்க இயலாத சுமையாக இருந்தபோது, அவளை நேரில் சந்திக்கும் தைரியம் எனக்கு இல்லை.

கோவிலை அடுத்தாற்போல் பூக்கடை ஓரம் போகும் போது, என் கண்கள் என்னை அறியாமல் அவளைத் தேடின. எதிர்பாராமல் அவளைப் பார்த்துவிட்ட அதிர்ச்சி எனக்கு. கசங்கிய பூவிதழ்போல் அவள் முகம் துயரத்தில் வதங்கி நின்றது. அவள் பார்வையைச் சந்திக்குமுன் என் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். ஆனால் அவளைப் பார்க்காததே நெஞ்சில் பெருங் குறையாகச் சுமந்தது.

ஊருக்குப் போவதற்கு முதல்நாள், சாயங்காலம் தோட்டத்துக்குப் போனவன், அப்படியே உட்கார்ந்து விட்டேன். முன் நிலாக் காலம். மரத்தடியில் ஒளியும் நிழலும் கோலம் புனைந்தன. வானில் கற்கண்டுப் பொடியை இறைத்தாற் போல் நட்சத்திரங்கள். பின்னால் யாரோ நிற்பது போல் ஓர் உணர்ச்சி. திரும்பினேன்.

"இதுக்காக நீ என்னை மறந்துவிட மாட்டியே!" என்றாள் ஜானு. அவள் குரல் என்னை உலுக்கியது. என்னென்னவோ யோசனைகள். எனக்கு அப்போது திடீரென்று அந்த உணர்ச்சி ஏற்பட்டது. அவள் உள்ளங்கையில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டேன். அவள் என்னைத் தடுக்கவில்லை.

"நீ நன்றாக இருக்கணும், ஜானு!" என்றேன். என் குரல் தழுதழுத்தது. அதற்குப் பிறகு நான் அவளைச் சந்திக்கவே இல்லை.

இப்போது ஆறு வருஷங்களுக்குப் பிறகு அவளைப் பார்க்கப் போகிறேன். அவள் எப்படி யிருப்பாள்? அவள் கணவனுடன் வருகிறாளா? தனியாக வருகிறாளா? அவளுக்கு எத்தனை குழந்தைகள்? என்னை எப்படி அறிமுகப்படுத்துவாள்?

இளமைப் பருவத்தில், ஆறு வருஷங்கள் என்பது நீண்ட காலம். விவரமில்லாத பருவத்திலிருந்து வாழ்க்கையில் அமைதியாக இறங்கிவிடும் அளவுக்கு, நடுவே கிடக்கும் இந்த ஆறு ஆண்டுகள் எத்தனை மாறுதல்களைக் கொண்டுவந்து விட்டனவோ? அவளுக்கு எப்படி என் விலாசம் தெரிந்தது? நான் அவளிடம் புதிதாக எதைக் காணப் போகிறேன்?

நேரம் நெருங்க நெருங்க என் மனம் பரபரப்படைந்தது. ரயில் வர ஒரு மணி நேரத்துக்கு முன்னதாகவே கிளம்பி விட்டேன். ஸ்டேஷனுக்குப் போகும் வழியில் கடைத் தெரு. பூக்கடைவாசலில் சற்றுத்தயங்கினேன்.

கனகாம்பரம்!

இரண்டு முழம் இருக்கும். பொட்டலத்தைப் பைக்குள் வைத்துக் கொண்டேன். அவள் கண்களில் ஆச்சரியம் தேங்குவதைப் பார்க்க மனத்தில் ஓர் அர்த்தமில்லாத ஆசை.

ரயில் வந்து நிற்கும் வரை எனக்குப் பொறுக்கவில்லை. ஓடும் ஜன்னலில் கண்கள் அவள் முகத்தை விரைவாய்த் தேடின.

தலையை நீட்டி அழைத்தது அவள்தான்! எவ்வளவு மாறிவிட்டாள்? ஆனால் என்ன? வாழ்க்கையின் எத்தனையோ கவலைகளிலும் அந்த முகம் எனக்கு ஞாபகம் இருக்கும்.

ஓடிப் போய் ஜன்னலுக்கு வெளியே நின்றேன். அவள் மட்டும்தான் வந்திருந்தாள். திடீரென்று மறுபடியும் சந்தித்தபோது என்ன பேசுவதென்றே தெரியவில்லை. என்னென்னவோ கேட்க வேண்டுமென்று திட்டம் போட்டு வைத்திருந்தது மறந்து விட்டது.

சட்டைப் பையிலிருந்து அவசரமாய்ப் பொட்டலத்தை எடுத்தேன். அவள் நீட்டிய கையில் வைத்தேன். அவள் முகம் ஏனோ விழுந்து விட்டது!

அந்த ஒரு கணத்தில் எடுத்துச் சொல்லத் தவிக்கும் எத்தனையோ ஞாபகங்கள். மறந்து போன எத்தனையோ உணர்ச்சிகள் சட்டென்று உருவெடுத்தன. அவளை நிமிர்ந்து பார்த்தேன். ஆழமில்லாத பார்வையோடு அவள் எங்கேயோ உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். இமைப்பில் அடக்க முடியாத தடுமாற்றம் நெஞ்சில் நச்சரித்தது.

"சாரு! இங்கே வா! இந்த மாமாவை வந்து பார்!"

சரியாகத் தூக்கம் கலையாத கண்களோடு அந்தக் குழந்தை வெளியே எட்டிப் பார்த்தது. கூச்சமும் குழப்பமுமாய்ப் பார்க்கையில் அவள் சாயலேதான். பரிச்சயம் செய்து கொள்ளும் பாவனையில் கன்னங்கள் குழிந்தன.

"உனக்கு என்ன வாங்கிண்டு வந்திருக்கா, பாரு?"

பூவைக் குழந்தைக்குக் காட்டிவிட்டு முன் தலையில் செருகினாள். எனக்குத் திடீரென்று எல்லாம் புரிவது போல் இருந்தது. பொங்கி வந்த வேதனை கண்டத்துள் புயலாய்ச் சூழ்ந்தது.

"குழந்தைக்கு நன்றாக இல்லை?"

என் குரல் குமுறலை வெளியிட முடியாமல் ஓய்ந்தது. "எனக்கென்று ஆகிவிட்டால் நீ இருக்க மாட்டா யென்றாய்களே ஜானு! கடைசியில் நீ இப்படி ஆகிவிடுவா யென்று—"

விரக்திப் புன்னகையோடு அவள் என்னைப் பார்த்தாள். "இதெல்லாம் பிராப்தமில்லையா, மணி? நான் இருந்து அனுபவிக்க முடியாதென்று உன் ஜாதகத்தைத் தள்ளினதும், இப்போது அவர் போய் நான் மட்டும் பின்தங்கி அனுபவிக்கிறதும்—"

ரயிலின் ஊதல் அவள் மேலே சொன்னதை விழுங்கிவிட்டது.

"மாமாவுக்கு டாடா சொல்லு!"

குழந்தையின் பிஞ்சு விரல்களை உயர்த்திய வளைகளில்லாத அவள் மூளிக் கையையே பார்த்தபடி நின்றேன். ரயில் நகர்ந்தது.



பரமக்குடி உதவி மின்சார இன்ஜினீயர் திரு துரைசாமி அய்யரின் புதல்வி சௌ. பார்வதிக்கும் திரு கோபால கிருஷ்ண னுக்கும் விவாகம் நடைபெற்றது.



பர்ன்பூர் கல்கி ஏஜண்ட் திரு ராமநாத சிரௌதிகளின் சகோதரி சௌபாக்கிய வதி லலிதாம்பாளைத் திரு ஹரிஹரன் மணம்புரிந்து கொண்டார்.



பம்பாய் திரு ராமன் அவர்களின் புதல்வி சௌ. செல்லத்துக்கும் திரு நாராயணனுக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது.



திரு கே. எம். சுப்பிரமண்யம் அவர் களின் புதல்வி சௌ. சரஸ்வதிக்கும் திரு பரமேசுவரனுக்கும் வெகு சிறப்பாக விவாகம் நடந்தது.



திரு சுப்பிரமணியன் அவர்களுக்கும் சௌபாக்கியவதி சரோஜாவுக்கும் திருச்சியில் அதி விமரிசையாகத் திரு மணம் நடந்தேறியது.



திரு எஸ். ராம்மோகன் அவர்களுக்கும் சௌபாக்கியவதி ஜயலக்ஷ்மிக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந் தேறியது.



சிறுவர்கள்
முகம் மலர
சிறந்த பரிசு

**Nutrine**

**மிட்டாய்கள்**



நியூட்ரைன் கன்பெக்‌ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட்
சித்தூர் (ஆந்திரப் பிரதேசம்)

NC-59a

---

முயற்சியின் வெற்றியில் நாம் பெருமையடைகிறோம். கவர்ச்சியான தோற்றத்திற்குப் பளபளப்புடைய கருமையான கேசம் முக்கியம். அதற்குச் சிறந்தது வாஸ்மால்

**அழகுடன் திகழும் கேசம் வெற்றிக்கு அறிகுறி!**

வாஸ்மால் சிறந்த கூந்தல் தைலம். கூந்தலை கருமையாகச் செய்கிறது. கேசவளர்ச்சியை ஊக்குவிக்கிறது. தைலமாகவும், பொமேடாகவும், மோசடி செய்ய முடியாத மூடியுடைய பாட்டில்களில் எல்லாக் கெமிஸ்ட்டுகளிடமும் கடைகளிலும் கிடைக்கும்.



கூந்தலின் இயற்கை வளர்ச்சிக்குச் சிறந்ததான லேனலின் சேர்ந்தது வாஸ்மால். கேசத்திற்கு அதிகப்படியான பாதுகாப்பை அளிக்கிறது.



**Vasmol**

கருமையை வளர்க்கும் கூந்தல் தைலம்
ஹைஜீனிக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்
தபால் பெட்டி 1192, பம்பாய்-1

சென்னை ஏஜெண்டுகள்
ஆர். எல். கவுடர் & கம்பெனி
பந்தர் தெரு .: சென்னை-1

# உள்ளடக்கத் தாமரை

அந்த அழகான மாதாகோயிலின் வாயிலே அடைந்ததும் என் கால்கள் தாமாக நின்று நிலேத்தன. வானளாவிய வெள்ளைக் கோபுரம்; அதன்மீது கையில் செங்கோல் ஏந்தி நிற்கும் கன்னி மாதா மேரியின் பொற்சிலே. கீழே பளிங்குத் தரையிட்ட பிரார்த்தனைக்கூடம். அதன் முடிவில் உயர்ந்த மேடைமீது கர்த்தரின் சிலுவைச் சந்நிதானம்!

எழில் கொஞ்சும் இப் பெரிய ஆலயத்தைத் திருச்சி 'கன்டோன்மெண்டி'ல் புதிதாகச் சமைத்திருந்தார்கள். பல வருடங்களுக்குப் பிறகு இங்கே நான் மீண்டும் மாற்றலில் வந்து பதினைந்தே தினங்கள் தாம் ஆகின்றன வென்றாலும், தினமும் இவ்வழி செல்கையில் ஒரு கணமாவது இந்தத் திருக்கோயிலின் முன்னே நின்று அதன் அபூர்வ அழகை ரசித்து வியக்காமல் சென்றதில்லே.

இன்றும் அப்படித்தான்; ஆனால் சற்று அதிகமாகவே அங்கே நின்றுவிட்டேன்; காரணம், செல்வ மாளிகை போலிருந்த அந்த ஆலயத்தின் திரு வாசலிலே வறுமையின் சித்திரம் போல் நின்று ஓர் ஏழைக் கிழவி மெழுகுவர்த்திகளை விற்றுக் கொண்டிருந்த காட்சிதான்.

தொழுவதற்கு வரும் பக்தர்கள் அரை அணுவோ, ஓரணாவோ சில்லறையை அந்தக் கிழவியின் நடுங்கும் கையிலே போட்டு விட்டு, பதிலுக்கு அவளிடமிருந்து ஒரு மெழுகுவர்த்தியை வாங்கிக் கொண்டு உள்ளே சென்று கொண்டிருந்தார்கள். ஆண்டவனுக்கு ஒளி விளக்கு ஏற்ற வேண்டுமென்ற விருப்பத்தைத் தவிர, இந்த ஏழைக் கிழவிக்கு உதவ வேண்டுமென்ற இரக்கமும் சேர்ந்ததால்தான் அவர்கள் இவளிடம் வர்த்திகளை வாங்குகிறார்கள் என்றே தோன்றியது. இந்தக் காட்சி என் நெஞ்சை நெகிழ்த்துகையில், கால்கள் தாமாகக் கிழவியை நெருங்கின. என் வருகையைக் கவனித்த கிழவி, ''அருள்ராசு! உனக்கு மெழுகுவத்தி வேணுமா?'' என்று அன்புடன் வினவினுள்.

அருள்ராசுவா? அது யார் பெயர்? நான் அயர்ந்து நிற்கையில், ''ஆமாம். ஒனக்கு எல்லாருமே அருள்ராசுதான்! என்னமோ கலக்கம். ம்-ம்ம்...சுருக்க எனக்கு ஒரு வத்தி குடு!'' என்று அரையணுவை அவள் கையிலே போட்டார் யாரோ ஒருவர்.

''எனக்கு எல்லாரும் அருள்ராசுதான்; எல்லாரும் என் செல்வம்தான்!'' என்ற கிழவி யந்திரம் போல் ஒரு வத்தியை எடுத்து அவர் கையிலே கொடுத்தாள்.

என் வியப்பு விரிந்தது. 'அருள்ராஜ்..! என் செல்வம்!' இவ்வார்த்தைகள் என் நினைவில் மின்னல்களாக ஒளிர்ந்து, இனமற்ற குழப்பமும், திகைப்பும் என்னைச் சூறையாடுகையில், ''ஆயி...!'' என்று விளித்தேன் என்னையறியாமல்.

''அப்படிக் கூப்பிடு, அருள்ராசு!'' காலைக் கதிரொளியில் மின்னிச் சிரிக்கும் வெடித்த வயற்கடை போல் கிழவியின் முகம் பின்னும் ஒளிர்ந்தது. ''நீ யாரு கண்ணு?''

'ஆயி' யென்று நான் அழைத்ததும், அவள் பதிலுக்குக் 'கண்ணு' என்று கூவிய விதமும் கூட என்னுடைய சந்தேகத்தைத் தானே உறுதி செய்கின்றன? ஆனால்....அப்படியும் இருக்க முடியுமா?

''நான் ஒனக்குத் தெரிஞ்சவன்தான், ஆயி! இப்ப நீ எங்கிட்டு இருக்கே?'' என்றேன் ஆவல் மிஞ்ச.

''என் வூட்டுக்கு வர்றியா அருள்ராசு? நெசமா வரணும். தென்னூர் டேவிட் தெருவுலே 'சாம்ஸன் சால்'னு கேளு...''

அவளை மேலே பேசவிடாமல் மெழுகுவர்த்தி வாங்கும் அன்பர்கள் சூழ்ந்து கொண்டார்கள். நானும் நகருகையில், என் சிந்தனையும் பின்னேக்கி ஊர்ந்தது.

★

சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகள் அவை....

அப்போது நான் இங்கே திருச்சி சூசையப்பர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். என்னுடன் படித்த சக மாணவர்களில் ஒருவன்தான் அருள்ராஜ். கிறிஸ்துவக் குடிப் பெருமகன். பிறந்தவுடனேயே தந்தையை விழுங்கிவிட்ட அதிருஷ்டக் கட்டை. ஆனால் இந்தப் பெருங் குறையை என்றும் உணராத வகையில் உயிருக்குயிராய் அவனை அளவற்ற வாஞ்சையுடன் வளர்த்து வரத் தாயார் என்னும் ஒரு தெய்வம் இருந்தாள் அருள்ராஜுக்கு.

அவள் பெயர் மரியம்மா!

தன் உதிரத்திலிருந்து பிரிந்த மகனுக்காகவே உயிர்வாழ்ந்த அன்னை அவள். அருள் ராஜுவே அவளுக்கு மூச்சுக் காற்று; அவன் சுகமே அவள் சுகம்; அவனே அவளுக்கு உலகம், உயிர், வாழ்க்கையெல்லாம்!

ஆனால் எவ்வளவுக்கு மரியம்மா, தான் பெற்ற செல்வத்தின் மீது பித்தாக இருந்தாளோ, அவ்வளவுக்குப் பிள்ளையின் மனசு

எஸ். விஜயராகவன்

"இறு அழகு! தூணில் கட்டி வைத்துத் தோலை உரிக்க வாணும்?" என்று ஆசிரியர் கைப் பிரம்பை ஓங்கினார்.

அவ்வளவுதான்; மௌனமாயிருந்த மலை வெடித்ததே போல் மரியம்மா மகனின் மீது வேங்கையாய்ப் பாய்ந்தாள். "வெக்கங் கட்ட மூதி! ஒன்னைப் பெத்ததுக்கு என்ன அவமானம்டா எனக்கு? இனியாச்சும்




ஏறே கல்லாகத்தான் இருந்தது. கொண்டவன் மாண்டது முதல் வருமானம் அற்றுப் போய்விட்ட மரியம்மா அண்டை அயலில் வீட்டுப் பணிகள் புரிந்து நாலு காசு சம்பாதித்தாள். அதில் அவள் உண்பது அரை வயிறுதான்; உடுத்துவது அரைக் கந்தல்தான். எஞ்சிய யாவும் அருமை மகனுக்கே அர்ப்பணமாகும். ஆனாலும் அவள் பாடுபட்டுச் சேர்க்கும் பணத்தை மண்ணாக மதித்துத்தான் வீண் விரயம் செய்வான் அருள்ராஜ்; மேலும் மேலும் காசென்றும் பணமென்றும் பெற்றவளைப் பிடுங்கி எடுத்து விடுவான். ஆனால் அந்த அருமை அன்னை ஒரு தடவையாவது முகம் சுளித்திருப்பாளா?

★

ஒரு நாள் பள்ளியில் சகமாணவனுடைய பேனாவைத் திருடி விட்டான் அருள்ராஜ். தலைமை ஆசிரியர் மரியம்மாவுக்குச் சொல்லி யனுப்பினார். அவள் வந்ததும் விஷயத்தைக் கூறி அருள்ராஜைக் கண்டித்தார். மட்டற்ற அவமானமடைந்த மரியம்மா மகனின் பக்கம் பார்வையைத் திருப்பினாள். ஆயினும் அன்புப் பிள்ளையின் ஆசை முகத்தைக் கண்டதும் அவள் உள்ளம் நெகிழ்ந்து விட்டது.

"ஏண்டா, அருள் கண்ணு! இப்படிச் செய்யலாமாடா செல்லம்?" என்றுதான் அவளால் குழைய முடிந்தது.

ஆசிரியர் சினம் கொண்டார். உரக்கக் கூவினார். "நல்லாயிருக்குதே நீ திருட்டுப் புள்ளையைக் கண்டிக்

இப்படிக் கயவாளித்தனம் பண்ணுமே இருப்பியா ?''

கூவிக்கொண்டே, நடுங்கும் கையால் மகனின் கன்னங்களில் ஆவேசத்துடன் 'கடக் கட' இரு முறை அறைந்தாள் மரியம்மா. பிறகு அவன் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு வேகமாக வெளியேறினாள்.

ஆனால் அன்று பாலையில் நான் அருள் ராஜைக் காண அவன் வீட்டுக்குச் சென்ற போது அங்கே கண்ட காட்சி? பள்ளியிலே மகனை அடித்து, இழுத்துச் சென்ற அந்த அன்னை வீட்டை அடைந்ததும் அந்தக் 'கொடுமை' தாளாது பருகித் தவித்துவிட்டாள். அந்தக் 'கொடுமை'க்குப் பிரதியாக மகனை அடித்த தன் கைமீது, ஒரு விறகுக் கட்டையால் நையப் புடைத்துக் கொண்டு விட்டாள் அந்தத் தாயார்.



நான் பார்க்கையில் மரியம்மாவின் வலக் கரத்தின் மேற்புறம் அப்பமாக உப்பியிருந்தது. அதனால் ஏற்பட்ட வலியால் அவள் உடலே துடித்துக் கொண்டு இருந்தது.

★

அருள் ராஜ் தன் படிப்பை முடித்துக் கொண்டான். மரியம்மா அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை.

'' இனிமேல் எனக்கென்ன கொறை? என் செல்லம் ஒரு வேலையிலே குந்திட்டா, நானும் 'அம்மாடி'ன்னு அவன் நிழல்லே ஒதுங்கிக்கிடுவேன் !''

அருள்ராஜுக்குச் சென்னையிலே ஒரு நல்ல வேலையென்னவோ இடைக்காமலில்லை. மாசம் நூறு ரூபாய் சம்பளம். அதை ஏற்க அவன் கிளம்புகையில் மரியம்மா அழுத அழுகை மகனின் கல் மனத்தைக்கூடக் கனியச் செய்திருக்க வேண்டும்.

'' ஆயி, கவலைப்படாதே. ஒனக்கு வாரம் தப்பாமே கடுதாசு எழுதறேன். மாசா மாசம் பணமும் அனுப்பறேன். சீக்கிரமே ஒரு வாட்டி லீவுலேயும் வர்றேன்'' என்று சொல்லிப் போனான்.

சொன்னபடியே வாரா வாரம் மகனிடமிருந்து வரும் கடிதங்களை எடுத்துக் கொண்டு என்னிடம்தான் ஓடி வருவாள் அந்தத் தாயார். அவற்றைத் திரும்பத் திரும்பப் படித்துக் காட்டும்படி என்னை வதைப்பாள். நான் படிப்பது அவள் செவிகளிலே இன்பத் தேனாகப் பாயும்; அவளது வறண்ட முகமும் மலர்ந்து ஒளி சிந்தும் !

ஆனால் மாதங்கள் மறைந்தன; அருள் ராஜினிடமிருந்து வரும் கடிதங்கள் குறைந்தன. பிறகு ஒரு மாதமாகக் கடிதமே இல்லை. மரியம்மாவின் தொந்தரவைத் தாள முடியாமல் நான் அவனுக்குப் பல கடிதங்கள் எழுதினேன். அவற்றுக்கெல்லாம் பதில் கிடைக்காதது மட்டுமின்றி, வழக்கமாக வரும் 'மணியார்டரும்' வரவில்லை !

மரியம்மாவின் தாயுள்ளம் தவித்தது; உணவும், உறக்கமுமின்றி மகனை நினைவாகப் புலம்பிக் கொண்டிருந்தாள். நான் அளித்த பொருள் உதவியையும் அவள் ஏற்கவில்லை. இந்த நிலை நீடித்தால் அம் முதிய உயிர் எப்படி உடற் கூட்டில் ஒட்டி நிற்கும்?

நல்ல வேளையாக அடுத்த வாரம் முதலே அவள் தன் துயரை மறந்தவள்மாதிரி எழுந்து வெளி வந்தது ஆறுதலை அளித்தது. ஓடியாடி வேலைகளைக் கவனித்தாள் மரியம்மா; வயதுக்கு ஒவ்வாத சுறுசுறுப்புடன் வளைய வந்தாள். இந்த விந்தைக்குக் காரணம் அடுத்த தடவை நான் அவள் வீட்டுக்குச் சென்றபோது தான் வெளிச்சமாகியது.

'' தம்பி, நெனச்ச காரியத்தை முடிக்கப் போறேன்; எல்லாம் தயார்தான் !'' என்றாள் மரியம்மா.

'' என்ன ஆயி, புரியலியே...''

'' அருள் என்னமோ கடுதாசியே போடலே. பாவம், அதுக்கு என்ன கயிட்டமோ? முன்னாலே முடியுதா ஓடிப்போய்ப் பார்க்க? பட்டணத்துக்கு ரயில் கட்டணமே பத்து ரூவாயாமே! இருந்தாலும் நாலு எடத்திலே கூடவே வேலை வெட்டி செஞ்சேன்; மெளகா, அரப்பு எல்லாம் இடிச்சுக் குடுத்தேன்.... இப்படியே ஒரு மாசமா ஒளச்சு, ஒளச்சு.....''

'' ஆயி...!'' என்று கூவினேன் என்னையறியாமல்.

'' கேளு தம்பி; நீ ஆதங்கப் படறது புரியுது. ஆனா எல்லாம் என் மவனுக்காகத் தானே? அப்பிடியும் பாரு, ஒரு அஞ்சு ரூபாதான் சேந்திச்சு. இத்தே எடுத்துக்கிட்டுப் பட்டணம் போயிட முடியுமா ?''

'' ஆயி, இதென்ன கூத்து? நீங்களாவது, இந்தத் தள்ளாத வயசுலே பட்டணம் போறதாவது? அந்த நன்றிகெட்ட நாயைத் தேடிக்கிட்டு நீங்க எங்கேயும் தனியாப் போறதை நான் ஒப்ப மாட்டேன் !''

'' என் கண்ணல்ல !'' என்று தன் எலும்புக் கரங்களை எழுப்பி, என் தலைப் பொட்டைத்

தடவித் திருஷ்டி முறித்தாள் மரியம்மா. தொடர்ந்து, "கோவத்துலே கொளந்தையைத் திட்டாதே, கண்ணு! அவனுக்கு என்ன கஷ்டமோ? தொலைவிலே இருக்குது குழந்தை. எப்படியாச்சும் நான் போயிப் பார்க்கணும்....முடியிலே, எப்படியோ மனசைக் கல்லாக்கிக்கிட்டு —" என்று கூறி அவள் மேலே சொல்லெழாமல் விம்மினாள்; விசும்பினாள்.

"அதுக்காக என்னதான் செஞ்சிட்டீங்க ஆயி?" என்று கேட்டேன்.

"ஆண்டவனுக்கு ஒப்பான 'அவுரு'தான் என்னை மன்னிக்கணும்!" என்று அழுத மரியம்மா, வலக்கையால் மார்பில் சிலுவைக் குறியிட்டு, 'ஆமென்' என்று முடித்தபடி பார்வையைச் சுவரில் தொங்கும் தனது கணவனின் புகைப்படத்தின் மீது பதித்தாள். பிறகு, "அவுக கண்ணாலத்துக்குப் போட்ட மோதிரத்தை வித்துட்டேன்!" — என்று விசும்பினாள்.

என் கண்கள் பனித்து விட்டன. அருமைக் கணவன் திருமண தினத்தன்று அணிவிக்கும் மோதிரம் அவர்களுக்குத் தாலிக்குச் சமானமாயிற்றே! கணவன் மறைந்த பிறகு ஒரே நினைவுப் பரிசாக இருக்கும் அவ்விலையற்ற பொருளை இந்த மகனுக்காக விற்கவேண்டுமென்றால், அந்தப் பெற்ற மனத்தின் பித்தை எப்படி வருணிப்பது?

நான் எவ்வளவோ சொல்லியும் மரியம்மா கேட்கவில்லை. ஒருநாள் தனது கந்தல் துணி மூட்டையுடன் அந்த அன்பு உருவம் தனது கல் மனக்கார மகனைக் காண்பதற்காக ரயிலேறி விட்டது.

அதற்குப் பிறகு மரியம்மாவைப் பற்றியோ, அல்லது அருள்ராஜைப் பற்றியோ யாதொரு தகவலும் இல்லை. நானும் படிப்பை முடித்துக் கொண்டு பெங்களூருக்கு உத்தியோகம் ஏற்கச் சென்று விட்டேன்.

இந்த நிலையில் பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு, இப்போது நான் மாற்றலில் திருச்சிக்குத் திரும்பியதும், மரியம்மாவை இந்தமாதா கோயிலில் காண நேர்ந்தது எவ்வளவுவிந்தை!

★

மறுநாள் காலையில் நேராகத் தென்னூர் டேவிட் தெருவிலிருந்த மரியம்மாவின் சிறிய அறையை அடைந்தேன். "வா தம்பி!" என்று மலர்ந்த முகத்துடன் வரவேற்றாள் கிழவி. தொடர்ந்து, "ஏன் தம்பி, அருளோட கூடப் படிச்ச பாபுதானே நீ? நேத்து நீ போனதுலேருந்து யோசிச்சுக்கிட்டே யிருந்தேன்; இப்பத்தான் புரிஞ்சுது—" என்றாள்.

"ஆமாம் ஆயி, ஒங்களுக்கு நல்லா நெனவு இருக்குதே! ஆனா அருள் இப்ப எங்கே? நீங்க தனியாகப் பட்டணம் போயி அவனைக் கண்டு பிடிச்சீங்களா...?"

"ஓ! எல்லாம் கர்த்தரோட கருணை! நான் பட்டணம் போவச்சே வழியிலே ஒரு பையன் ரயில்லே ஏறிச்சு. அவனும் அருள்ராசுவும் ஒரே கம்பெனியிலே வேலை பாக்கறவங்கன்னு பேசச்சே தெரிஞ்சிது. அந்தக் கொழந்தே என்னைக் கொண்டாந்து அருளோட சேர்த்திடுச்சு!"

"ஆனா அவன் ஏன் ஒங்களுக்குக் கடிதமே போடலியாம்....?"

"என்னவோ குழந்தைக்கு நேரமேயில்லே. போடாத போனாத்தான் என்ன?....ஆனா, சேதி தெரியுமா தம்பி; அருள் ராசு பட்டணத்துலே ஒரு பெண்ணைக் கல்யாணம் கட்டிக்கிட்டிருந்தான்!"

"சரிதான்! அதனாலேதான் ஒங்களை மறந்திட்டானுங்காட்டியும்? பொண்ணு யாரு, ஆயி?" என்று வினவினேன்.

"யாரோ கோவா தேசத்துப் பொண்ணாம்! டெலிஸ்ஸான்னு பேரு. நல்ல பொண்ணுதான், குழந்தை ஆசைப்பட்டுக் கண்ணாலம் கட்டிக்கிட்டிருக்கான். ஆனா அதோட நான் இன்னா பேச முடிஞ்சிச்சு? அது 'தஸ் புஸ்'னு இங்கிலீசுலே பேசும்! எப்படியோ குழந்தை சந்தோசமா இருந்தாப் பத்தாதா எனக்கு!" என்று சிரித்தாள் மரியம்மா.

'ஒன் தலையிலே அவள் நெருப்பை அள்ளிப் போட்டாக்கூட ஒனக்கு அது 'ஐஸ்' மாதிரி இருக்கும்; அவ்வளவு பைத்தியம் நீ!' என்று கூவவேண்டும் போலிருந்தது எனக்கு. ஆனாலும் அடக்கிக் கொண்டு, "ஆயி! இப்ப அருள் அங்கே?" என்றேன்.

"நான் பட்டணம் போன ஒரு மாசத்துக்கெல்லாம் அந்தக் கம்பெனியிலே அருளை பம்பாய்க்கு மாத்திட்டாங்க. டெலிஸ்ஸையும் இட்டுக்கிட்டுப் போயிடுச்சு குழந்தை. நான் மட்டும் இங்கே திரும்பிட்டேன்."

"நீங்க மட்டும் அவனுக்குப் பாரமாயிட்டீங்களாக்கும்!" என்றேன் எரிச்சலுடன். பிறகு, "அவன் பொறவாலே திரும்பி வரலியா? இப்ப பதினஞ்சு வருசத்துக்கும் மேலாவுதே? கடுதாசியாச்சும் எழுதறானா?" என்று வினவினேன் ஆதுரத்துடன்.

"ஓ! கடுதாசி போடறானே...பாக்கறியா தம்பி?" என்ற அவள் ஓடிப் போய் ஒரு சிறிய மரப்பெட்டியைத் திறந்தாள். அதனுள் ஒரு பழுக்காய்ப் பேழை. அதையும் திறக்கையில் உள்ளே ஓர் உறை. அதனுள் அருமையாகப் பத்திரப்படுத்தி வைத்திருந்த ஒரு கடிதத்தை மெல்ல எடுத்துக் கொடுத்தாள் மரியம்மா.

அதை வாங்கிப் படித்த நான் அப்படியே கல்லாகி விட்டேன். அது பம்பாயிலிருந்து அருள்ராசு எழுதிய கடிதம்தான். ஆனால் ஜூன் பதினைந்து, 1943 என்றல்லவா தேதி போட்டிருக்கிறது! அப்படியானால் பன்னிரண்டு வருடங்களுக்கு முன் வந்த கடிதமாயிற்றே அது! இதைக் காண்பிக்கிறாளே இந்தப் பைத்தியக்காரி!

"பொறவு வேறே கடிதம் வரலியா ஆயி?"

"வரும்....வரும்....செல்லத்துக்கு எழுத நேரம் கிடைக்க வேணுமா?"

வியப்பு என்னை விழுங்கிச் சீரணித்தது. எவ்வளவு சுயநலமற்ற பேரன்பு அவளுடையது? தியாகமே உருவான இந்த அன்னையைத் தவிக்க விட்டுவிட்டுத் தொலைதூரம் போய்விட்டானே மகன்; பிறகும் அவளைப் பற்றி மறந்தே போய்விட்டானே அக்கிராதகன்! ஆனாலும் மகனின்மீது வைத்த மரியம்மாவின் அன்பு மாறவில்லையே! அருகதை

அனேக விதமான கிரீம்களையும், லோஷன்களையும் பற்றி அலட்டிக்கொண்டு ஆத்திரப்படுவானேன்? பல நன்மைகளை பயக்கும் நிவியா கிரீமினால் உங்கள் சருமத்தை பாதுகாக்க முயற்சியுங்கள்



**உங்கள் வதனத்திற்கு**

நிவியாவில் உங்கள் சருமத்திற்குள் ஊடுருவிச் செல்லும், அருமையான, இதமளிக்கும் யூஸரைட் என்ற எண்ணெய் சேர்க்கப்பட்டுள்ளது. சருமத்தைப் பளபளப்பாகவும் ... மாசற்றதாகவும்...எழிலுடையச் செய்கிறது.



**உங்கள் கரங்களுக்கு**

சோப்பினாலும், தண்ணீராலும் கழுவப்பட்டுவிடும் இயற்கையான எண்ணெய்ப்பசையை உங்கள் சருமத்திற்கு திரும்பவும் அளிக்கிறது...சரும வெடிப்புகளுக்கும், மொரமொரப்பிற்கும் சமனமளிக்கிறது...உங்கள் கரங்களை பசுமையாகவும், மிருதுவாகவும் விளங்கச் செய்கிறது.



**குழந்தைகளுக்கு**

நிவியா புண்களுக்கு இதமளிக்கிறது...குழந்தைகளின் இளஞ் சருமத்தை பராமரித்து பக்குவமாக பாதுகாக்கிறது.



சருமத்திற்கு நிச்சயமாக வேண்டுவது நிவியா



யற்ற நியவன்மீது படரவிட்ட அந்தப் புனித மான அன்புத் தளை அறுந்து ஒழியாதா?

எனக்கு அருளின்மீது பிறந்த ஆத்திரத்தி னாலோ என்னவோ, மரியம்மாவின் மாசற்ற அந்த அன்பு அழிவதைக் காணவேண்டு மென்றுகூட என்னுள்ளே ஒருவெறி பிறந்தது.

★

வீடு திரும்பிய எனக்கு மீண்டும் ஒரு வாரத்துக்கு மரியம்மாவைக் காணப் போக இயலவில்லை. பிறகு ஒருநாள் மாலையில் அங்கே சென்ற என்னைக் கண்டதுமே, "பாபு! குழந்தை கடுதாசி போட்டிருக்கு; அடுத்த வாரம் வரப் போவுது!" என்று தன் வயசை யெல்லாம் விழுங்கிவிட்டுக் குமரிபோல் குதித் தாள் மரியம்மா.

என்னால் நம்ப முடியவில்லை. கடிதத்தை வாங்கிப் பார்க்கையில், என்ன அதிசயம்! அது பம்பாய் முத்திரையிட்ட கடிதம்தான்; தேதியும் இம் மாதத் தேதிதான்! பிரித்துப் படித்தேன் :

'அன்புள்ள ஆயிக்கு,

கர்த்தரின் கருணையால நானும், டீலி லாவும் சுகம். உன்னுடைய நலமறிய அவா.

நாளைய திங்களன்று பம்பாயிலிருந்து புறப்பட்டுச் செவ்வாயன்று பட்டணத்தில் இறங்குவேன். அன்றிரவு எக்ஸ்பிரஸில் புறப்பட்டு, புதன் காலையில் திருச்சி வருகிறேன். அருள் ராஜ்'

"பார்த்தியா பாபு, அருள் வந்திடுச்சின்னு எனக்குக் கவலையே இல்லே. வர வர என் ஒடம்பும் சரியில்லே. கடோசிக் காலத்துலே குளந்தை மடியிலே தலையை வைச்சு, இந்த ஒடம்பை உதறிட்டு 'அவுக' கிட்ட — கர்த்தரு கிட்ட — போயிறணும்!" என்று எல்லையற்ற களிப்புடன் கூறினாள் மரியம்மா.

எனக்கு ஆத்திரம் தாளவில்லை. எழுந்த வெறுப்பை விழுங்கிக் கொண்டு, "நல்லது ஆயி! புதன்கிழமை காலையிலே நானே ஸ்டேஷனுக்குப் போயி அருளை இட்டுக்கிட்டு வர்றேன்..." என்று எழுந்தேன்.

★

புதன்கிழமையை நானும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இந்தத் தடவை அருள்ராஜை நான் விடப் போவ தில்லை. அன்பு வடிவான அன்னை யெனும் தெய்வத்துக்கு அவன் இழைத்த கொடுமை களை எடுத்துக் காட்டி அவனை நிந்திப்பேன்; அவனை நல்வழிப்படுத்தி, இந்தக் கிழவியின் எஞ்சிய நாட்களுக்கு இன்பத்தை அளிக்க வேண்டுமென்றும் எனக்குள் ஒரு தீர்மானம்.

ஆனால், புதன்கிழமை அதிகாலையில் திருச்சி ஸ்டேஷனில் எவ்வளவோ நேரம் காத்திருந் தும் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் வரவில்லை. அதற்குப் பதிலாக வந்த அந்தக் கோரச் செய்தியை என்னவென்று சொல்வேன்?

செவ்வாய் இரவு சென்னையை விட்டுப் புறப்பட்ட தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் அரிய லூர் அருகில் தடம் புரண்டு விட்டதாம். அநேக பெட்டிகள் சுழன்று ஓடும் நதியில் விழுந்து, எண்ணற்ற பிரயாணிகளை வெள்ளம் விழுங்கிவிட்டதாம்! இறந்தவர்களின் ஜாபிதா வில் முதல் பெயர் அருள்ராஜினுடையது!

இக் கொடுஞ் சேதி என்னை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது. ஆனாலும் ஏனோ விபத்தில் இறந்த மற்றவர்கள் மீது பிறந்த அளவு அநுதாபம்தான் எனக்கு அருளின் மீதும் பிறந்தது. அப்போது இடிபோன்ற இந்தச் செய்தியை மரியம்மாவின் அன்பு உள்ளம் எப்படித் தாங்கும்; யாராவது திடீரென்று செய்தியைக் கூறி அவளுக்கு அதிர்ச்சி ஏற் பட்டு விடக் கூடாதே என்ற திகிலுடன் உடனேயே தென்னூருக்குப் புறப்பட்டேன்.

வழியெல்லாம் என் மனத்திலே விசித்திரச் சிந்தனை வியூகமிட்டது. மரியம்மா மகன் மீது வர்ஷித்த கண்மூடித்தனமான அன்பை நான் ஒரு நாளும் ஒப்பியதில்லை. அந்த அன்பு அழியக் காண வேண்டுமென்று கூட நான் ஏங்கியதுண்டு. ஆனால் அருள்ராஜ் இவ் வளவு கொடுமைகள் புரிந்தும் அவள் தன் அன்பை அழித்துக் கொள்ள வில்லையே! அந்த அன்பு இப்போது அழியத்தான் போகிறது. அன்புக்கு இலக்கான பாத்திரமே இப்போது வெள்ளத்தில் அழிந்து போய் விட்ட பிறகு, அவன் மீது செலுத்தப்பட்ட இந்த அன்னை யின் அன்பும் அழிய வேண்டியதுதானே? கலம் இன்றிக் கஞ்சியோ, உடல் இன்றி உயிரோ உண்டா?

அன்பின் இந்த அழிவைக் காணத் துடித்த ஒரு வெறியுடன்தான் நான் மரியம்மாவின் அறையில் அடியெடுத்து வைத்தேன். பாவம், மகனுக்கு நேர்ந்த கோர முடிவை அறியாத அவள் படுக்கையிலே அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். மெதுவாக உள்ளே நுழைந்தேன். மகனின் வருகைக்காக அறையை அழகுபடுத்தி வைத்திருந்தாள் கிழவி. சமையல் மேடையில் விதம் விதமான பணியாரங்கள். மெல்லக் கட்டிலண்டை வந்த நான், "ஆயி!" என்று விளித்தேன்.

பதிலில்லை.

"ஆயி... ஆயி...!"

அப்போதும் பதிலில்லை. அண்மையில் சென் றும் நோக்கினேன். மகனைக் காணப் போகும் களிப்பில் தூங்கும் நிலையிலும் அவள் முகம் மலர்ந்திருந்தது. கூவிக் கொண்டே அவள் உடல் மீது கையை வைக்கையில் —

ஐயையோ! என்ன குளிர்ச்சி!

திரும்பிய என் பார்வை பூசை அலமாரியில் அவிந்து புகைந்து கொண்டிருந்த மெழுகு வர்த்தியின் மீது விழுந்தது.

அப்படியானால் என் எண்ணம் தோல்வி யடைந்து விட்டதா? கல்நெஞ்சனான மகனின் மீது வைத்த அவளது வேண்டாத அன்பு அழி வதைக் காண விழைந்த என்னை ஏமாற்றி விட்டாளே கிழவி! நதியில் பெருக்கெடுத்து ரயிலைக் கவிழ்த்த வெள்ளம் கூட அருள் ராஜைத்தானே அழித்தது? அவன் மீது வைத்த அவள் அன்பை அதனால் அழிக்க முடியவில்லையே! மகனை விட்டுப் பிரிய இயலாத அந்த அன்னையின் ஆவி, அருள்

ராஜு சென்று விட்ட இடத்துக்கு அவனை வரவேற்க முந்திக்கொண்டு போய் விட்டதோ?

வியப்புடன் மெழலியின் கரங்களை மடித்து மார்பின் மீது இருத்தினேன்; பாதி மலர்ந்திருந்த ஒளியற்ற விழிகளையும் மூடியபின் திரும்பினேன். பக்கத்தில் பெஞ்சு மீது இதழ்கள் பிரிந்து கிடந்த கர்த்தரின் அருள் மொழிகள் அடங்கிய புத்தகத்தின் மீது என் பார்வை சரிந்தது. அருகில் நெருங்குகையில், ஆண்டவன் அருளிய அடியில் கண்ட அர்த்தமுள்ள வரிகள் என் கண்களைத் திறந்தன :

"வெள்ளத்தால் அழியாது
வெந்தழலால் வேகாது;
கள்ளமிலா அன்பு தனை
உள்ளடைக்கத் தாழேது ?"

# நல்லதொரு நாடக விழா

சமீபத்தில் ஐந்து தினங்களுக்கு இங்கு கலை வெள்ளம். கல்கி பைன் ஆர்ட்ஸ் கிளப் அங்கத்தினர் அமரர் கல்கியின் நாடகங்களையும், கூத்தபிரானின் சில நாடகங்களையும் தில்லிவாசிகள் கண்டு களிக்க வாய்ப்பளித்தனர். அமரதாரா, என் தெய்வம், அவள் நினைவு, களங்கம் தீர்த்தவள் ஆகிய இந் நாடக சம்பந்தமான விமரிசனங்கள் கல்கியில் ஏற்கனவே வெளிவந்து விட்டன.

நாடகத்தில் எம்மைப் பெரிதும் கவர்ந்த அம்சம் கூத்தபிரானின் கலை ஆர்வம் தான். முப்பது வயதுகூட நிரம்பாத அவர் முப்பது நபர்களின் ஒத்துழைப்போடு அவர்களுக்குக் கலையைப் புகட்டி விரசமில்லாமல் நாடகங்கள் சமர்ப்பிக்கிறார். சினிமாவின் பலமான போட்டியிருக்கும் இந் நாட்களில் இந்தச் சாதனை எவ்வளவு போற்றத்தக்கது என்று சொல்லத் தேவையில்லை.

ஹாஸ்ய நடிப்பில் கூத்தபிரானுக்கு பிரமாதமான லாகவம் இருக்கிறது. லவலேசமும் தங்கு தடையின்றி நறுக்கு சம்பாஷணைகளை உதிர்த்துத் தள்ளும் ஆற்றல் அவருக்கு இருக்கிறது. ஆனால் இதே ஆற்றல் அவரைச் சில சமயம் சேற்றில் இழுத்துத் தள்ளி விடுகிறது. பாருங்கள்; "களங்கம் தீர்த்தவள்" என்ற நாடகத்தில் ஒரு ரஸமான கட்டம். கதாநாயகி வழுக்கி விழுந்தவள் என்று குற்றம் சாட்டப்படுகிறாள். பார்வதியாய் நடித்த ஜி. சரோஜா ரொம்பவும் உருக்கமாக இந்தக் கூற்றை எதிர்த்து வாதாடிக் கொண்டிருக்கிறாள். கதாநாயகியின் தம்பியாய் வந்த கூத்தபிரான், போட்டாரே தூக்கி ஒரு ஹாஸ்ய வெடி குண்டை! "ஆமாம், அவள் ஒரே ஒரு முறை வழுக்கி விழுந்திருக்கிறாள் - (நிசப்தம்) -ஆனால் வாழைப்பழத் தோல் மீது!" அந்தச் சூழ்நிலையே பாழ்நிலையாகப் போய் விட்டது. இதை நான் ஒரு குற்றமாகக் கூறவில்லை. எவ்வளவுக்கெவ்வளவு ஹாஸ்யம் கட்டுக்குள்ளடங்கி வருகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு ருசி.

அமரதாராவை நாடகமாக்குவது மிகவும் கடினம். அதைச் சுவை குன்றாது ஓரளவுக்கு நன்றாகவே நடித்துக் காட்டினார்கள். நிறையக் காட்சிகளை வைத்துக் கொள்வதில் உள்ள சிரமங்களை இவர்களும் பட்டார்கள். அதற்கு ஈடு கொடுக்க (கதைக்குச் சம்பந்தமில்லாத) ஹாஸ்யத் தொடர்களை நடத்தினார்கள். அய்யாக்குட்டியும் பாக்குட்டியும் சபையோர்களைச் சிரிக்கச் சிரிக்க அடித்தார்கள் என்றாலும். மொத்தத்தில் பார்க்கும்போது அமரர் கல்கியின் கதைக் கோவையில் ஹாஸ்யத்துக்கு அதிகப் பிராதான்யம் கொடுக்கும்படி அமைந்து விட்டது.

நடிகைகளில் ஜி. சரோஜா முதல் தரம். அழவோ, சிரிக்கவோ, வேதனைப்படவோ, வெகுளித்தனமாய்ப் பேசவோ இந்தக் குமாரி பிரமாதத் திறன் பெற்றிருக்கிறாள். தமிழ் நாடக மேடைக்கு நல்லதொரு சொத்து. டி. கே. ராஜேஸ்வரி எழில் மங்கைப் பாகங்களுக்கு வெகு பொருத்தம். விழி வழி மொழி பேசும் இக்குமாரி மேடையில் வந்தாலே ஒரு தனிச் சோபை. உதட்டை ஓர் அசை அசைத்தால் பல்வேறு பாவங்கள் பளிச்சிடுகின்றன. "என் தெய்வத்தில்" விதவைத் தாயாராக வந்து சபையோரைக் கண் கலங்க அடித்து விட்டார். ஏ. சாந்தா தேவி பரவாயில்லை. தன்னை மறந்து நடிக்கும் தன்மை இன்னும் வராவிட்டாலும் திடீர் திடீரென்று நடிப்பின் சிகரத்தையே எட்டிப் பிடித்து விடுகிறார். முகவெட்டுடன் பேச்சிலும் வெட்டு வேண்டும்.

ஆண் நடிகர்களில் குறிப்பாக யாரையும் சொல்வது நியாயமில்லை. எல்லோருமே தத்தம் பொறுப்புகளை உணர்ந்து நடித்தனர்.

காட்சிகளைச் சுருக்கிக் கொண்டு, ஹாஸ்யத்தைக் குறைத்துக் கொண்டு, சம்பாஷணைகளைச் சுவைத்துக் கொண்டு, சமூக ஊழல்களை மறைத்துக் கொண்டு, நல்ல அம்சங்களை எடுத்துக் கொண்டு, நாஓடாமல் பார்த்துக் கொண்டு, நயம்பட உரைத்துக் கொண்டு, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் கல்கி பைன் ஆர்ட்ஸ் முன்னேற வேண்டும்.

கடைசியாக ஒருவார்த்தை. AIFACS சங்கத்தினர் புரிந்து வரும் கலைத்தொண்டு மிகப் பாராட்டத் தக்கது. சென்ற மாதந்தான் எம். எஸ். ஸும் வேதாரண்யமும் நாதம் பொழிந்தனர். அதை ஒட்டி நாடக விழா. மகத்தான சாதனை போங்கள். - கப்பு



கூத்தபிரான்

# விஜயாலய சோழீச்சரம்

## தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

தமிழ் நாட்டின் சரிதமே அங்கிருந்து அரசு புரிந்த சேர சோழ பாண்டியர்கள் சரிதம்தானே? அதிலும் தமிழ் நாட்டில் பெரிய கோயில்களைக் கட்டிக் கலை வளர்த்த பெருமை யெல்லாம் சோழ மன்னர்களையே பெரிதும் சேரும். சங்க இலக்கியங்களில் இச் சோழ மன்னர் புகழ் பரக்கப் பேசப்படுகிறது புலவர் பெருமக்களால். இமயத்தைச் சென்டாலடித்த கரிகாலன், தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன், குள முற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், பேரவைக் கோப்பெரு நற்கிள்ளி, வேல் பஃறடக்கை, பெருவிறற்கிள்ளி, ராஜசூயம் வேட்டபெருநற் கிள்ளி முதலிய அரசர் பெருமக்களுக்குப் பின் சோழப் பேரரசு அவ்வளவு புகழ் வாய்ந்ததாக இல்லை. திரும்பவும் சோழர்களுக்குப் பெருமை தேடித் தந்தவர்களில் முதல்வனாக விளங்குபவன் விஜயாலயச் சோழனே. இவன் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் எழுந்தவன். குமாராங்குசன் என்பவனது புதல்வன். கி. பி. 846-ம் ஆண்டில் இவன் முத்தரையர் மரபினனான ஒரு குறுநில மன்னனைத் தாக்கி, அவன் ஆளுகைக்கு உட்பட்டிருந்த தஞ்சையைக் கைப்பற்றியிருக்கிறான். இவன் தன் பகைவர்களாகிய பேரரசர்களோடும் சிற்றரசர்களோடும் நிகழ்த்திய போர்கள் பல. இப் போர்களினால் இவன் மார்பில் 96 புண்கொண்ட தழும்புகள் இருந்தன என்று புலவர்கள் இவனைப் பாடியிருக்கிறார்கள்.

> எண் கொண்ட தொண்ணூற்றின்
> மேலும் இருமூன்று
> புண்கொண்ட வென்றிப் புரவலன்

என்றே விக்கிரம சோழன் உலாவில் இவன் புகழ் பேசப்படுகிறது. இவனே தஞ்சையைச் சோழ சாம்ராஜ்யத் தலைநகராக ஆக்கியவன். புதுக்கோட்டை ராஜ்யத்தில் நார்த்தா மலை என்ற ஊருக்குத் தென்மேற்கே உள்ள குன்றின்மேல் ஒரு கோயிலைக் கட்டித் தன் பின்வந்த ராஜராஜன் முதலிய சோழமன்னர்களுக்கு எல்லாம், கோயில் கட்ட வழி காட்டியிருக்கிறான். அந்தக் கோயிலையே சரித்திர ஏடுகள் விஜயாலய சோழீச்சரம் என்று குறிக்கின்றன. சோழர்கோயில் கட்டடக் கலைக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு. அதன் சரித்திரப் பிரசித்திக்காகவே அதனையும் இத் தொடரில் சேர்த்திருக்கிறேன். இன்னும் இந்தப் புதுக் கோட்டை வட்டாரத்தில் சரித்திரப் பிரசித்தி உடைய சில கோயில்களையும் காட்டலாம் அல்லவா? அதற்காகவே இந்த நார்த்தாமலை விஜயாலய சோழீச்சரத்துக்கு உங்களை அழைத்துச் செல்கிறேன்.



விஜயாலய சோழீச்சரம்

தொண்டைமான் புதுக்கோட்டை லயனில் நார்த்தாமலை ஸ்டேஷனில் இறங்கி இரண்டு மைல் நடந்தால் நார்த்தாமலைக்கு வந்து சேரலாம். இங்கு எட்டுக் குன்றுகள் ஒன்றோடொன்று நெருங்கி நிற்கின்றன. மலையடிவாரத்தில் ஊர் இருக்கிறது. சஞ்சீவி மலையை அனுமன் இலங்கைக்கு எடுத்துச் சென்றபோது, அந்த மலையினின்றும் பெயர்ந்து விழுந்த ஒரு சிறு துண்டே இம் மலைச் சிகரம் என்பர். இந்த மலையில் சிறந்த மூலிகைகள் கிடைப்பதே இதை வலியுறுத்துகிறது. நாரதர் மலையே நார்த்தாமலையாயிற்று என்றும் ஒரு கூற்று. இது எல்லாம் இல்லை. நகரத்தார் என்னும் நாட்டுக் கோட்டை செட்டியார்கள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து தெற்கு நோக்கி வந்த போது முதல் முதல் தங்கிய இடம் ஆனதால் இது நகரத்தார் மலை என்ற பெயரோடு விளங்கி, பின்னர் நார்த்தாமலை என்று குறுகியிருக்கிறது என்றும் ஒரு வழக்கு.

இம்மலையின் மேல்பகுதி மேலமலை என்று அழைக்கப்படுகிறது. அந்த மலையில் இரண்டு குடைவரைக் கோயில்கள் இருக்கின்றன. ஒன்று சமணர் குடகு என்றும் மற்றொன்று பழியிலி ஈச்சரம் என்றும் பெயர் பெற்றிருக்கின்றன. இரண்டும் பல்லவமன்னன் மகேந்திர வர்மன் குடைந்து அமைத்த குடைவரைகள் போலவே இருக்கின்றன. சமணர் குடகை பதினெண் பூமி விண்ணகரம் என்றும் கூறுகிறார்கள். பாறையில் குடைந்த மூலக்கிருஹமும் அதற்கு முன்னால் அர்த்தமண்டபமும் இருக்கின்றன. நான்கு தூண்களோடு அக் குடைவரை வெட்டப்பட்டிருக்கிறது. கருவறையில் மூர்த்தி இல்லை. அர்த்த மண்டபத்தில் பன்னிரண்டுகோலங்களில் மகா விஷ்ணு உருவாகியிருக்கிறார். பிரயோக சக்கரமும் சங்கமும் ஏந்திய திருக்கோலங்கள் அவை. குடைவரையின் முன் பகுதியில் யானைகள், யாளிகள் முதலியவை சிறிய அளவில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இது ஆதியில் ஜைன ஆலயமாக இருந்து பின்னர் தான் மாணிக்க ஆழ்வார் கோயிலாகியிருக்கிறது.

பழியிலி ஈச்சரமும் குடைவரைக் கோயிலே. எட்டு அடி நீளமும்

ஏழு அடி அகலமும் ஆறரை அடி உயரமும் கொண்ட சிறிய குடைவரையே இது. பல்லவ நிருபதுங்கனது ஆட்சியில் விடேல் விடுகு முத்தரையன் மகன் சாத்தன் பழியிலி இக் குடைவரையைக் குடைவித்தான் என்று சாஸனம் கூறுகிறது. சாத்தன் பழியிலி பல்லவ மன்னன் மூன்றாம் நந்திவர்மன் காலத்தவன். இக் குடைவரையில் துவாரபாலகர் உருவங்களும் பூதகணங்களின் வடிவங்களும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

பதினென் பூமி விண்ணகரம் என்னும் சமணர் குடகுக் கெதிரேதான், விஜயாலய சோழீச்சரம் கட்டப்பட்டிருக்கிறது. இக் கோயில் ஒரு பிரதான கோயிலையும் அதைச் சுற்றி ஏழு சுற்றுக் கோயிலையும் உடையதாய் இருந்திருக்கிறது. இவற்றைச் சுற்றிக் கல் மதில் வேறே இருந்திருக்கிறது. பிரதான கோயில் மேற்கே பார்த்தது. இக்கோயிலின் கர்ப்பக்கிருஹம் ஓங்கார வடிவத்தில் இருக்கிறது. குறுக்கில் ஒன்பதடியும் உயரத்தில் எட்டு அடியும் உடையதாக இருக்கிறது. சுவரின் கனமோ ஐந்து அடிக்குக் குறைவில்லை. நான்கு மூலைகளும் சதுர வடிவில் அமைந்திருக்கின்றன. இது முழுதும் 29 அடி சதுரம் உள்ள ஒரு மண்டபத்தின் மேல் கட்டப்பட்டிருக்கிறது. கருவறைக்கு மேலே அதே மாதிரி இரண்டு தளங்கள் வேறே இருக்கின்றன. சிகரம் வரவரக் குறுகிக் கடைசியில் ஒரு பெரிய கல்ஸ்தூபியுடன் விளங்குகிறது. இதற்கு முன்னோடியாக இருந்தது மாமல்லபுரத்தில் உள்ள தர்மராஜ ரதம்தான். இந்தக் கட்டிட முறையைப் பின்பற்றியே ராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு விமானம் எழுப்பியிருக்கிறார்.



திரிபுராந்தகர்

இக்கோயிலின் நான்கு பக்கங்களிலும் நான்கு சிம்மலாடங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு இடையில் கீழ்வரிசையில் நான்கு திக்கிலும் நான்கு ரிஷபங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோயிலைச் சுற்றிய நான்கு புரைகளில் (Niches) கற்சிலைகள் உண்டு. மேற்கில் சிவனும் பார்வதியும் தெற்கில் வீணாதர தக்ஷிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர். கருவறைக்கு முன்பு அர்த்த மண்டபம். அங்கு சுவரில் அடங்கிய அரைத்தூண்கள் இருக்கின்றன. இதன் வெளிப்புறத்தில் புரைகள் இல்லை. மண்டபத்தைத் தாங்க நல்ல கற்றூண்கள் இருக்கின்றன. தூண்களின்மேலுள்ள போதிகைகள் எல்லாம் பல்லவர் காலத்தியவைபோல் வெகு சாதாரணமாகவே இருக்கின்றன. அந்த மண்டபத்தின் வாயிலில் துவார பாலகர்கள் ஐந்து அடி உயரத்தில் கம்பீரமாய் எழுந்து நிற்கிறார்கள். ஒரு கையில் கதை இருக்கிறது. மற்றொரு கையில் விஸ்மயக்குறி — அதாவது வியப்புக்குறி இருக்கிறது. சடாமகுடம் தரித்தவர்களாக இருக்கும் அவர்கள் தலையில் கொம்புகள் போல் இரண்டு வளைவுகள் இருக்கின்றன. காதில் மகர குண்டலம், உடம்பில் கடிபந்தம், உதர பந்தம், சலங்கை போன்ற குஞ்சலத்துடன் முறுக்கிய யக்ஞோபவீதமும், கையில் கடகங்களும் அணிந்தவர்களாக அவர்கள் காணப்படுகிறார்கள். பின்னர் சோழர்கள் கட்டிய கோயில்களின் துவார பாலகர்களுக்கு எல்லாம் முன்மாதிரியாக அமைந்தவர்கள் இவர்களே என்று தெரிகிறது இந்த மூலக் கோயிலைச் சுற்றித்தான் ஏழு சுற்றுக்கோயில்கள் இருந்திருக்கின்றன. இன்று இருப்பவை ஆறு கோயில்களே. சூரியன், சப்த மாதர், சுப்பிரமணியர், கணபதி, ஜேஷ்டாதேவி, சண்டேசர், சந்திரன் இவர்களுக்கு எனத் தனித்தனிக் கோயில்கள். எல்லாக் கோயில்களும் கல்லால் கட்டிய கோயில்கள். அஸ்திவாரம் முதல் ஸ்தூபி வரையில் முழுக்க முழுக்கக் கருங்கல்லே. சுண்ணாம்புகூட உபயோகிக்காமல் செவ்வையாக இணைக்கப்பட்டிருக்கின்றன இக்கற்கள் என்று பார்க்கும்போது அக்காலத்திய கட்டிடக் கலைஞர்களது மேதா விலாசம் நன்கு விளங்கும். கோயில் கட்டிடக் கலையை ஆராய விரும்புபவர்களுக்கு, இந்தக் கோயில் ஒரு கலங்கரை விளக்கம் ஆகும். விஜயாலய சோழீச்சரம் என்னும் இக்கோயிலை உள்ளடக்கிய நார்த்தாமலையில் வேறு பார்க்க வேண்டியவை ஒன்றும் இல்லைதான். என்றாலும் ஊரை விட்டுக் கிளம்புமுன் கிராமத்தின் நடுவில் உள்ள ஜம்புகேசுவரர் கோயிலுக்கும், மாரியம்மன் கோவிலுக்கும் சென்று வழிபாடு செய்தே திரும்பலாம். மாரியம்மன் சிறந்த வரப்பிரசாதி. அங்கு நடக்கும் திருவிழாவும் மிகப் பிரபலமானது அந்த வட்டாரத்திலே.

புதுக்கோட்டை வட்டாரத்திலே இன்னும் சில கோயில்கள் உண்டு.

புதுக்கோட்டைக்கு மேற்கே பத்து மைல் தூரத்தில் அன்னவாசல் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு சென்று ஓர் ஆளைத் துணை கூட்டிக்கொண்டு கொஞ்சம் காட்டு வழி எல்லாம் கடந்து தமிழ்நாட்டின் அஜந்தாவான சித்தன்னவாசல் மலையடிவாரம் வந்து சேரலாம். வடகிழக்காகப் பரவியுள்ள ஒரு பெரிய குன்றில் இங்கே ஏழடிப்பட்டம் என்னும் சமணக்குகைகள் இருக்கின்றன. சித்தர்களாக அச்சமணர்கள் இருந்திருக்கிறார்கள். இங்கு மேற்கே பார்க்க அமைக்கப்பட்ட குடைவரை



கொடும்பாளூர் மூவர் கோயில்

யில்தான், அஜந்தாச் சித்திரங்களைப் போல் அழியாத சித்திரங்கள் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன. கொஞ்சம் மலைமேல் ஏறித்தான் இக்குடைவரையை அடைய வேணும். பின்புறம் ஒரு கருவறையும் முன்புறம் ஒரு மண்டபத்துடனும் கூடியது அது. முன் மண்டபத்திலே இரண்டு பக்கங்களிலும் இரண்டு பார்சுவ நாதரது உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. முன்புறத்துத் தூண்களிலே மகேந்திர வர்மனும் நாட்டியப் பெண் ஒருத்தியும் சித்திரத்தில் தீட்டப்பட்டிருக்கிறார்கள். முன் மண்டப விதானத்திலே ஜைனர்கள் சொல்லும் பரமபதம் என்றும் சாமவ சரவணப் பொய்கை எழுதப்பட்டிருக்கிறது. அங்கு தாமரை இலைகளும் மலர்களும் மலர்ந்து கிடப்பது கண்கொள்ளாக் காட்சி. வித்தகர் இயற்றிய கைவினைச் சித்திரம் அது. உள் மண்டபத்திலே உள்ள விதானத்திலே அழகான ரத்தினக் கம்பளம் விரித்திருக்கும். ஆம் சித்திரத்தில்தான். அழியா வண்ணங்களால் ஆக்கப்பட்டவை தாம் என்றாலும் இன்று மங்கி மறைந்தே வருகின்றன. இச்சித்திரங்கள் தமிழன் சித்திரக் கலையில் அடைந்திருந்த தேர்ச்சியை விளக்கப் போதுமானதொன்று. இக்குடை வரையும் இங்குள்ள சித்திரங்களும் மகேந்திரவர்மன் சமணனாக இருந்த காலத்தில் உருவாகியிருக்க வேணும். ஆதலால் இவை மாமல்லபுரத்தின் பொற்காலத்துக்கு முந்தியவை. ஆகவே சென்று கண்டு மகிழ வேண்டியவை.

புதுக்கோட்டையிலிருந்து செல்லும் மற்றொரு பாதை வழியாக மேற்கே பன்னிரண்டு மைல் சென்றால் புல்வயல் அடவியின் மத்தியிலுள்ள குடுமியான்மலை வந்து சேருவோம். இங்குள்ள சிகாநாதர் கோயில் மிகப் பழைய கோயில். இங்குள்ள மூர்த்திக்குச் சிகாநாதர் என்ற பெயர் எப்படி வந்தது என்று முதலில் தெரிந்து கொள்ளலாமே. மதுரையிலிருந்து ஆண்ட மன்னன் சுந்தரபாண்டியன் அர்த்த சாம காலத்துக்குப் பின்னேயே இக்கோயிலுக்கு வந்திருக்கிறார். கோயிலில் நீண்ட நேரம் இருந்த அர்ச்சகர் அர்த்த சாமம் முடிந்ததும், இறைவனுக்கு அணிந்திருந்த மாலைகளை எடுத்துச் சென்று தன் காதல் கிழத்தியான கணிகை ஒருத்திக்குக் கொடுத்து விடுகிறார். அரசன் வந்திருக்கிறான் என்பது அறிந்த அர்ச்சகர் அந்த மாலைகளைப் போய் எடுத்து வந்து அதில் ஒரு மாலையை மன்னனிடம் கொடுத்திருக்கிறார். அதில் ஒரு மயிர் இருப்பதைக் கண்டு கோபங்கொண்ட அரசனிடம் அர்ச்சகர் தைரியமாகவே, 'இறைவனுக்குச் சிகை உண்டு. அந்தச் சிகை மயிரே அது' என்று சொல்லியிருக்கிறார். அர்ச்சகர் சொல்லைக் காக்கவே இறைவன் அன்று முதல் சிகையையும் ஏற்றுச் சிகாநாதர் என்று பெயர் பெற்றிருக்கிறார். சிகாநாதர் இருக்கும் கோயிலே, குடுமியான் மலைக்கோயில். இங்கு பெரிய பெரிய மண்டபங்கள், மச்சாவதாரம் முதலிய சிற்ப வடிவங்கள், ஆஞ்சநேயர், வாலி, சுக்ரீவன் எல்லோரும் வேறே வந்து இடம் பிடித்து உட்கார்ந்து கொள்கிறார்கள் சிலை வடிவங்களில். சிகாநாதரும் அவரது துணைவி அகிலாண்டேசுவரியும் குடைவரைகளுள் இருக்கிறார்கள். நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் எல்லாம் பின்னால் எழுந்திருக்கின்றன. இக்கோயில் மேல் பிராகாரத்திலுள்ள மலையைச் செதுக்கிச் சுவர்போலாக்கி அதிலே மன்னன் மகேந்திரவர்மன் ஒரு சிறந்த சங்கீத சம்பந்தமான தகவலை வெட்டி வைத்திருக்கிறார். இது கிரந்த எழுத்தில் இருக்கிறது. வெட்டிய மன்னன் தன்னை ருத்ராச்சாரியார் சிஷ்யன் என்று அறிமுகப்படுத்திக் கொள்வதினால் அவனை மகேந்திரவர்மன் என்று கூற முடிகிறது. பரத நாட்டிய நூலுக்கும் சாரங்க தேவர் சங்கீதரத்னாகரத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் கிடைக்கும் சங்கீத சம்பந்தமான கல்வெட்டு இதுதான். மகேந்திரவர்மன் சித்திரக்காரப் புலி மாத்திரம் அல்லவே? சங்கீர்ண ஜாதியின் ஆதிகர்த்தா ஆயிற்றே.

குடுமியான் மலையை விட்டு மேற்குநோக்கிப் பத்து மைல் நடந்தால் கொடும்பாளூர் என்னும் சரித்திரப் பிரசித்திபெற்ற ஊருக்கு வந்து சேருவோம். வேளிர் தலைவர்களது பிரசித்தி பெற்ற ஊர் ஆயிற்றே. சோழ மன்னர்களுக்கு வலக்கைபோல் இருந்து போர்களில் உதவியவர்கள்தான் கொடும்பாளூர் வேளிர்கள். கொடும்பாளூரில் நாம் காண வேண்டிய இடம் இரண்டு. ஒன்று மூவர் கோயில், மற்றொன்று ஐவர் கோயில். மூவர் கோயிலில் இன்று இருப்பது இரண்டு கோயில்களே. அதுவும் இடிந்து கிடந்ததைத் திரும்பவும் எடுத்துக் கட்டி வைத்திருக்கிறார்கள். கோயில் முழுதும் கல்லாலே கட்டியிருக்கிறார்கள். அழகான சிற்ப வடிவங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். இந்த மூவர் கோயிலிலாவது இரண்டு கோயில்கள் உருப்படியாக இருக்கின்றன. ஐவர் கோயிலில் அதுவும் இல்லை. ஐந்து தளிகளையுமே காணோம். இடிந்த அடித்தளம், அங்கு சிதறிக் கிடக்கும் சில கற்சிலைகள் அவ்வளவுதான். கொடும்பாளூர் வேளிர்களில் ஒருவரான பூதி விக்கிரம கேசரி காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும். இவன் இரண்டாம் பராந்தகச் சோழன் காலத்தில் அவனுக்கு அடங்கிய சிற்றரசன் என்று தெரிகிறது.



# படித்துப் பாருங்கள்



## மண் பொம்மை

நாம் படிக்கும் நாவல்கள் ஓர் ஊரில் நில்லாமல் பல ஊர்களுக்கும் சென்று நிகழ்ந்து முற்றுப் பெறுவதைத் தான் பெரும்பாலும் பார்த்திருக்கிறோம்.

காளிந்தீசரண் பாணிக்ராஹி ஒரியா மொழியில் எழுதியுள்ள "மண்பொம்மை" ஒரே ஊரில், ஒரே குடும்பத்தில், ஒரே இல்லத்தில் நிகழ்ந்த நல்ல நாட்டுப்புறக் கதை. இந் நெடுங் கதையில் அயல்நாட்டு வாடை வீசும் ஒரு சிறு சம்பவத்தைக் கூடக் காண முடியவில்லை. காதலைப் பற்றிய பேச்சே இடையாது. ஒன்றும் இல்லாமல் ஒரு கதையா என்று யாரும் அதிசயப்படுவார்கள். படித்துப் பார்த்தால்தான் அதன் சுவை தெரியும்.

இந்த ஒரியா மொழி நாவல் முதலில் ஹிந்தியில் மொழிபெயர்க்கப்பட்டுப் பின்னர் அதிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆயினும் கதையின் உயிர் நாடி சிறிதும் சிதையவில்லை. ஒரியா மொழியில் இதுவரையில் பதினான்கு பதிப்புகள் வெளி வந்து விட்டனவாம்.

இந்நூலை ஏனைய இந்திய மொழிகளிலும் வெளியிட சாஹித்ய அகாடமியினர் தேர்ந்தெடுத்திருப்பது சரியே.

"மண் பொம்மை"யைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கும் ஸ்ரீ ரா. வீழிநாதன் எளிய நடையில் பல உயர்ந்த ஹிந்தி நாவல்களைத் தமிழாக்கித் தந்திருக்கிறார். இந்த மொழி பெயர்ப்பும் மூல நூலுக்குப் பெருமை தருவதாக அமைந்திருக்கிறது.

பிரசுரம்: சாஹித்ய அகாடமி, புதுடில்லி; விற்பனை உரிமை: பழநியப்பா பிரதர்ஸ், 4, வெங்கடேச நாயக்கன் தெரு, சென்னை-5; விலை ரூ. 3-50.

## குறப்பெண்

நவ ரசங்களில் ஒன்பது சிறுகதைகள் அடங்கியிருக்கின்றன இந் நூலில். ஒன்பது ஆசிரியர்கள் எழுதியிருக்கின்றனர். டாக்டர் மு. வ. எழுதியிருக்கும் "குறட்டை ஒலி" இந்த நூலுக்கு மட்டும் முதல் கதையல்ல; தரத்திலும் முதல் கதையாயிருக்கிறது. தாயைப் பிரிந்த நாய்க்குட்டிகளின் ஓலம் ஒரு தாயினால்தான் உணர முடிந்தது என்பதை மிகவும் அழகாக எடுத்துக் காட்டியிருக்கிறார். ரா. வீழிநாதனின் "தியாகச் சுடர்" தரத்தில் உயர்ந்து நிற்கிறது. "எல்லார்வி"யின் "வெள்ளைப் பசு" உருக்கம் மிகுந்த கதை. இசையின் தெய்வசக்தியை எடுத்துரைக்கும் கதை ர. சு. நல்லபெருமாளின் "சங்கராபரணம்", வை. சுப்பிரமணியன் எழுதியிருக்கும் "நன்னுச்சு"வை மறக்க முடியாது. அந்த நன்னுச்சுவினிடம் அன்பாயிருந்த பட்டாமணியத்தின் பரந்த உள்ளம் கதையின் சிறந்த பகுதி. மற்றக் கதைகளைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

பிரசுரம்: அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை 18. விலை 30 காசு.

## ஒரு நாள்

கவிதை இயற்ற வேண்டும் என்னும் ஆர்வம் ஒன்றையே துணையாகக் கொண்டு மதுராபுரிப் பாண்டியன் இந்தக் கவிதை நூலை இயற்றியிருக்கிறார். "கிழக்கு வெளுத்தது" "பறவைகள் பாடின", "மலர்கள் மலர்ந்தன" என்று ஒரு நாள் நிகழ்ச்சி முழுவதையும் தொகுத்துக் கூறி மகிழ வைக்கிறது இந் நூல். பாடல்கள் எளிய முறையில் அமைந்திருக்கின்றன. நயம் செறிந்த நற்கவிதை நூல் என்று நூலின் முதற் பக்கத்துத் தலைப்பிலேயே போடப்பட்டிருக்கிறது. அதைவிட நாம் வேறு கூறுவானேன்?

பிரசுரம்: பாண்டியன் பதிப்பகம், துறையூர். விலை ரூ. 1-25.

## கிராமக் கவிக்குயில்களின் ஒப்பாரிகள்

'அஞ்சேல்-காலனுக்கு அஞ்சேல்' என்று காந்தியடிகளைப் போன்ற பெரியார்கள் கூறி அச்சந் தவிர்க்க முயன்றுள்ளார்கள். இப் பெரும் பணியை நம் நாட்டுப் பெண்மணிகள் அநாயாசமாக ஆதிகாலந்தொட்டே செய்து வந்திருக்கிறார்கள். துயரத்தை மறந்து அவலத்திலும் ஒரு தனிச் சுவை காணும் வாய்ப்பைத் தங்கள் ஒப்பாரிகள் மூலம் தொகுத்து வந்திருக்கிறார்கள். வாய்மொழியாக எத்தனை எத்தனையோ ஒப்பாரிகள் இந்த நாட்களிலும் நாட்டுப்புறங்களில் நிலவி வருகின்றன. இவற்றிலிருந்து மக்கள் மரண பயத்தை எப்படி வென்றிருக்கிறார்கள் என்பதெல்லாம் தெளிவாகப் புலனாகிறது.

வெள்ளவத்தை திரு மு. ராமலிங்கம் அவர்கள் அத்தகைய பல உணர்ச்சி மிகுந்த ஒப்பாரிகளைத் தொகுத்துச் சிறந்த நூலாக வெளியிட்டிருக்கிறார்.

பாமர மக்களின் வாயிலே புகுந்து நாவுக்கிசைந்து பாவுக்கிசையும் சிறந்த கவிதைகளை இதில் காண்கிறோம்.

ஒன்பது தலைப்புக்கள் கொடுத்துச் சிறந்த விளக்கம் தந்து வெளியிடப்பட்டிருக்கும் இந்த நூல் நாடோடி இலக்கியத்திலே அக்கறை கொண்டவர்களுக்குச் சுவைதரும் நூலாகும்.

பிரசுரம்: சுதந்திரன் அச்சகம்; கொழும்பு - 12. விலை ரூ. 1-00.

## ஆறு மணி நேரம்

இலக்கியம், வரலாறு, விஞ்ஞானம் ஆகிய பொருள்களை வெறும் கட்டுரைகளின் மூலம் விளக்காமல் கருத்துள்ள கதைகளின் மூலம் விளக்குகிறது இந்த நூல்.

"துன்பத்தில் இன்பம்" என்னும் கட்டுரை வரலாற்றுப் பெருமையோடு நம் மனத்தில் பதிந்துவிடக் கூடியதாயிருக்கிறது.

''இரத்த தானம்'' சிறுவர்கள் அவசியம் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம். ''ஆறுமணி நேரம்'' என்னும் கட்டுரை விஞ்ஞான சாதனையின் வளர்ச்சியை அழகாக எடுத்துக் கூறுகிறது.

ஆசிரியர்: சே. பொன்னுசாமி, எம். ஏ. பி. ஓ. எல். பிரசுரம்: மெர்க்குரி புக் கம்பெனி, கோயமுத்தூர், விலை ரூ. 1-75.

## தமிழ்நாட்டுச் செல்வங்கள்

இந்த நூலில் அடங்கியுள்ள கட்டுரைகள் தமிழ் மண்ணின் வளத்தையும், தமிழகத்து நதிகளின் சிறப்பையும் விவரமாக எடுத்துக் கூறுகின்றன. குமரியையும், குற்றாலத்தையும், மாமல்லபுரத்தையும், தஞ்சைப் பெருவுடையார் கோயிலையும் பற்றி அழகாக விளக்கப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டில் அறிந்து கொள்ள வேண்டியவைகளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் சுவையான தமிழில் கூறி விருப்பது பாராட்டுக்குரியது. கட்டுரைகளின் ஊடே அரும் பெரும் தமிழ் நூல்களிலிருந்து பல கவிதைகள் எடுத்தாளப்பட்டிருப்பது வரவேற்கத் தக்கது.

எழுதியவர்: வித்துவான் திரு வீர. ராமலிங்கம்; பிரசுரம்: அமுதநிலையம், தேனும்பேட்டை, சென்னை-18. விலை ரூ. 2-25.

## நாடகக் கலை

நாடகக் கலையைப் பற்றி அத்துறையில் பரந்த அநுபவமுள்ள ஒருவரே எழுதி யிருந்தால் அந்த நூலுக்கு எவ்வளவு சிறப்பிருக்குமோ, அவ்வளவு சிறப்பும் இந்நூலுக்கு இருக்கிறது.

இதன் ஆசிரியர் திரு டி. கே. சண்முகம் என்பதைச் சொல்லி விட்டாலே நூல் எவ்வளவு நன்றாயிருக்குமென்பதை இரசிகர்கள் புரிந்து கொள்வார்கள். நாடகக் கலையின் வரலாற்றைச் சொல்லிய பின், நடிப்பின் இயல்பை விவரித்து, நாடகத்தில் பிரசாரக் கலப்பு எவ்வளவு அமையலாம்—அமையலாகாது இரண்டையும் கூறி முடிக்கிறார். 'நாடகத்தில் பிரசாரம்' பற்றி திரு சண்முகம் அவர்கள் கூறியுள்ள சிறந்த கருத்துக்கள் பலருக்கு நன்கு பயன்படும்.

வெளியீடு: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர். விலை ரூ. 2.

## யாப்பருங்கலம்

'யாப்பருங்கலம்' என்னும் சிறந்த செய்யுள் இலக்கண நூல் எங்கும் அச்சில் கிடைப்பதற்கு அரிதாயிருக்கும் இக்காலத்தில் அதை வெளியிட்டிருப்பதன் மூலம் சென்னை அரசாங்கப் பழஞ்சுவடிப் பதிப்புத் துறையினர் பாராட்டுக்குரியவர்களாகிறார்கள்.

தமிழில் யாப்பருங்கலக் காரிகை என்னும் சிறிய நூலுக்கு அடுத்தபடி விரிவான செய்யுள் இலக்கண நூல் 'யாப்பருங்கலம்'தான். அந்த நூலின் முதற்பதிப்பு ஒன்று பவானந்தம் பிள்ளை அவர்களால் ஏற்கனவே வெளியிடப்பட்டிருந்தும் அப்பதிப்பு கிடைப்பதில்லை. தமிழாராய்ச்சித் துறையினரும், பிறரும் 'யாப்பருங்கலம்' நூல் கிடைக்காமல் வருந்துகிற காலத்தில் இந்தப் பதிப்பு வந்திருப்பது நல்ல பயன் விளைவிக்கும்.

இந்நூலில் மேற்கோள் பாடல்களை வசனத்திலிருந்து சிறப்பாகப் பிரித்துக் காட்ட வசதியாக வேறு பெரிய எழுத்துக்களில் அச்சிட்டிருக்கலாம். இந்நூலும் விருத்தியுரையும் எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்த பதிப்பாசிரியர் வேணுகோபாலப் பிள்ளையைப் போற்ற வேண்டும்.

வெளியீடு: ஓரியண்டல் மானுஸ்கிரிப்ட்ஸ் லைப்ரரி, சென்னை; விலை ரூ: 20.25.

## தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

சாகித்திய அகாடமிக்காகச் சொல்லின் செல்வர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தொகுத்த கவிதைக் களஞ்சியம் இது. சங்க இலக்கியம், நீதிப்பாட்டு, காவியக் கவிதை, திருநெறித் தமிழ் மாலை, பல்சுவைத் தமிழ்க் கவிதை ஆகிய ஐந்து பிரிவுகளின் கீழ்க் கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. கடைசிப் பிரிவின் முடிவில் தற்காலக் கவிதைகளையும் காண்கிறோம். கடல் போல் பரந்த தமிழ்க் கவிதைகளின் முழு எல்லையையுமே இந்தத் தொகுப்பில் கண்டுவிட முடியாதாயினும் தமிழ்க் கவியின்பத்தை முழுமையாக அனுபவிக்கும் ஆர்வத்தை இந்தத்தொகுப்பு வளர்க்கும். தொகுப்பாசிரியர் தம்மால் இயன்ற அளவு பாடுபட்டுப் பகுதி பகுதியாக நல்லவற்றைத் தேடி இணைக்க முயன்றிருக்கிறார்; இம்முயற்சி வரவேற்கத் தக்கதே. இது போல் இன்னும் பல தொகுதிகளை வெளியிட சாகித்திய அகாடமியாரும் தமிழ்ப் பேரறிஞர்களும் முன்வர வேண்டும்.

விற்பனை யுரிமை: பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-5; விலை ரூ: 6.00.

## நன்றி விழா

புலவர் திரு சி. அரசப்பனார் மாணவர்களுக்குப் பயன்படும்படி எழுதிய நல்ல கட்டுரைகள் இதில் உள்ளன. நன்றிவிழா, தமிழ், அறம் மூன்று கட்டுரைகளும், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் நயமுடையன. 'முத்தமிழ்' தமிழின் மூவகை நிலைகளைக் கூறுகிற கட்டுரை. 'மைசூர் மகிழ்வுலா' ஒரு பயணக் கட்டுரை. 'நால்வர்' 'எழுத்தாளர் மரபு' முதலிய கட்டுரைகளும் நன்கு அமைந்துள்ளன. வெளியீடு: முத்தமிழ் மன்றம், உறையூர்; விலை ரூ: 1.00.

## நாவலர் நால்வர்

தமிழ்ப் புலவர்களில் நாவலர் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற நால்வரைப் பற்றி எழுதப் பெற்ற நூல் இது.

நாவலர் ச. சோ. பாரதியார், நாவலர் நாட்டார், ஆறுமுக நாவலர், மாம்பழக் கவிச் சிங்க நாவலர் ஆகிய நான்கு பெருடைய வாழ்க்கை வரலாறுகளையும் தமிழ்த் தொண்டுகளையும் சுவையாக எழுதித் தொகுத்த இந்த நூல் மாணவர்களுக்கும் பயன்பட வல்லது.

ஆசிரியர்: பண்டித ச. சாம்பசிவன்; வெளியீடு: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை—1 விலை ரூ: 1.25.

# மிக அழகிய ...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!



பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




**கால்கேட்**
பெர்பியூம்டு
காஸ்டர்
**ஹேர் ஆயில்**

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**

ECHO/GJ 3

---

# 'அனஸின்'

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ளதால்

## வலி நிவாரணத்திற்கு மிகச் சிறந்தது

1. 'அனஸின்' அதிவிரைவில் வலிகளுக்கு சமனமூட்டுகிறது. ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக இதில் விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் ஒன்று கலந்துள்ளதால் 'அனஸின்' —தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, தசைவலி ஆகியவற்றிலிருந்து அதி விரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது.

2. 'அனஸின்' பதட்டத்தைப் போக்கி சமனமளிக்கிறது. அமைதியிழந்து பதட்டப்படும் வேதனையை அடியோடு அகற்றி இதமுடன் இளைப்பாறிய பலனை உங்களுக்கு அளிப்பது 'அனஸின்'.

3. 'அனஸின்' சோர்வை விரட்டுகிறது. வலிகளுடன் அடிக்கடி தோன்றும் சோர்வை வென்றுவிடுவது 'அனஸின்'

4. 'அனஸின்' ஜுரத்தைத் தணிக்கிறது. 'அனஸினில்' கொயினா கலந்திருப்பதால், ஜுர வேகத்தைக் கட்டுப்படுத்த மிகவும் சிறந்ததாக இருக்கிறது

★ இரட்டை வில்லைகளாக ஸெல்லோபேன் தாள்களுள் சுகாதார முறையில் அடக்கமிடப்பட்டும், குடும்ப உபயோகத்திற்காக 32 வில்லைகளாக, மோசடிக்கு இடங்கொடாதவாறு சீசாக்களில் அடக்கமிடப்பட்டும் கிடைக்கின்றன.






Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED

TAM. 2-44 (A)

# மரகதச் சிலை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: விநு

பறக்கும் குதிரை நீலவேணி, ஆதித்தன் முதலானோரை மந்திரவாதியின் கோட்டை முன் கொண்டு போய் இறக்குகிறது. மற்றவர்களை அங்கேயே இருக்கச் சொல்லி தான் மட்டும் கோட்டை மீது பறந்து சென்று நிலைமையை அறிந்து வரத் தீர்மானிக்கிறான் ஆதித்தன்.









என்ன கோரமான உருவம்! நீலதேவியின் வினோத சிருஷ்டி போலும்.
ஆதித் தலை நோக்கிச் சீறுகிறது சிங்கம் விஷங்கலந்த அதன்


மூச்சுக் காற்றின் வேகம் தாளாது ஆதித் தன் மூர்ச்சையாகக் குதிரை
யிலிருந்து தலைகுப்புற விழுகிறான்.


அழாதே நிர்மலா! ஆதித்தனின் உயிருக்கு ஒரு அபாயமும் இல்லை. காயங்களை ஆற வைக்கும் ஆற்றல் பெற்ற பச்சிலைகளைக் கொண்டு வருகிறேன்.


முன்னால் காயமின் சிகிச்சை நடைபெறுகிறது.


உன் நன்றியை நல்லபடியாகக் காட்டி விட்டாய், சபாஷ் .... ஹா..ஹா


கவலைப் படாதே நிர்மலா! இந்தத் தடவை அந்த மிருகத்தைக் கொல்லாமல் திரும்புவதில்லை. உன் ஜோதி பதியின் வேறு துணை வருகிறாரோ!




அந்தக் கொடிய மிருகம் விடும் மூச்சுக் காற்று விஷஜ்வாலையாக வீசி, பல காத தூரத்துக்கு யாரையுமே அண்டவிடாமல் செய்கிறது. போதாக் குறைக்கு வாலிலே உள்ள பாம்பு வேறு. நான் இப்படி உட்


கார்ந்திருக்கக் கூடாது. என்னாலான உதவி ஏதாவது செய்து தான் ஆக வேண்டும்.


மலை உச்சி மீதிரு
ம் மிருகத்தின் பாம்பு
குள்ளனைப் பாம்பு
கொள்ளுகிறது.
ந்து நெருப்புக் காற்றை உமி
வாலைத் துண்டிக்க முயன்ற
சுற்றி வளைத்துக்


ஐயோ!
இது கக்கும்
விஷ 'ஜ்வாலை'
யைத் தாள
முடியவில்லையே!


காளியின்
ஓலம் கேட்
டதும் பத்மினி
தன் வில்லை வளைத்துப்
பாம்பின் தலைக்குக் குறி பார்த்து அடிக்கிறாள்


ஆனால் அதற்குள் பாம்பு
தன் விஷப் பற்களைக் கா
ளின் உடலில் பதித்து
விடுகிறது.


ஐயோ, காளி! உனக்கு
இந்தக் கதி ஏற்பட
வேண்டுமா!


யாருடைய கண்ணீரும்
காளியின் உயிரைக்
காப்பாற்ற முடியவில்லை


காளியின் பிரிவு ஆதித்தனிடம் ஆக்ரோஷத்
தை உண்டாக்க
ஆவேசமுடன் போரிட்
அதன் உடலில் ஈட்டி
யைப் பதிக்கிறான்.


விந்தை மிருகம் இறந்த அதே
நேரத்தில் நீலகேசியும் குரல்
வளையைப் பிடித்துக் கொண்டு
மூச்சு முட்டத் திணறி விழுந்து
இறக்கிறான். நீலகேசியின்


உயிர் நிலை அம்மிருகத்தின் உடலில்
தான் இருந்தது. ஆகவே அது இறந்
ததும் அவனும் இறக்கிறான்.


நீலகேசி தப்பி
விடுமுன் அவனைப்
பிடித்தாக வேண்டும்


என்ன விந்தை! இந்தக் கொடிய வன் என் வாளுக்கு வேலை கொடுக்காமல் தற்கொலை புரிந்து கொண்டு விட்டானே!


அதோ பாருங்கள் அந்த மரகதச் சிலை களை. அது தான் என் வெற்றி.


மன்னர் சொல்படி நீலதேவியின் ரத்தத்தைச் சிலைகளின் மீது தெளிக்கிறேன்.
என்ன விந்தை! சிலைகளாக இருந்தவர்கள் உயிர் பெற்று விட்டனரே!


அப்பா! மறுபடி உங்களை இப்படிக் கண்டேனே!


நிர்மலாவின் அழகினைக் கண்டு பத்மினி நாணித் தலை குனிகிறாள்.


பத்மினியின் நிலை கண்ட நிர்மலா, தன் தோழியைக் கேள்விக் கணைகளால் துளைக்கப் பத்மினி தான் கனவில் கண்ட கட்டழகன் அவளது சகோதரன் ஆனந்தனே என்கிறாள்.


கனவிலே தோன்றி உன் காதலைப் பெற்ற இந்தக் கட்டழகனை என் அன்புத் தங்கை உன் கணவனாக்கி வைக்கிறேன். உன் காதலைக் கொள்ளு.


எங்களுக்கு வாழ்வளித்த ஆதித்தனை உன் கணவனாக்குகிறேன்.


இந்த மகிழ்ச்சிகரமான நிலை ஏற்பட நம்மைப் பல அபாயங்களிலிருந்து காப்பாற்றிய காளி இப்போது நம்மிடையே இல்லையே. காளி நீ ஒரு தியாகி!




விமரிசையாக நடக்கப்போகும் உங்கள் திருமணத்துக்கு எல்லாரும் வந்து விடுங்கள். நமஸ்காரம். போய் வருகிறேன் பிறகு சந்திப்போம்.
தொடரும்

## நீங்கள் உறங்கும்போதே ஆஸ்தமா சளிகரைகிறது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைப்படுதல், ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து. இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள் சுவாசக் குழாய்கள் மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

## எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து. நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூரண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.





மாடல் 180R

வளையல் பிரேஸ்லெட்டுகள்
எல்லோருடைய
விருப்பத்திற்கேற்ப
அநேக டிஸைன்களில்
கிடைக்கின்றன.

"Bentex"

கைக் கடிகாரங்கள்
கடிகாரப் பட்டைகள்
பிரேஸ்லெட்டுகள்.

விற்பனை ஏஜெண்டுகள்:
பென்டெக்ஸ் ஸேல்ஸ்
கார்ப்பொரேஷன்
பென்டெக்ஸ் பில்டிங், பம்பாய்-7.

தயாரிப்பாளர்கள்:
காலின்ஸ் அண்ட் கம்பெனி
பம்பாய்-7.

எல்லா கடிகார
விற்பனையாளர்களிடமும்
கிடைக்கும்.

BSC-R/10 TAM

## அத்தியாயம் இருபத்தொன்பது

கஸ்தூரியின் நறுமணத்தில் நெஞ்சைப் பறி கொடுத்து மயங்கிக் கிடக்கும் வேளையில் அது உற்பத்தியான விதத்தை அறிய நேர்ந்தால்?

இப்படிப்பட்டதொரு கந்தபேதமான எண்ணக் கமறலில் உள்ளம் கூம்பி உட்கார்ந்திருந்தாள் தேவகி. நேற்றிரவு நடந்த அந்தச் சம்பவங்களை மறந்துவிட அவள் எப்படியெல்லாமோ முயன்றாள். அது அத்தனை எளிதில் சாத்தியமாகக் கூடியதாயில்லை. காற்றடித்த பந்தை நீரில் அழுத்த அழுத்த அது தெம்பிக் கொண்டு மேலே எழுவதைப் போலக் குமுறிக் கொந்தளிக்கும் அவளது மனக் கடலில் அந்த நிகழ்ச்சிகள் கொப்பளித்துச் சுழன்று கொண்டேயிருந்தன. இந்நாள்வரை இதுமாதிரி மன உளைச்சலை அவள் அநுபவித்ததே இல்லை. தனக்குத் தானே ஏதோ ஒரு மாபெரும் பாதகத்தை இழைத்துக் கொண்டது போலவும், அந்தப் பாதகப் பிடியிலிருந்து விடுபடும் மார்க்கமே அடைபட்டுப் போனது போலவும் அலரடைந்து மருண்டாள் அவள். 'ஒருவரது வாழ்க்கையில் துன்ப துயரங்களைத் தூவும் விதியின் கரங்கள், பெரும்பாலும் புறத்தின் துணையை நாடுவதில்லை; அது அவரவர் அகத்தின் பலஹீனத்தைக் கொண்டே செயல்படுகின்றன' என்று அவள் நெஞ்சம் குமைந்து நெட்டுயிர்த்தாள்.

உலகத்தின் ஒரு பாதியும், நிலவின் ஒரு பாதியும் இருள் செறிந்ததாகவே இருக்கின்றன. நிரந்தரமற்ற அதன் ஒளிப் பகுதியே நிரந்தரமென எண்ணி மயங்கும் மனித மனம் அதை எளிதில் கைப்பற்றிவிடலாம் என்ற தைரியத்துடன் கண்ணை மூடிக்கொண்டு தாவுகிறது. ஆனால், அப்படித் தாவிய உடனேயே கண்ணுக்குத் தட்டுப்படுவது ஒளியல்ல; இருள், இருள்! அந்த 'மாய மானை'ப் பிடிக்கும் முயற்சியில் அங்கு தலை குப்புற விழுந்து கிடக்கும் எத்தனையெத்தனையோ 'சீதா-ராமர்'களின் அவல ஓலங்களையும் அப்போதுதான் கேட்க முடிகிறது. அவர்களது வேதனையால் வீங்கி வெடித்த இருதயங்களையும், ஏமாற்றத்தால் இரத்தக்களரியான பாதங்களையும், கவலையால் கறுவடைந்து சிதைந்த சித்தங்களையும் அப்போதுதான் அங்கு காண முடிகிறது! ஏனோ பிறந்து, எதற்காகவோ வாழ்ந்து, எப்படியோ மறைந்து போகும் மனிதக் கும்பலுக்கு இப்படி ஒரு சாபமா? என்ன பயங்கரம்!...எவ்வளவு பரிதாபம்!...

விருட்டென்று எழுந்த தேவகி மாடியறையிலிருந்து கீழே இறங்கி வந்தாள். அவள் ஓடி வந்த அவசரத்தைப் பார்த்தால் எங்கோ வெளியே செல்லக் கிளம்புகிறவள் போல் தோன்றியது. ஆனால் எங்கும் போகவில்லை. தன் தந்தையின் அறைக் கதவைத் திறந்து பார்த்தாள்.

சிவப்பிரகாசம் எங்கே? நேற்று காலை கம்பெனிக்குப் போனவர் இன்னமும் திரும்பி வரவில்லை. மணி கணக்கிட்டுக் கலவை செய்து வைத்திருந்த ஏதோ ஒரு தைலத்தின் பக்குவம் முறிந்து நாசிக்குக் குமட்டலான ஒருவித நெடி மணம் அந்த அறையெங்கும் சூழ்ந்திருந்தது.

கதவைப் படீரென்று சாத்திவிட்டுக் கூடத்தறைக்குத் திரும்பி வந்து ஓர் இருக்கையில் பொத்தென்று சாய்ந்தாள் தேவகி. தன் தந்தையின் திடீர் மாறுதலை நினைக்க அவளுக்கு ஆத்திரமும் அழுகையும் அடைத்துக் கொண்டு வந்தன. அத்துடன் உள்ளூற ஒருவித பயமும் கப்பியது.

சிவப்பிரகாசம் தம் மகளை ஒரு நாளைக்குப் பார்க்காவிட்டாலும் எப்படி அலைமோதித் தவிப்பார் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். டாக்டர் ராமநாதனின் வீட்டில் அவள் சில நாட்கள் தங்கியிருந்தபோது அவர் எத்தகைய நிலையில் இருந்தார்? அப்படிப்பட்டவர் நேற்று அவள்மீது கோபித்துக் கொண்டு போய் இன்று இவ்வளவு நேரமாகியும் வீட்டுக்கு வரவில்லையே!

தன் தந்தையின் கோபத்துக்குரிய காரணம், விவேகானந்தனை மணக்க மறுத்ததுதான் என்பதை அவள் அறியாமல் இல்லை. ஆனால், தனக்குப் புத்தி தெரிந்த நாள் முதல் நேற்றுவரை தன் விருப்பத்துக்கு மாறாக ஒரு சிறு காரியத்தையும் செய்யத் துணியாதவரான அவர், இந்த விஷயத்தில் மட்டும் ஏன் இப்படிப் பிடிவாதம் காட்டுகிறார்?

பொங்கிக் குமுறிய தேவகியின் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது. 'என்னுடைய தந்தையின் விருப்பமே சரியானதாயிருக்குமோ? அதை மறுத்து நிற்கும் எனது முடிவு தவறாயிருக்குமோ?'



இந்தக் கேள்வி திடீரென்று தோன்றியதுதான் என்றாலும் இதன் மெல்லிய நிழல் நேற்றிரவு முதலே அவள் மனத்தில் இலேசாகப் படிந்திருப்பதை அறிந்தேயிருந்தாள். அந்த இருளடைந்த மொட்டை மாடி வீட்டின் கேவலமான சூழ்நிலையிலே, மதுபோதையில் மயங்கிக் கிடந்த மோகனசுந்தரத்தைப் பார்த்த போது, கல்லடிச் சுருங்கிய அவன் உள்ளத்தில் கருக்கொண்டு தைத்த கேள்வி இதுதான்:

'இவ்வளவு மோசமான நடத்தையுள்ள ஒருவனையா இத்தனை நாட்கள் உயர்வாக எண்ணி என் உள்ளத்தில் வைத்துப் பூஜித்து வந்தேன்? விவேகானந்தனை வெறுத்து ஒதுக்கியதற்கு வேறொரு முக்கிய காரணம் உண்டு என்றாலும், இவன்மீது கொண்ட தூய கவர்ச்சியால் தானே அவனை வேண்டாமென்று மறுத்தேன்? இப்போது அவனுக்கு இவன் எந்த வகையிலும் உயர்ந்தவனாகத் தெரியவில்லையே! அவன் அறிவுக்கு

அடிமையாகித் தன் மனத்தை அறுத் தெறிந்து விட்டிருக்கிறான்; இவன் உணர்ச்சிகளுக்கு அடிமையாகி அறிவைத் துறந்தவனாய் இருக்கிறான். இவர்களில் யாரைச் சிறந்தவனாகக் கொள்ள முடியும் ?'—

தேவகியின் நெஞ்சம் வெடித்து விடுவதுபோல் விம்மிப்பொருமியது. மோகனசுந்தரத்தை நினைத்துப் பார்க்கவே அவள் மிகவும் அருவருப்படைந்தாள். அந்த அருவருப்பு உணர்ச்சி வளர, வளர, அவள் மனம் அவளையறியாமலே விவேகானந்தனின் பக்கம் அநுதாபத்தோடு சாய்ந்து சென்றது.

அவள் அவனை எத்தனை முறை எடுத்தெறிந்து பேசி அலட்சியப்படுத்தியிருக்கிறாள்! நேரிடையாகவும் மறைமுகவும்கூட அவனை அவமானப்படுத்தியிருக்கிறாள். இவ்வளவையும் அவன் பொறுமையோடு சகித்துக் கொள்கிறானே. அவளால் அவன் தன் வீட்டைவிட்டு வெளியேறிக் கஷ்டப்பட நேர்ந்தும் அவளை வெறுத்தோ, அவமதித்தோ ஒரு வார்த்தையும் சொன்னதில்லையே! நேற்று முன்தினம் பரங்கிமலையில் மோகனசுந்தரத்துடன் அவளைப் பார்த்த பின்னும் அவள்மீது அவன் எவ்விதச் சந்தேகமும் கொள்ளவில்லையே! அப்படிச் சந்தேகப்பட்டிருந்தால் அன்றிரவு சிவப்பிரகாசத்திடம் மறுபடியும் தன் விருப்பத்தை வெளியிட்டிருப்பானா? அன்றும் அவள் அவனை மணக்க மறுத்ததை அறிந்து சிறிதும் மனம் கோணாமல் அமைதியாக வெளியேறினானே! இதையெல்லாம் மறந்தாலும், நேற்றிரவு எதிர்பாராதவிதமாக அவளை அவன் வீட்டில் சந்தித்தபோது நடந்துகொண்ட முறையை மறக்க முடியுமா? அந்த நிலையில் வேறொருவனாயிருந்தால் என்னென்ன கேள்விகள் கேட்டிருப்பான்? எப்படியெல்லாம் மடக்கிப் பிடிக்க முயன்றிருப்பான்? அதிலும் அவனால் தீவிரமாகக் காதலிக்கப்பட்ட அவள் அவனுடைய கண்ணெதிரே வேறொருவனுக்காகக் காத்திருந்து அவனிடம் ஓடியதைக் காண நேரிட்டால் மிருகத்தை விடக் கொடியவனாக மாறிவிடுவானே? ஆனால், விவேகானந்தனோ அந்த நிலையிலும் தன் பொறுமையை இழக்காமல், பத்திரமாக அவள் வீடு போய்ச் சேர டாக்ஸியை அனுப்பிவைத்தானே! அவன் மட்டும் அந்தச் சமயம் அந்த டாக்ஸியை அவளுக்காக அனுப்பி யிராவிட்டால், குடிமயக்கத்தில் பிரக்ஞையற்றுக் கிடந்த மோகனசுந்தரத்தை அவனுடைய வீட்டில்கொண்டு போய் அவளால் சேர்த்திருக்க முடியுமா? இப்படியெல்லாம் அவன் நடந்து கொள்ள எவ்வளவு உயர்ந்த பண்பாடும், ஒழுக்கமும் உள்ளவனாய் இருக்க வேண்டும்!....

"தேவகி, உள்ளே வரலாமா?"

ஆற்றுப் படுகையோரம் சரசரவென ஓடும் நாகைப் பாம்பு போல் எங்கோ நழுவிப் போய்க்கொண்டிருந்த தேவகியின் மனம் இந்தக் குரல் கேட்டு அதிர்ச்சியுற்று அப்படியே ஸ்தம்பித்து நின்றது. அவள் திரும்பிப் பார்த்தாள்.

சூதறியா சின்னஞ் சிறு குழந்தை போல் மந்தகாசப் புன்முறுவலுடன் தயங்கித் தயங்கி உள்ளே வந்து கொண்டிருந்தான் மோகனசுந்தரம்.

சீரியைக் கண்டு சீறிப் படமெடுக்கும் நாகமெனச் சினந்து கனன்றது தேவகியின் மனம். அவனைக் கொத்திப் பிடுங்குவது போல் ஒரு கணம் கூர்ந்து பார்த்து விட்டு வெடுக்கென்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

குற்றம் செய்த சிறு பிள்ளைபோலக் கழுத்தை மெல்லச் சொறிந்து கொண்டு மிரள மிரள விழித்தவாறு உள்ளேவந்த மோகனசுந்தரம் ஒரு நாற்காலியில் ஒடுங்கி உட்கார்ந்தான். அவன் முகம் வெளிறிச் சிறுத்திருந்தது. சற்றே இளைத்தும் காணப்பட்டான். தானாகவே கவிழ்ந்து சாய்ந்த தலையை நிமிர்த்தாமலே அவளைப் பீதியுடன் பார்க்க முயன்றான். இந்த ஒரு சில விநாடிகளில் அவன் உடல் வியர்வையால் தெப்பமாக நனைந்து விட்டது.

தேவகி அவனைத் திரும்பிப் பார்க்கவேயில்லை. எந்த நிமிஷமும் அவனை 'வெளியே போ' என்று சொல்லிவிடுவாள் போல் தோன்றியது. உதடுகள் உலர, முகம் சிவந்து உட்கார்ந்திருந்த அவள், தன் கூந்தல் பின்னலை வேகமாகப் பிரிப்பதும் பின்னுவதுமாக இருந்தாள். அந்த அறையில் மரண அமைதி குடிகொண்டது.

சிறிது நேரங் கழித்து ஓங்கிப் பெருமூச்சுவிட்ட மோகனசுந்தரம் கம்மிக் கரகரத்த குரலில், "தேவகி! என்னை மன்னித்து விடு! உன்னிடம் மன்னிப்புக் கோரத்தான் இப்போது இங்கு வந்தேன். தயவுசெய்து என்னை மன்னித்து விடு!" என்றான். அவன் கண்ணிமைகள் ஈரமாகித் தொங்கின.

தேவகி இப்போதும் அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. உலர்ந்து சாம்பல் பூத்த உதடுகளை மடித்துக் கடித்துத் தன் ஆத்திரத்தை அடக்க முயன்றாள். அன்றொரு நாள் கடற்கரையில் விவேகானந்

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப்படுத்துகிறது

வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது! "ஆல் மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது! கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண நன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!




CTPA-G-10 TAM.

ASP/LIC-SP-11 TAM

அடுக்கடுக்காக நாளும் வளர்கின்றது, ஆயுள் இன்சூரன்சு மாளிகை!
'லைப் இன்சூரன்சுக் கார்ப்பொரேஷன்' ஒரு ஐந்தாண்டுத் திட்டம் வகுத்து உள்ளது. 1960, திட்டத்தின் இரண்டாவது ஆண்டு ஆகும். 1963-ல் ரூ. 1000 கோடி வணிகம் பெறுவதே அதன் தலையாய குறிக்கோள். மீண்டுமோர் புதிய வணிகச்சாதனையை நிறுவி இரண்டாம் ஆண்டிலேயே

# ரூ. 496,00,00,000

வெற்றிப்பாதையிலே பாதிவழியினைக் கடந்து இருக்கின்றது அது. பழைய சாதனைகளை முறியடித்து, படிப்படியாக முன்னேற்றத்தை ஆண்டுதோறும் எல். ஐ. சி. பெற்று வருகின்றது.
1959-ல் பெற்ற ரூ. 428 கோடியினைவிட 1960-ல் அதிகமாக ரூ. 68 கோடி வணிகத்தை அடைந்து இருக்கின்றது.
ஆகவே 1956-லிருந்து எல். ஐ. சி. தனது புதிய வணிகத்தை ஏறத்தாழ இரண்டரை மடங்கு உயர்த்தி உள்ளது. ரூ. 200 கோடியிலிருந்து ரூ. 500 கோடியினை நெருங்கி இருக்கின்றது......ஐந்தாண்டுகளில்!
புள்ளிவிவரங்கள் புகல்வன பல. எல். ஐ. சி. நல்லதோர் நிறுவனம் என்று நாளும் பெருகும் நம்பிக்கைக்கும், நல்லெண்ணத்திற்கும் எடுத்துக்காட்டாக அவை திகழ்கின்றன. கொஞ்சுமின்பக் குடும்பத்திற்கு, குறைவில்லாத முழுப் பாதுகாப்புக் கொடுக்க வல்லது ஆயுள் இன்சூரன்சு ஒன்றே என்று ஒவ்வொரு குடும்பத் தலைவர் உள்ளத்திலும் ஒளிசிந்தும் நம்பிக்கை நட்சத்திரத்தை அவை சுட்டுகின்றன. அது மட்டுமா? தனது முதுமைக்காலத்திற்கும், தங்க மகனின் தரமான கல்விக்கும், தன் கண்போல் போற்றும் மகளின் மணத்திற்கும், தான் இருந்தாலும், இல்லாவிடினும் தகுந்த பாதுகாப்பும், நிதியுதவியும் அளிக்கக்கூடிய ஆயுள் இன்சூரன்சு அல்லால் பிறிதில்லை என்ற நம்பிக்கை உணர்வு அவர்தம் நெஞ்சத்தில் பொங்கிப் பெருகுவதை அவை காட்டுகின்றன.



**லைப் இன்சூரன்சு கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

1960-ல் ரூ. 496 கோடி

1959-ல் ரூ. 428 கோடி

1958-ல் ரூ. 345 கோடி

1957-ல் ரூ. 283 கோடி

1956-ல் ரூ. 200 கோடி

தன் மீது அவளுக்கு எத்தகைய வெறுப் புணர்ச்சி ஏற்பட்டதோ, அதேபோன்ற உணர்ச்சியால் இப்போது உள்ளம் பொசுங்கினான்.

“எனக்கு இங்கே எத்தகைய வர வேற்பு கிடைக்குமென்று எதிர்பார்த்து வந்தேனோ, அப்படியே நடந்து விட்டது. இது நியாயம்தான். என் தாயே என்னை மன்னிக்காதபோது மற்றவர்கள் மன் னிப்பார்கள் என்று நான் எதிர்பார்க்க முடியுமா?” - தணிந்த குரலில் இப்படி முணுமுணுத்த மோகனசுந்தரம் மீண் டும் தொடர்ந்து சொன்னான்: “ஏனோ தெரியவில்லை; என்னை எல்லாருமே வெறுக்கிறார்கள்! யாருமே என்னை நம்ப மறுக்கிறார்கள்!” - அவனுடைய கழுத்து நரம்புகள் விம்மிப் புடைத்தன. காய்ந்த உதடுகள் துடித்தன. கண்கள் சிவந்து இமைகள் பனித்தன. கலைந்த கேசத்தை இடக் கையால் கோதிவிட்டுத் தலையை அப்படியும் இப்படியுமாக அசைத்துக் கொண்டான்.

சட்டென்று திரும்பிய தேவகி அவனை எரித்து விடுவதுபோல் வெறித்துப் பார்த்தாள்.

மோகனசுந்தரம் அவள் பக்கம் திரும் பாமலே சலித்த குரலில் சொன்னான்: “ஆமாம்; அது எனக்கே தெரிகிறது. என்னுடைய நடத்தைகள் தவறானவை தான். அதற்காக வருந்தவும் செய் கிறேன். ஆனால், என்னை ஏன் அப்படித் தவறு செய்ய வைக்க வேண்டும்? நான் தவறு செய்யும்படியாக மற்றவர்கள் ஏன் என்னை வெறுக்க வேண்டும்?”

தேவகி திடுக்கிட்டாள். ‘இவன் என்ன சொல்கிறான்? யார்மீது குறைப்பட்டுப் பேசுகிறான்?’ அவளுக்கு ஒன்றும் புரிய வில்லை. ‘தான் மிகவும் புத்திசாலித் தனமாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு இப்படி ஏதோ வாயில் வந் ததை முட்டாள்தனமாக உளறுகிறானோ’ என்று எண்ணிய அவள் மேலும் வெறுப் படைந்தாள். இப்போது அவன் எதிரில் உட்காரக்கூட அவளுக்குப் பிடிக்கவில்லை.

“போகட்டும். என்னைப் புரிந்து கொள்ளாதவர்களை நானும் புரிந்து கொள்ளாமல் விட்டுவிட வேண்டியது தான்!” என்று விம்மும் குரலில் சொல் லிக் கொண்டே எழுந்த மோகனசுந்தரம் இடுப்பின்மேல் இரு கைகளையும் ஊன்றிக் கழுத்தைச் சாய்த்துக் கொண்டு அந்த அறையைச் சுற்றி வளைத்துப்பார்த்தான்.

அவன் புறப்படப் போகிறான் என்று தெரிந்ததுமே, தேவகியின் மனத்தில் ஏதோ ஒரு குறுகுறுப்புத் தோன்றியது.



“சினிமாவுக்கு ‘க்யூ’வில் போய் நிற்க அவசரப்பட்டோமே! இங்கே பார்! அந்த ‘க்யூ’வே நம்ம வீட்டுக்கு வந்தாச்சு!”

ஆனாலும் அவனை அவள் திரும்பிப் பார்க்கவில்லை.

“சரி; நான் ஏன் இங்கு வந்தேன்? மன்னிப்புக் கேட்டாயிற்று. மனத்துக்குச் சாந்திதான் கிடைக்கவில்லை. நன்றி சொல்லிக்கொண்டு போக வேண்டியது தான்” என்றவாறு மெள்ளத் திரும்பிய மோகனசுந்தரம், அங்கிருந்த ஒரு சிறிய மேஜையின்மேல் வைக்கப் பெற்றிருந்த அழகிய ரேடியோகிராம் பெட்டியைப் பார்த்துத் தயங்கி நின்றான். முகத்தைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்த தேவகியையும் அந்த ரேடியோகிரா மையும் மாறி மாறிப் பார்த்தான். இவ் வளவு நேரம் வெளுத்துச் சோர்ந்திருந்த அவன் முகம் இப்போது சற்றே மலர்ச்சி கண்டது. மெல்லப் புன்முறுவல் பூத்த வாறு அந்தச் சிறிய மேஜையை நோக்கி அமைதியாக நடந்தான்.

அவன் என்ன செய்யப் போகிறான் என்பதைக் காணவேண்டுமென்ற ஆவல் எழுந்தது தேவகிக்கு. ஆனாலும் அவள் மனத்தில் பொங்கிய வெறுப்புணர்ச்சி அந்த ஆவலை அமுக்கிவிடவே அவனைக் கடைக்கண்ணாலும் பார்க்க விரும்பாமல் கடுகடுத்த முகத்துடன் உட்கார்ந் திருந்தாள்.

ஒரு சில விநாடிகளுக்குப் பின் -

இதுவரை படமெடுத்துச் சீறி நிற்கும் நாகம்போல் உட்கார்ந்திருந்த தேவகி திடீரென்று ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்துத் திரும்பினாள். நீரில் நனைந்த நூல் கயிறு போல் அவளுடைய மென்னுடல் நெளிந்து வளைந்தது. வெண் சங்கு போன்று வெளுத்துச் சிறுத்திருந்த அவள் முகம் சிகை விரித்த செந்தாமரை மலர் போல் அழகேறி அலர்ந்தது. தன் இடது செவியை இடக்கரத்தால் மெல்ல வருடி விம்மியெழும் நெஞ்சகத்தை வலக்கரத்

தால் அழுத்திக் கொண்டு ஏதோ ஓர் இன்பக் கனவு கண்டு எழுபவனைப்போல் மெதுவாகத் தலை தூக்கி நிமிர்ந்தாள்.

'உள்ளமெனும் பொற்பாயில் ஒரு கோடி நல்முத்தைப் பரப்பி வைத்தே, கள்ளமிலா எண்ணக் கரங்களினால் ஒவ்வொன்றாய் எடுத்துக் கோத்தேன்...'—

பளபளக்கும் ரேடியோகிராமில், கருப்பு நிலாப் போல் சுழன்று கொண்டிருந்த ஓர் இசைத்தட்டிலிருந்து எழுந்த இந்தப் புல்லாங்குழல் கானம், அந்த அறையெங்கும் பரவி ரீங்காரமிட்டது. உணர்விழந்து உருகிக் கரைந்த நிலையிலே உட்கார்ந்திருந்த தேவகி மெள்ள எழுந்து அந்தச் சிறிய மேஜையை நோக்கி நடந்தாள். அங்கே, மேஜை விளிம்பின்மீது தன் இரு கைகளையும் மடித்துப் போட்டு அவற்றில் முகத்தைப் புதைத்தவாறு சாய்ந்து உட்கார்ந்திருந்தான் மோகனசுந்தரம். அவனருகில் நெருங்கி வந்த தேவகி வழுவழுப்பான அவன் முதுகில் தன் கதலித் தண்டு போன்ற முழங்கைகளை ஊன்றி, மெல்லக் குனிந்து இள நுங்கு போன்ற தன் மோவாயை அவன் கழுத்தில் பதிய வைத்துக் கொண்டு, கானாமிர்தத் தாழியாய்ச் சுழலும் அந்த இசைத் தட்டையே கண்ணிமைக்காமல் பார்க்கலானாள்!

## அத்தியாயம் முப்பது

குழல் கானம் ஓய்ந்தது.

இதுவரையில் தேன் துளிகள் சொட்டிக் கொண்டிருந்த செவியில் ஏதோ அடைப்பு ஏற்பட்ட உணர்ச்சி பெறவே அதிர்ச்சியுற்று நிமிர்ந்த தேவகி சரேலெனப் பின்னால் நகர்ந்து பரபரப்புடன் அங்குமிங்கும் விழித்துப் பார்த்தாள். சுழல் மாருதத்தில் சிக்குண்டு அலைக்கழியும் மலர்ச்செண்டு போல் அவள் உடல் நடுங்கித் துடித்தது. வெட்கமும் பயமும் குடியேறிய கண்ணிமைகள் நிலை கொள்ளாமல் படபடத்தன.

ஆனால், மோகனசுந்தரமோ இன்னமும் அந்த மேஜை விளிம்பின்மீது குப்புறச் சாய்ந்தே உட்கார்ந்திருந்தான். எவ்வித ஸ்பரிசத்தையும் உணராதவன் போல் துவண்டு சாய்ந்திருந்த அவன், குழல் கானம் ஓய்ந்த சிறிது நேரங் கழித்து மெள்ளத் தலை நிமிர்ந்தான். "அப்பாடா! இப்போதுதான் எனது குழம்பிய மனம் ஓரளவு தெளிவுபெற்றிருக்கிறது!....இந்தத் தெளிவை இங்கே பெற முடியுமென்று நேற்று எனக்குத் தெரிந்திருந்தால், அந்த ஏமாற்றுக்காரர்களின் பேச்சை நம்பி அவர்களுடன் போய் என் ஆத்மாவைக் கறைப்படுத்தியிருக்க மாட்டேன்! என்ன செய்வது? தவறாக நடந்து கொண்ட பிறகுதான் அது தவறு என்று என்னால் புரிந்து கொள்ள முடிகிறது! இதுவே என்னிடமுள்ள பெரிய பலஹீனமாகவும் இருக்கிறது!" என்று வருந்திக் கரையும் குரலில் கூறிக்கொண்டே எழுந்தவன் தேவகியைக் கூர்சத்துடன் பார்த்து, "உனக்கு மிகவும் சிரமம் கொடுத்து விட்டேன். இல்லையா தேவகி? தயவு செய்து என்னை மன்னித்து விடு! நான் வருகிறேன்" என்று கூறியவாறு அங்கிருந்து மெதுவாக நடந்தான்.

பனி படிந்த மலர் போல் முகத்தில் வியர்வை முத்துக்கள் அரும்ப வெலவெலத்து நின்றிருந்த தேவகி சட்டென்று முன்னே ஓடி அவனைத் தடுத்து நிறுத்துவதுபோல் வலக்கையை நீட்டி "எங்கே போகிறீர்கள்? சற்று இருங்கள்!" என்றாள் பயந்த குரலில்.

திகைத்து நின்ற மோகனசுந்தரம் அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவள் வெட்கத்தால் தலை குனிந்து நிற்பதைக் கண்டு அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. மெல்லச் சிரித்துக் கொண்டே, "என் அம்மா சொன்னது உண்மைதான்! தேவகி! நீ மிகவும் நல்லவள். எனக்கு உதவி செய்வதோடு அல்லாமல் என் தவறுகளை மன்னிக்கவும் செய்கிறாய். உனக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன்!" என்றான் பேதைமையான உணர்ச்சிக் குரலில்.

நாணத்தால் உடல் குறுகி ஒடுங்கி நின்ற தேவகி களுக்கென்று சிரித்துக் கொண்டே மின்னல் கொடிபோல் நெளிந்து சமையற்கட்டுக்கு ஓடினாள். சமையற்காரத் தானுப்பிள்ளை அங்கு இல்லை. அவர் எங்கோ வெளியே சென்றிருந்தார். ஐந்து நிமிஷத்தில் காப்பி தயாரித்து எடுத்துக் கொண்டு கூடத்தறைக்கு வந்தாள்.

சற்றுமுன் மகிழ்ச்சியுடன் காணப்பட்ட மோகனசுந்தரம் மீண்டும் ஏனோ முகம் வெளிறியவனாய் உட்கார்ந்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

"சாப்பிடுங்கள்; இது வெறும் காப்பிப் பானம்தான்!" என்று குறும்புக் குரலில் கூறிக் கொண்டே காப்பித் தம்ளரை அவன் எதிரில் வைத்து விட்டு ரேடியோப் பெட்டியின் அருகில் போய் அழகாக ஒருக்களித்து நின்றாள் தேவகி.

# நீங்கள்

# ஆஸ்துமா-வியாதியால்

# அவஸ்தைப்பட்டால்

## இதை அவசியம் படியுங்கள்

இபஸோன் மாத்திரைகள் இந்தியாவிலே திரும்பவும் கிடைக்கின்றன. ஆஸ்துமா, ப்ராங்கைடிஸ், ப்ராங்கைடிஸினால் ஏற்படும் ஜலதோஷம், மார்புச் சளி, நெஞ்சு காய்ச்சல், மற்றும் இது சம்பந்தப்பட்ட நோய்களினால் அவஸ்தைப்படுகிறவர்களுக்கு இபஸோன் மிகவும் உதவியளிக்கிறது. இபஸோன் எளிதில் உட்கொள்ளக்கூடியது. பயமின்றி உபயோகிக்கலாம். உடனடியாகச் சமனமூட்டி, நிச்சய பலனளிக்கிறது.

இபஸோன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள வைத்திய முறையின் அம்சங்களின் இயல்புகள் சுருக்கமாக கீழே குறிப்பிடப்பட்டுள்ளன:

1. சுவாசக் குழாய்களின் தசைநார்களுக்கு ஏற்படும் வலிப்புக்கு சமனமூட்ட ஒரு சக்தி வாய்ந்த தன்மை இபஸோனுக்கு உண்டு. சுவாசாசயங்களில் மூச்சு எளிதில் செல்லவும், வெளியில் வரவும் இது உதவி செய்கிறது. அது மாத்திரமல்ல; ஆஸ்துமாவினால் ஏற்படும் உக்கிரத்திற்கு ஆசுவாசமளிக்கிறது.

2. சுவாசக் குழாய்களிலும் மற்றும் மார்பு உறுப்புகளிலும் உள்ள கபத்தை இபஸோன் மிருதுவாக்கி, திரவமாக இருமலில் எளிதாக வெளியே தள்ளிவிடுகிறது.

3. சுவாசாசயத்திலுள்ள இரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பிற்கு இபஸோன் சமனமூட்டுகிறது.

4. இபஸோன் இருதயத்தின் கஷ்டங்களைக் குறைத்து, அதிகம் வேலை செய்யக்கூடிய அளவுக்கு சக்தியை அளிக்க உதவி செய்கிறது.

5. இபஸோன் ஆஸ்துமாவினால் நிச்சயமாக ஏற்படும் உக்கிரத்தைக் குறைத்து, எக்கத்தை நிவர்த்தி செய்து, மிருதுவாக நரம்புகளுக்கு சமனமளிக்கிறது. அது மட்டுமல்ல; ப்ராங்கைடிஸினால் ஏற்படும் அகோரமான இருமலைக்கூட சரிசெய்து விடுகிறது.

ஆஸ்துமா வெகு சீக்கிரம் உங்களைப் பீடிக்கிறது. ஆஸ்துமாவினால் நீங்கள் பீடிக்கப்படுவீர்கள் என சிறிய சந்தேகம் வந்தவுடன் ஒரு இபஸோன் மாத்திரையை உட்கொண்டு, அதிசீக்கிரத்திலே நிச்சயமாக நிவாரணமடையுங்கள்.

இபஸோனின் அரிய தன்மைகள், ஆஸ்துமாவினால் அவஸ்தைப்பட்டு இதை உபயோகித்து குணமடைந்தவர்களாலும், அதை சிபார்சு செய்யும் டாக்டர்களாலும் நிரூபிக்கப்பட்டுள்ளன.

வழக்கத்தை ஊட்டிவிடும் மருந்துகள் எதுவும் இபஸோனில் சேர்க்கப்படவில்லை.

இபஸோன் 15, 45, 100 மாத்திரைகள் கொண்ட வசதியான பாக்கட்டுகளில் எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கின்றன.




# EPHAZONE

இபஸோன் தயாரித்து, வினியோகிப்பவர்கள்:-

**ஜே. எல். மோரிஸன், சன் அன்டு ஜோன்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.**

பம்பாய் – கல்கத்தா – மதராஸ் – டில்லி.

சிந்தனையிலிருந்து விடுபட்ட மோகன் அவள் சொன்னதன் உட்பொருளை எப்படியோ புரிந்து கொண்டு, "அதை நீ இன்னும் மறக்கவில்லையா தேவகி? தயவு செய்து மறந்து விடு! இனிமேல் அப்படிப்பட்ட தவறுகளையெல்லாம் செய்ய மாட்டேன்!" என்று வெட்கம் செறிந்த பரிதாபக் குரலில் சொல்லிக் கொண்டே காப்பியை எடுத்துப் பருகினான்.

அவனுடைய இந்தப் பச்சாத்தாபப் பதிலைக் கேட்டு உள்ளம் உருகி விட்டாள் தேவகி.

"நீ வந்து சமாதானப்படுத்தினால் தான் என் அம்மாவின் கோபம் தீரும் போல் இருக்கிறது, தேவகி! காலையில் நான் பிரக்ஞை தெளிந்து எழுந்த போது அவள் என் முகத்தில் விழிக்கவே மாட்டேன் என்று ரொம்பவும் கூச்சல் போட்டாள். அப்புறம் தான் நேற்றிரவு நடந்த சம்பவங்கள் எனக்கு நினைவுக்கு வந்தன. நீ மட்டும் அச்சமயம் வந்து என்னை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்க்காதிருந்தால் என் கதி என்ன ஆகியிருக்கும்? அந்த மனச்சாட்சியற்ற முரடர்கள் என்னைக் கொன்றே போட்டு விட்டிருப்பார்கள்!" என்று படபடப்புடன் சொல்லித் தம்ளரைக் கீழே வைத்த மோகன் மீண்டும் தொடர்ந்து, "அவர்களைக் குறை சொல்லக் கூடாது! என்னுடைய நிலையைத் தவறாக அர்த்தம் செய்து கொண்ட அவர்கள், 'எங்கள் வீட்டுக்கு வந்தால் உங்கள் கவலையெல்லாம் தீர்ந்து விடும்' என்று சொன்னதை நான் புரிந்து கொள்ளாமல் அவர்களுடன் போய்விட்டேன்! பௌர்ணமி தினமான நேற்று என் வீட்டுக்குப் போனால் அப்போதிருந்த எனது புண்பட்ட மனநிலையிலே நிம்மதியாகப் புல்லாங்குழல் வாசிக்க முடியாது என்பதாலேயே அவர்கள் வீட்டுக்குப் போனேன்! பாவம், அவர்கள் ஏழைகள்; வயிற்றுப் பிழைப்புக்காக ஏதேதோ செய்யத் துணிந்தவர்கள். அதெல்லாம் அங்கு போன பிறகுதான் எனக்குத் தெரிந்தது. ஆனால் அவர்களிடமிருந்து மீண்டுவர முடியவில்லை. நூறு ரூபாய் பணம் கொடுத்து, என்னை நிம்மதியாக மாடியிலே விட்டு விடும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டேன். சரி என்றவர்கள், ஜன சந்தடி அடங்கியதும் என்னைப் பயமுறுத்தி, மேலும் பணம் பறிக்க முயன்றார்கள் வலுக்கட்டாயமாக எதையெதையோ குடிக்கப் பண்ணி, என்னிடமிருந்த தங்கச் சங்கிலி, வைரமோதிரம், ஐந்நூறு ரூபாய் ரொக்கம் எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். பாவம், ரொம்பவும் கஷ்ட



ஜீவனக்காரர்களாய் இருக்க வேண்டும். இதை நல்லதனமாகச் சொல்லிக் கேட்டிருந்தால் நானே அவற்றை அவர்களுக்குக் கொடுத்து விட்டிருப்பேன். பரவாயில்லை; இப்போது ஒருமாத காலத்துக்காவது அவர்கள் பசி இல்லாமல் சாப்பிடலாம் அதுவரையில் எனக்குத் திருப்திதான்!" என்றான் அமைதியாக.

தேவகியின் கண்கள் கலங்கின. சூதறியாத அவனது இளகிய உள்ளமும், தன்னையறியாமல் செய்த தவறயினும் அதற்காக அவன் வருந்தும் பண்பும் அவளுடைய மனத்தை வெகுவாக ஈர்த்து வியப்பை ஊட்டின. 'இப்படியும் ஒருவன் இருப்பானா?' என்று எண்ணி நெட்டுயிர்த்த அவள், சட்டென்று விவேகானந்தனை நினைத்துக் கொண்டாள். அன்றொரு நாள் கடற்கரையில் அவன் ஒரு பிச்சைக்காரச் சிறுவனின் தகரக் குவளையில் மண்ணை அள்ளிப் போட்டு விரட்டிய காட்சி அவளது நெஞ்சத் திரையில் நெருப்புச் சித்திரமாகத் தோன்றி மறைந்தது. 'அவனை நல்லவன் என்று நம்பவே கூடாது. என்னிடமும் என் தந்தையிடமும் அவன் நடந்து கொள்ளும் முறைகளைக் கண்டு ஏமாறவே கூடாது. அதெல்லாம் அவனுடைய இயற்கை குணப் போக்குகளுக்கு மாறான செயற்கைத்தன்மை வாய்ந்தவையாகவே இருக்கும். என் காதலைப் பெறுவதற்காக அப்படியெல்லாம் திட்டமிட்டு நடிப்பான். ஒழுக்கம், உயர்குணம் என்பதெல்லாம் உள்ளத்தை விளைநிலமாகக் கொண்டு வளரும் புஷ்பக் கொடிகள். ஈரமற்ற வெறும் பாறை போன்ற அறிவின்மேல் அவை வளர்ந்து மலரா. திட்டமிட்டுத் திட்டப் பெற்ற அறிவின் கட்டுப்பாடான முயற்சியால்

அவை வளர்ந்து நிற்பது போன்ற ஒரு பொய்யான தோற்றத்தைக் காட்டலாம் என்றாலும் எந்த நிமிஷமும் சாய்ந்து போகங்கிச் சூன்யமாகியே தீரும்' என்று அவள் தனக்குள்ளாகச் சொல்லி விவேகானந்தனின் நினைவைத் தன் மனத்திலிருந்து வழித்தெறிய முயன்றாள்.

"தேவகி! ஏன் பேசாமல் நிற்கிறாய்? நான் சொன்னவற்றை யெல்லாம் நீ நம்பவில்லையா?" என்று பரிதாபமாகக் கேட்டான் மோகனசுந்தரம்.

"ஆமாம்; நம்பவில்லைதான்!" என்று கூறி எழில் வழிய நகைத்தாள் தேவகி.

மோகனசுந்தரத்தின் முகம் வாடியது. அவன் மௌனமாகத் தலை குனிந்தான்.

"பின்னே என்னவாம்? முந்தாநாள் இரவு என்னிடம் நன்றாகத்தானே பேசிக் கொண்டிருந்து விட்டுப் போனீர்கள்? வீடு போய்ச் சேர்வதற்குள் அப்படியென்ன உங்களுக்கு மனக்கசப்பு வந்து விட்டது? அன்றிரவும், மறுநாளும் வீட்டின் நினைவே யின்றி ஊரெல்லாம் சுற்றிக் கொண்டிருக்கும்படியான அவசியம் என்ன நேர்ந்து விட்டது? அறிமுகமில்லாதவர்களின் உதவி கோரி நிம்மதி பெறவேண்டிய அளவுக்கு உங்கள் மனம் ஏன் புண்பட்டது?" என்று மளமளவென்று கேள்விகளை அடுக்கிவிட்டு ஒரு மையல் பார்வை பார்த்தாள் தேவகி.

மோகன் வறண்ட சிரிப்பு சிரித்தான். அவன் முகத்தில் மறுபடியும் கவலை மேகங்கள் திரண்டு சூழ்ந்தன. ஏதோ சொல்லத் தயங்குபவன் போல் அப்படியும் இப்படியுமாக அசைந்தான். பிறகு கண்ணிமைகள் படபடக்க நிமிர்ந்து, "உன்னால் எனக்கு ஓர் உதவி செய்ய முடியுமா?" என்று கம்மிக் கரையும் குரலில் கேட்டான்.

"உதவியா? என்ன உதவி?" என்று குறும்புத் தொனியில் கண்களைச் சிமிட்டிக் கேட்டாள் தேவகி.

"நீ முயன்றால் அதைச் செய்ய முடியும். மறுக்க மாட்டாயே?" என்று ஏக்கக் குரலில் வினவினான் மோகனசுந்தரம்.

"உங்களுக்காக நான் எதையும் செய்யத் தயாராக இருக்கிறேன்!" என்று பதிலளித்தாள் தேவகி.

"உண்மையாகவா தேவகி?"

"நிச்சயமாக நம்புங்கள்."

மோகனசுந்தரத்தின் முகம் மலர்ந்தது. அவன் உற்சாகமாக நிமிர்ந்து உட்கார்ந்து, "அதாவது, தேவகி! முந்தாநாள் இரவு நான் உன்னிடம் பேசிக் கொண்டிருந்து விட்டு அந்தச் சங்கீத சபாவுக்குச் செல்லப் புறப்பட்டேன் அல்லவா?...அப்போது...நான் சென்ற சாலை வழியே...எனக்கு முன்னால்...என் ஆருயிர்..." என்று சொல்லி ஒரு கணம் தயங்கியவன், அடுத்த வார்த்தையைக் கூற வாய் திறந்த அதேசமயம் அந்த வீட்டின் வாசலில் ஒரு கார் வந்து நிற்பதைக் கண்டு சட்டென்று பேச்சை நிறுத்தினான்.

மோகனசுந்தரம் திடீரென்று பேச்சை நிறுத்திவிட்டு வாசல்பக்கம் கவனத்தைச் செலுத்தவே, தேவகியின் கவனமும் கலைந்தது. அவள் பதற்றத்துடன் வெளியே பார்த்தாள். காரினுள்ளிருந்து வெகு வேகமாக இறங்கி உள்ளே வந்த சிவப்பிரகாசம், அங்கு தனக்குப் புதிய மனிதனாக உட்கார்ந்திருந்த மோகனசுந்தரத்தைப் பார்த்து ஒரு விநாடி திகைத்து நின்றார். அதைக் கண்டு அச்சத்துடன் எழுந்து நின்றான் மோகனசுந்தரம்.

"அப்பா, இவர்தானப்பா பிரபல புல்லாங்குழல் வித்வான் மோகனசுந்தரம் என்பவர்!" என்று மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொண்டே தன் தந்தை சிவப்பிரகாசத்தின் எதிரில் வேகமாக ஓடினாள் தேவகி.

சிவப்பிரகாசம் தம் மகளை உற்றுப் பார்த்து விட்டுச் சட்டென்று திரும்பி, டெலிபோன் இருக்கும் இடத்தை நோக்கி விரைந்து போய் வெடுக்கென்று ரிஸீவரை எடுத்து, வேகமாக எண்களைச் சுழற்றிக் கொண்டே, "இந்தாப்பா, வித்வான்! அதோ, அந்தக் காரிலிருந்து இறங்குகிறவர்களுக்குக் கொஞ்சம் போய் உதவி செய்!" என்றார் கட்டளையிடும் குரலில்.

"ஆகட்டும், சார்!" என்று பணிவுடன் சொன்ன மோகனசுந்தரம் வாசலுக்கு விரைந்தான்.

உள்ளே நின்றபடி வெளியே எட்டிப் பார்த்த தேவகி, உடல் அதிரத் திடுக்கிட்டு ஓரடி பின்நகர்ந்தாள்.

காரின் மறுபக்கக் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கிய விவேகானந்தன், வெள்ளைப் போர்வையால் முழுதும் போர்த்தப் பெற்ற பெண்ணின் சடலமொன்றைத் தூக்கித் தோளில் சாய்த்த வாறு தள்ளாடித் தள்ளாடி உள்ளே வந்து கொண்டிருந்தான். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, I. Sadasivam

அன்னையின் அன்புலகிலே பொன்னான பொருள்களே யன்றி வேறுண்டோ?

## ஆதரவுக்கு ஆதரவான அன்னைக்கு ஆதரவு: டால்டா

நம் வீடு, நம் இல்லம்... அங்கே அன்பு நமக்கு! நம் தாய், நம் அன்னை... அவளால் நல்வாழ்வு நமக்கு!.. நமக்கென்றே நல்ல நல்ல பொருள்களையே தேடித்தரும் அவளது கைராசியால்! நல்லுணவு நமக்கு... ஆதரவே உருவான அன்னை, அருமை தெரிந்து டால்டாவைத் தேர்ந்தெடுக்கும் கைராசியால்! தரத்திலுயர்ந்த தாவர எண்ணெய்களாலான டால்டா... வளரும் உடம்புக்குத் தேவைப்படும் வைட்டமின்கள் அடங்கிய டால்டா... தூய்மையிலும் மென்மையிலும் சிறந்த டால்டா... உன்னதமான அறுசுவை உணவு சமைக்க உறுதுணையான டால்டா... உகந்ததன்றோ நம்மவர்க்கு...




## டால்டா வனஸ்பதி: அறுசுவைச் சமையலுக்கு உறுதுணை

DL. 67-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon